# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான் சிறந்த குணமும், பல வருடங்களாக நம் பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம் பெற்றிருக்கின்றன. இந்த நம்பிக்கையான தன் மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில் எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75 வருடங்களுக்கு மேலாக சிபார்சு செய்யப்பட்ட உலகமறிந்த தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம்பெற்ற தயாரிப்பாளர்கள் :

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

பிலவ மாசி 21

# கல்கி

மார்ச்சு 4, 1962



## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



புகையிலையின் உற்பத்தி, உபயோகம், ஏற்றுமதி இவைகளில் அமெரிக்க ஐக்கிய நாடுகளும், சீனாவும் இந்தியாவுமே தலைமை வகிக்கின்றன. இன்று உலகிலேயே புகையிலை விளைச்சலில் அமெரிக்காவுக்கும் சீனாவுக்கும் அடுத்தபடியாக மூன்றாவது ஸ்தானம் பெற்றிருப்பது இந்தியா தான். பதப்படுத்தப்பட்ட வர்ஜீனியா புகையிலையின் ஏற்றுமதி 1959—ல் பிற நாட்டு நாணயச் செலாவணியாக 16 கோடி ரூபாய்க்குச் சற்று அதிகமாக இந்தியாவுக்குத் தேடித் தந்தது.

## புகையிலையின் வரலாறு... 7




# பனமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

Grecos' Advtg

GT.707 TM



மலர் 21 | தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 31

# தேர்தல் முடிவுகள்

**வா**க்குப் பெட்டிப் போரில் சுதந்திரக் கட்சி அடைந்து வரும் தோல்வியை ஒப்புக் கொள்ளுகிறோம்.

அதே சமயத்தில் காங்கிரஸும் தோல்வியடைந்து வருவதைப் பார்க்கிறோம். தி. மு. க. அநேக இடங்களில் காங்கிரஸை முறியடித்து வருகிறது.

காங்கிரஸ் வெற்றிபெற்ற தொகுதிகளிலும்கூட எதிர்க் கட்சிக்குக் கிடைத்த வாக்குகள் காங்கிரஸின் கணக்குக்குக் கிட்டவே இருப்பதைப் பார்க்கலாம். உதாரணமாக :

| | காங்கிரஸ் | தி. மு. க. |
|---|---|---|
| வேலூர் | 26739 | 26549 |
| வண்ணாரப் பேட்டை | 25732 | 24095 |
| சென்னை ஹார்பர் | 26330 | 23098 |
| மாதவரம் | 29896 | 29646 |
| உப்பிலியாபுரம் | 29435 | 29077 |
| நன்னிலம் | 26346 | 21519 |
| கந்தர்வக்கோட்டை | 24878 | 22061 |
| விருத்தாசலம் | 26990 | 25138 |
| உடுமலைப் பேட்டை | 29529 | 25514 |
| ஸ்ரீபெரும்பூதூர் | 33825 | 32588 |
| பொறையார் | 24112 | 21018 |
| சேலம் I | 43726 | 39838 |
| திருச்செங்கோடு | 24640 | 21050 |

ஜனங்கள் விழித்துக் கொண்டு விட்டார்கள். பணத்தின் பலமும் அதிகாரத்தி லிருப்பதனால் உண்டாகியிருக்கும் வசதிகளும் ஊழியர்களமைப்பும் எவ்வளவு நாட்களுக்குத் தாங்கும் ?

எவ்வாறாயினும் காங்கிரஸின் அஸ்தமனம் ஆரம்பித்து விட்டது. அஸ்த மனப் பிரகாசம் கொஞ்சம் அதிகமாகவே இருக்கும். அந்த வெளிச்சம் சீக்கிரமே அணைந்து விடும்.

அதற்குள் ஏழை ஜனங்களின் சீலம் எவ்வளவுக்குப் பாழ்படும் என்பதே பெரும் கவலையாக இருக்கிறது.

# ஆபத்தை மறைக்கிறார்கள்!

இந்தியா-சீனா எல்லையில் நம்முடைய பகுதியில் இருப்பதாகக் கருதப்படும் சில இடங்களில் ராணுவத்துக்குத் தேவையான பொருட்களை இந்திய சர்க்கார் விமான மூலம் இறக்கியிருக்கிறது. உடனே சீனா ஆவேசமாகக் கிளம்பி விட்டது. 'எங்களுடைய பிரதேசத்தில் ஏன் இந்திய சர்க்கார் 'சப்ளை' செய்கிறது? இது ஆக்கிரமிப்பு அல்லவா?' என்று அது கேட்டிருக்கிறது. இதைக் குறித்து நம்முடைய காங்கிரஸ் ஆட்சியினர் விநோதமான முறையில் தர்க்கம் செய்திருக்கிறார்கள். ''ஸ்ரீ கிருஷ்ணமேனனைத் தோல்வியுறச் செய்ய வேண்டும் என்பதற்காகவே சீனாக்காரர்கள் இப்படி ஒரு குற்றச்சாட்டு வெளியிட்டிருக்கிறார்கள். மேன்மேலும் இந்தியப் பகுதிகள் சீனாவுக்கு வசமாகி வருவதை மறைமுகமாக எடுத்துக் காட்டி ஸ்ரீ மேனனைக் கவிழ்க்கப் பார்க்கிறார்கள்'' என்று காங்கிரஸ் தலைவர்கள் வாதம் செய்கிறார்கள்.

இதைக் கேட்டு அழுவதா சிரிப்பதா என்றே புரியவில்லை. நம் அதிகாரத்துக்கு உட்பட்ட பிரதேசத்துக்கு என்றெண்ணி நாம் அனுப்பி வைக்கும் பொருட்கள் எதிரியிடம் சேருகின்றன, அதை அவர்கள் நம்முடைய அத்துமீறிய செயல் என்று கண்டிக்கிறார்களென்றால் உண்மையிலேயே சீனாவின் ஊடுருவல் பரவி வருகிறது என்றுதான் பொருள். அவ்வாறானால் ஸ்ரீ கிருஷ்ண மேனன் தேர்தலுக்காக அதை ஏன் மூடிமறைக்க வேண்டும்? பழைய சீன ஆக்கிரமிப்புக்களைக் காங்கிரஸ் சர்க்கார் ரகசியமாகக் காத்து வந்தது போதாதென்று இப்போது எதிர்த் தரப்பினரே அவற்றை வெளியிட்ட போதும்கூட அந்த ஆக்கிரமிப்பைப் பற்றி வெட்கம் கொள்ளாமல்-அதைத் தடுக்கவும் முனையாமல்-தகவல் தந்தவர்களுடைய நோக்கத்தை விளக்க முற்பட்டிருக்கும் விந்தையை என்னவென்பது?

# நேருஜியும் மதமும்

இன்று நாட்டை விழுங்கி ஏப்பம் விடப் பார்க்கும் சீனாவையோ, கம்யூனிஸத்தையோ எதிர்ப்பதற்குப் பதிலாகச் சுதந்திரக் கட்சியைத் தாக்கி வரும் ஜவாஹர்லால் நேரு அவர்களின் ஆத்திரத்துக்கு இலக்கான இன்னொன்று இந்து மதமாகும். புத்தி பூர்வமாகக் காரணம் காட்ட முடியாத பல நம்பிக்கைகள் எல்லா மதங்களிலுமே உண்டு. இவற்றைக் குறித்து ஒரு நாட்டின் பிரதம மந்திரி என்ன கருத்துக் கொண்டிருந்தாலும் அதைத் தம்முடனேயே வைத்துக்கொள்ள வேண்டும். ஆனால் தம்மை சர்வக்ஞராகக் கருதும் பாரதப் பிரதமர் பேசாமல் விட்ட துறை எதுவுமே கிடையாதே! எனவே இந்து மத நம்பிக்கைகள் சிலவற்றைப் பெரியார் உருமாறியது போல் பரிகசித்துப் பேசி வருகிறார் ஸ்ரீ நேரு அவர்கள். மற்ற சமயங்களைக் கேலி செய்து பேசினால் அம்மதத்தினர் கிளர்ந்து எழுவார்கள் என்பதால் இந்து சமயத்திலுள்ள சில நம்பிக்கைகளை மட்டும் மும்முரமாகத் தாக்கி வருகிறார்.

ஆனால் அந்தத் தாக்குதலும் கூட அவர் விரும்புவது போல 'விஞ்ஞான ரீதியிலோ', 'புத்தி பூர்வமாக'வோ அமையவில்லை என்பதற்கு வருந்துகிறோம்.

உதாரணமாக, 'அஷ்ட கிரஹச் சேர்க்கை என்னை என்ன செய்துவிட்டது? இதற்கு ஏன் ஏராளமாகப் பொருளைச் செலவிட்டு, யாக, யக்ஞம் செய்தீர்கள்?' என்கிறார் நேருஜி. இதற்கு மத நம்பிக்கை உள்ளவர்கள் 'நாங்கள் யாக யக்ஞம் செய்ததால்தான் உங்களுக்கு ஒரு தீங்கும் நேராதிருந்தது' என்று விடையளிக்கக் கூடுமல்லவா? 'ஆஹுதிகளில் இவ்வளவு நெய்யை வீணாக்கி விட்டீர்களே' என்று கோபாவேசம் கொள்கிறார் பிரதமர். வருஷத்தில் பாதி நாட்கள் நடைபெறும் மாபெரும் அரசாங்க விருந்துகளில் வீணாகும் உணவுப் பண்டங்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இது மிகவும் அற்பமான விஷயமே! மேலும் அரசாங்க விருந்துகளுக்காகச் செய்யும் செலவைப் போல் யாகங்களுக்குப் பொது மக்களின் வரிப் பணத்தைச் செலவிடவில்லை. பிரதமர் ஏன் தம் சக்தியையும், காலத்தையும் தமக்குத் தெரியாத, புரியாத, சம்பந்தமில்லாத விஷயங்களில் வீணாக்குகிறார் என்பதுதான் நமக்குப் புரியவில்லை.

'கோமாதா' குறித்த நேருஜியின் விமரிசனமும் நாட்டில் எவ்வளவோ பேர் உள்ளத்தைப் புண்படுத்தியிருக்கிறது. அவர் மத ஆசாரங்களை அநுஷ்டிக்காமல் போனால் அது சொந்த விஷயம் என்று விட்டு விடலாம். ஆனால் அநாதி காலமாக இந்துக்கள் போற்றி வரும் புனித தத்துவங்களைக் கிள்ளுக்கீரையாக எண்ணி அவர் எள்ளி நகையாடுவதைக் கண்டிக்காமல் இருப்பதற்கில்லை.

# தொழிலாளர் கவனிக்க!

சோஷலிஸம், கம்யூனிஸம் முதலிய சித்தாந்தங்கள் முக்கியமாகத் தொழிலாளிகளுக்கே நன்மை செய்பவை என்பதாக ஒரு பொதுக் கருத்து இருக்கிறதல்லவா? இது எவ்வளவு தவறானது என்பதைப் பிரிட்டிஷ் கயானாவைச் சேர்ந்த தொழிலாளர்கள் உணர்ந்து உலகுக்கு எடுத்துக் காட்டியிருக்கிறார்கள். கம்யூனிஸச் சார்புள்ள பிரிட்டிஷ் கயானாத் தலைவர் செட்டி ஜகன் கொண்டு வந்துள்ள 'சோஷலிஸ பட்ஜெட்'டை எதிர்த்து அங்கு தொழிலாளர்கள் புரட்சி செய்து வருகிறார்கள்.

சோஷலிஸம் அல்லது கம்யூனிஸம் நடைமுறைக்கு வந்து தொழில்கள் சர்க்கார் வசமானால் தொழிலாளர்கள் தங்களுடைய எஜமானர்களை எவ்விதத்திலும் எதிர்க்க இயலாது. தனியார் தொழிலில் முதலாளிகள் அநியாயம் செய்தால் சர்க்காரைக் கொண்டு அதனைத் திருத்தலாம். ஆனால் வாதியே நீதிபதியாகித் தீர்ப்புக் கூறுவது போல் அரசாங்கமே தொழில்களை எடுத்துக் கொண்டால் தொழிலாளர்கள் தங்கள் நலன்களையும் உரிமைகளையும் வலியுறுத்த இயலாது.

சர்க்கார் தான் நடத்தும் தொழில்கள் யாவும் தேசவாழ்வுக்கு அத்தியாவசியமானவை என்று கூறி, கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காகத் தொழிலாளர் எடுக்கும் வேலைநிறுத்தம் முதலிய நடவடிக்கைகளை அவர்கள் மேற்கொள்ள முடியாமல் செய்யும். தனியார் துறையிலுள்ள ஊழியர்களுக்கு உயர்ந்த சம்பள விகிதங்களையும் போனஸையும் நிர்ணயிக்கும் சர்க்கார் தன் கீழ் வேலை செய்பவர்களை எவ்வளவு தாழ் நிலையில் வைத்திருந்தாலும் ஊழியர்கள் எதிர் நடவடிக்கை எடுக்க முடியவில்லையல்லவா? மேலும் தனியார் துறையில் எழும் தொழில் தாவாக்களை நீதி பரிபாலன விசாரணைக்கு விடும் சர்க்கார் தங்கள் தொழிலாளர்கள் எந்தப் பிரச்னையையும் விசாரணைக்கு எடுத்துச் செல்ல முடியாதபடி தடை செய்வதும் நாம் கண்டு வருவதுதானே?

போபால் கனரக விசை ஆலையில் சர்க்காரின் அடக்கு முறையைக் கண்கூடாகப் பார்த்து வரும் பாட்டாளி மக்களின் கண்களை பிரிட்டிஷ் கயானா நிலவரம் மேலும் நன்றாகத் திறந்து வைக்குமென நம்புகிறோம்.

# என்ன சேதி?

### அமெரிக்க விண்வெளி வீரர்

ருஷியாவைச் சேர்ந்த ககாரின், டைடோவ் இவர்களைப் போலவே அமெரிக்காவைச் சேர்ந்த கர்னல் ஜான் கிளென் என்பவரும் வான வெளியில் பிரயாணம் செய்து, உலகைச் சுற்றி விட்டுத் திரும்பியிருக்கிறார். பற்பல தடங்கல்கள் இருந்தும், தாமே ஊர்தியின் இயந்திரத்தை இயக்க வேண்டிய நிலை ஏற்பட்டும் நெஞ்சுரம் குன்றாது இந்தப் பயணத்தை முடித்த கர்னல் கிளென்னைப் பாராட்டுகிறோம்.

இந்த விண்வெளி யாத்திரையை ஒட்டி குருஷ்சேவ் அவர்கள் கென்னடி அவர்களுக்கு இரு நாடுகளுமாகச் சேர்ந்து பிரபஞ்ச யாத்திரை ஆராய்ச்சிகளில் ஈடுபடலாம் என்று தெரிவித்திருப்பது மகிழ வேண்டிய விஷயமாகும். அமெரிக்க ஜனாதிபதியும் இதற்கு இணங்கக் கூடும் என்று தெரிகிறது. படைபலக் குறைப்பு மகாநாடு பற்றி ஐக்கிய மனோபாவம் ஏற்படாதிருப்பினும் இவ்விஷயத்திலாவது இரு வல்லரசுகளும் நெருங்கிவருவது மகிழ்ச்சிக்குரியதாகும். எங்கிருந்தும் எவ்விடத்துக்கும் ஏவுகணைகளை அனுப்ப ருஷியாவுக்கு மட்டுமே இயலும் என்ற நிலை இப்போது மாறிவிட்டதாலேயே இத்தகைய நல்ல அபிப்பிராயங்கள் உருவாகியிருக்கின்றன. உளவு பார்த்ததாக இரு நாடுகளிலும் கைது செய்து வைக்கப்பட்டிருந்த விமானிகள் விடுதலை பெற்றதை அடுத்து இந்தக் கூட்டுழைப்புக்கு அழைப்பு விடுக்கப்பட்டிருக்கிறது. இனியாவது பனிப் போர் படலம் மெல்ல மெல்ல நீங்க வேண்டுமெனப் பிரார்த்திக்கிறோம்.

### வகுப்புவாதத்துக்குத் தூபம்!

காஞ்சிபுரம் சட்டசபைத் தொகுதி தேர்தல் முடிவு எப்படியானபோதிலும் அங்கு போட்டியிட்ட திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் ஸ்ரீ ஸி. என். அண்ணாதுரை அவர்களைக் காங்கிரஸ்காரர்கள் தேர்தல் சமயத்தில் தாக்கிப்

பேரிய விதத்தைக் கண்டிக்காமல் இருக்க முடியவில்லை. ஸ்ரீ அண்ணாதுரை அவர்கள் வட பம்பாய் மக்கள் சபைக்கு ஸ்ரீ கிருபளானி அவர்களைத் தேர்ந்தெடுக்கவேண்டும் என்று அறிக்கை விட்டிருந்தாரல்லவா? இதை வைத்துக் கொண்டு காங்கிரஸ் தலைவர்கள் துவேஷப் பிரசாரத்தில் இறங்கியிருக்கிறார்கள்! 'ஸ்ரீ கிருஷ்ண மேனன் திராவிடர்; ஸ்ரீ கிருபளானி வடக்கத்திக்காரர். திராவிட நாடு கோரும் ஸ்ரீ அண்ணாதுரை அவர்கள் எப்படி ஸ்ரீ கிருபளானியை ஆதரிக்கலாம்?' என்று கேட்டு மக்கள் மனத்தைக் குழப்பியடித்திருக்கிறார்கள்.

'வகுப்புவாதம் செய்வது தவறு' என்று தேர்தல் பிரசார ஒப்பந்தத்தில் கையொப்பமிட்ட காங்கிரஸ், 'ஸ்ரீ அண்ணாதுரை வகுப்புவாதம் செய்யாதது தவறு' என்று கூறித் தானே வகுப்புவாதத்துக்குத் தூபம் போட்டிருக்கிறது! இந்திய அரசாட்சியைத் திராவிடர்கள் கைப்பற்ற வேண்டும் என்று தி. மு. க. வினர் ஒருபோதும் கூறியதில்லை என்பதை மறந்து பிரசாரம் செய்திருக்கிறது காங்கிரஸ்.

'தனித் திராவிட நாடு கோரும் அண்ணாதுரைக்கு வட பம்பாய்த் தேர்தலைப் பற்றி என்ன அக்கறை?' என்று இன்னொரு காங்கிரஸ் தலைவர் கேட்டிருக்கிறார். இவர் கூற்றுப்படி தி. மு. கழகத்தினர் லோக சபைத் தேர்தலில் வாக்கே போடக் கூடாது என்று கூட ஏற்படும். வேறு அரசியல் அமைப்புக்களை மனத்தில் கொண்டிருக்கக் கூடிய கட்சிகளும் இன்றைய நடைமுறைக்கு இசைந்து நடப்பதுதான் ஜனநாயகப் பண்பாகும் என்று அந்தக் கட்சிகளே உணர்ந்திருக்கின்றன; எனினும் ! காங்கிரஸ்காரர்களுக்கோ அந்த உணர்வை மதிக்கும் பண்பு கூட இல்லை!



வைத்தியத்துறையில் அரும்பணியாற்றிய டாக்டர் குருசாமி முதலியார் அவர்களின் உருவச்சிலை பிப்ரவரி 18ந் தேதி அன்று சென்னை பல்கலைக்கழக துணைவேந்தர் டாக்டர் ஏ. லக்ஷ்மணசுவாமி முதலியார் அவர்களால் சென்னை வைத்தியக் கல்லூரியில் திறந்து வைக்கப்பட்டது. இவ்விழாவுக்கு வந்து சிறப்பித்தவர்களைப் படத்தில் காணலாம்.

## இதுவா கருத்து சுதந்திரம்!

பத்திரிகைகளின் கருத்து சுதந்திரத்தையும், செய்திகளைத் தருவதில் பத்திரிகைகளுக்குள்ள சுதந்திரத்தையும் காத்துத் தரவேண்டியது பற்றிப் புது தில்லியில் ஓர் அகில உலக ஐ. நா. மகாநாடு நடந்தது. அதே சமயத்தில் பம்பாயில் ஒரு பிரபல ஆங்கில தினப் பத்திரிகை, ஒரு மராத்தி தினத்தாள் இவற்றின் பல பிரதிகளைக் காங்கிரஸ்காரர்கள் கொளுத்தி ஆர்ப்பாட்டம் செய்தார்கள். மேற்படி பத்திரிகைகள் வட பம்பாய் தேர்தலில் ஸ்ரீ கிருஷ்ண மேனன் அவர்களை எதிர்த்தும் ஸ்ரீ கிருபளானி அவர்களை ஆதரித்தும் எழுதி வந்ததே இதற்குக் காரணம். பத்திரிகைகளின் கருத்துச் சுதந்திரத்தை ஆளும் கட்சியினர் எவ்வளவு அழகாக மதிக்கிறார்கள் பார்த்தீர்களா? இந்த அமளியில் யூனியன் உதவி உள்துறை மந்திரி ஸ்ரீமதி வயலெட் ஆல்வா அவர்களுக்கும் பங்கு உண்டு என்பதாக வதந்தி. நாட்டில் அமைதியையும் சட்டத்தையும் நிலைநாட்ட வேண்டிய உள்துறை மந்திரி சபையினரே இந்த அநாகரிகத்துக்கு உடந்தையாக இருந்தால் அதை விட அவமானகரமான, அராஜகமான விஷயம் ஏதுமில்லை. பத்திரிகைகள் ஆளும் கட்சிக்குச் சாதகமாக எழுதாத போதெல்லாம் அவைகளைத் தாக்கி வரும் பிரதமர் இத்தகைய செயல்களுக்கு ஊன்றுகோல் அளித்து வருவது வருந்தத்தக்கது.

# உங்கள் வீட்டில் இருக்கின்றதா?




ஸ்பென்ஸர்ஸ் கிரைப் ஸிரப்
குழந்தைகளின்
எல்லா வயிற்று
உபாதைகளுக்கும்.




ஸி. ஏ. க்யூ
சீதளம், ஜலதோஷம், வலிகள்
மற்றும் ஜுரங்களுக்கு.



எக்ஸ்-மா
படை, வண்ணாரப்புண் மற்றும்
எல்லா சரும கோளாறுகளுக்கும்.

## ஸ்பென்ஸர் & கம்பெனி லிட்.

ரசாயன மருந்து தயாரிப்பாளர்கள்
1/153 மவுண்டு ரோடு, சென்னை-2. இந்தியா

# இறைவனுக்கு உகந்த இரவு

ஊழிக்காலம்.

அண்டசராசரங்களில் உள்ள உயிரினங்களுக்கும் ஜடப் பொருள்களுக்கும் அழிவு நெருங்குகிறது.

வலி கொண்ட வாயு தேவன் விருட்சங்களையெல்லாம் வேரோடு வீழ்த்துகிறான். அவனது திருவிளையாடல்களுக்குத் தப்பிய இடங்களில் அக்கினி பகவான் தன் கை வரிசைகளைக் காட்டுகிறான். அவனுக்கு உரமும் உக்கிரமும் ஊட்டி நாச வேலையில் உழைக்கிறான் வாயு. இருவருக்கும் மிஞ்சிய இடங்களில் வருணன் தன் சக்தி முழுவதையும் பிரயோகிக்கிறான். அண்ட சராசரங்கள் எல்லாம் இருந்த இடம் தெரியாமல் சிதறிப் போகின்றன.

மாநதிகளும் கடல்களும் பொங்கி எழுந்து பாய்கின்றன. மாமலைகள் எல்லாம் தவிடு பொடியாகின்றன.

நதிகளும், கடல்களும் சென்ற திசை தெரியாது மறைகின்றன. மலைகளும், காடுகளும், சமவெளிகளும் எதுவுமே எங்குமே இல்லாது போய் விடுகின்றன. வாயு, அக்கினி, வருணன் முதலிய தேவர்களும் இனி கிடையாது. மற்ற ஜீவராசிகளுக்குக் கேட்கவா வேண்டும்?

அதுதான் பிரளய காலம். அழிவு தவிர வேறு பேச்சே இல்லாத நிலை.

அழிவுதானா அது? அகில புவனங்களாகவும் பரந்து விரிந்து காணும் இந்தத் தோற்றம் அழியக் கூடும். ஆனால் தனது சக்தியை இப்படி அகிலபுவனங்களாகவும் பரப்பிய மெய்ப் பொருள் எப்படி அழியக்கூடும்? இறவா நிலை அளிக்கும் ஆர் அமுதம் மாய்வது உண்டா?

அந்த அமுதமாகிய சக்தி இந்த அழிவின்போது யோகத்தில் ஆழ்ந்திருந்தாள்.

பிரம்மாண்டங்களெல்லாம் அப்போது அவளது இதய கமலத்தில்தான் லயமாகியிருந்தன. இசைக்கு என்றே ஒரு லயம் இருப்பது போல் இசையே உருவான அன்னையுடன் இசைந்து லயமாகி உலகமெல்லாம் ஒடுங்கியிருந்தன. காலம் காலமாக பக்தி செய்தவர்களும், யுகயுகாந்திரமாக நிஷ்டை புரிந்தவர்களுமே பெறக்கூடிய பரம சாந்தமான நிலையை உலக முழுவதற்கும் தன் அருட்பான்மையினால் இறைவன் அளிக்கும் அந்த நிலையை அழிவென்று எப்படிச் சொல்ல முடியும்?

இதய கமலத்துக்குள் தன் உயிராகிய ஈசனின் ஒளியைத் தேக்கி ஒன்றி இருந்த தேவி சமாதி நிலையிலிருந்து விலகினாள். அப்போது, குவிந்



இருக்கும் கமல மொட்டைச் சூரியன் மலர்த்துவது போல் அந்தத் திவ்விய ஒளி அன்னையின் இதய மலரை மடலவிழச் செய்தது!

அவ்வளவுதான்! உள்ளுக்குள்ளேயே விம்மிக் கொண்டிருந்த வண்ண விசித்திரமும், மணமும், மாதுரியமும் வெளியே பரவின. மீண்டும் வானமும் காற்றும், தீயும், நீரும், மண்ணும் தோன்றின. உயிரினங்களும் தோன்றி விட்டன.

ஊழிக் காலத்தில் ஈசுவரனின் கருணை காரணமாக ஆட்ட பாட்ட மெல்லாம் ஓய்ந்து சாந்தநிலை எய்தியிருந்தவர்களெல்லாம் மீண்டும் பிறப்பெடுத்தார்கள்.

உலகம் மீண்டும் உருவான அந்த இரவுதான் சிவராத்திரிப் புண்ணியநாள்.

'நான் இன்று உன்னை ஆராதித்து மீண்டும் இந்தச் சராசரங்களைப் பெற்றெடுத்தது போலவே இந்தச் சிவராத்திரியில் நான்கு யாமங்களிலும் வழிபடுபவர்களின் விருப்பங்களும் பலிதமாக அருள் புரிவாய்!' என்று மகேசனை வேண்டினாள் அன்னை.

'விருப்பங்களை நிறைவேற்றுவேன். அதோடு விருப்பங்களே எழாத உயர் நிலையையும் அருளுவேன்' என்றான் அத்தன்.

நம் எல்லோருக்குமாக தேவி ஈசுவரனிடம் பரிந்து பேசி வரம் வாங்கித் தந்த பாவனமான இரவு சிவராத்திரி.

* * *

எல்லா ராத்திரிகளையும் போன்ற இருட்போது அல்ல சிவராத்திரி. இந்த உலகத் தோற்றம் இருளில் மறைந்து அதற்கு ஆதாரமாக உள்ள மெய்ப்பொருள் மட்டும் உணர்வில் தோய்ந்து ஒளிரும் காலம் அது. 'எல்லாரும் விழித்துக் கொண்டிருக்கும் போது ஞானி உறங்குகிறான்; எல்லாரும் உறங்கும் போது ஞானி விழித்துக் கொண்டிருக்கிறான்' என்று கண்ணன் அருளினான் அல்லவா? அந்த வாக்கியத்தின் சத்தியத்தை நுகர வேண்டிய காலமே சிவராத்திரி.

ஃ ஃ ஃ

அம்பிகை ஆராதித்த நாள் மட்டும் அல்ல அது. அரியும், அயனும் அரனை வழிபட்ட தினமும் அதுதான்.

எல்லோருக்கும் தெரிந்த கதைதான் அது. திருமாலும், பிரம்மாவும் தங்களுக்குள் யார் பெரியவர் என்று பலப்பரீட்சை நடத்திய போது அவர்களால் அடிமுடி காண முடியாதபடி அக்கினி ஸ்தம்பமாகச் சிவபெருமான் நின்ற கதையே அது.

கடவுளருக்குள் உயர்வு தாழ்வு என்ற வேற்றுமையில்லை. எனினும் உலக மக்களுக்குப் பணிவை அறிவுறுத்துவதற்காக மிக உயர்ந்த நிலையிலுள்ள தெய்வங்களே இப்படித் தங்களுக்குள் லீலா நாடகங்கள் நடிப்பதுண்டு.

பிரம்மாவும், மகா விஷ்ணுவும் சிவபெருமானைக் கண்டு பூசனை புரிந்தது சிவராத்திரியில்தான். உருவம் அருவம் இரண்டுமல்லாத நெருப்புத் தூணைப் பரம்பொருள் வெளிப்பட்டதனையே லிங்கோத்பவ மூர்த்தியாக வழிபடுகிறோம்.



சிவபெருமானுடைய அருள் வெள்ளத்தின் திவலைகளாகவும், அவரது ஆக்கத்திறனின் சுடர்களாகவும் மதிக்கக்கூடிய ருத்திர கணங்கள் மத்தியார்ஜுன க்ஷேத்திரம் என்ற திருவிடைமருதூரில் பரமனை நான்கு யாமமும் வழிபட்ட இரவே சிவராத்திரி என்றும் ஒரு புராண வரலாறு கூறுகிறது.

ஃ ஃ ஃ

அன்று அம்பிகை ஈசுவரனை ஆராதித்ததைக் காணும் பேறு பெற்றவர் யாரும் இல்லை.

அன்று திருமால், அண்ணாமலையானை வழிபட்டதைக் கண்டவர்களும் யாரும் இல்லை.

இறைவனே தன்னுடைய அம்சபூதமான ருத்திர கணங்களால் பூஜை பெற்றதைக் கண்ணுறும் பாக்கியம் பெற்றவர்களும் யாரும் இல்லை.

ஆனால் இன்று தேவியும், திருமாலும், மகாதேவனும் ஒருருவில் சேர்ந்து சிவராத்திரியில் சிவ பூஜை செய்யும் காட்சியைக் காணும் புண்ணியம் நமக்குக் கிட்டியிருக்கிறது.

உள்ளத்தால் சக்தியில் ஒடுங்கிய சாக்தர்கள்; புறச் சின்னங்களால் சைவர்களாகக் காண்பவர்கள்; நாராயண, நாராயண என்று ஸ்மரித்தவாறே செயல்களில் ஈடுபடும் வைஷ்ணவர்கள் என்பதாக ஸ்ரீ சங்கராசாரிய பரம்பரையைச் சேர்ந்த தவசிரேஷ்டர்களைக் குறித்து ஒரு சுலோகமுண்டு. இன்று நாம் பிரத்தியட்சமாகக் காணும் காமகோடி பெரியவர்களோ மெய்ப்பொருளின் இந்த மூன்று வடிவங்களும் ஒன்றாக இணைந்தாற்போல் அன்னையின் அருளும், ஐயனின் ஞானமும், மாலவனைப் போல் உலகுய்விக்கும் செயலுமாகப் பொலிகிறார். அந்தப் பொலிவைச் சிவராத்திரியன்று இளையாத்தங்குடியில் ஈச பூஜையில் கண்டு, அவைப்



புண்ட நம் இதயத்தை இளைப்பாற்றிக் கொள்ளலாம். இருள் சூழ்ந்த நம் இதயத்தில் ஒளி விளக்கை ஏற்றி வைத்துக் கொள்ளலாம்.

ஒருவனே போற்றி!
ஒப்பில் அப்பனே போற்றி! வானோர்
குருவனே போற்றி! எங்கள்
கோமளக் கொழுந்து போற்றி!
வருகவென்று என்னை நின்பால்
வாங்கிட வேண்டும் போற்றி!
தருக நின்பாதம் போற்றி!
தமியனேன் தனிமை தீர்த்தே!

என்று போற்றலாம்!

வருக என்று நம்மை வாங்கியும் அவர் பாதம் பெறும் பேறு அடைய முடியாவிடில் இருந்த இடத்திலிருந்தவாறே சிவராத்திரி புண்ணியகாலத்தை இறைவனுக்கென்று அர்ப்பணிப்போம். வருடம் முழுவதும் போலன்றி அந்த ஓர் இரவையாவது மெய்யுணர்வில் செலவிடுவோம். அன்று கண் அயராது இருந்தால் அந்தக் கண்களுக்கே ஒரு தோழன் கிடைப்பான் என்கிறது ஒரு சுலோகம்.

பொருள் விளங்க வில்லையா? சிவராத்திரியில் ஒருமைப்பட்ட மனத்தோடு இறைவனைப் பணிந்தால் இரண்டு கண்களுக்கும் ஒரு நண்பனாக மூன்றாவது கண்ணும் பெற்றுச் சிவமெனும் செம்பொருளாகவே ஆகலாமாம்! —கணபதி



இந்திய அரசாங்கத்தினர் ஆண்டுதோறும் சான்றோர்களுக்கும், சமூக சேவையில் சிறந்தவர்களுக்கும், கலைஞர்களுக்கும், அறிஞர்களுக்கும் பல நல்ல விருதுகள் வழங்கிக் கௌரவிக்கிறார்கள் அல்லவா? இவ்வாண்டு சென்னை சர்வ கலாசாலையில் வடமொழித் துறைத் தலைவராக விளங்கும் டாக்டர் வே. ராகவனுக்குப் 'பத்மபூஷண்' விருது அளித்துக் கௌரவித்துள்ளனர்.

இதைப் பாராட்டுவதற்காகச் சென்னையைச் சேர்ந்த சம்ஸ்கிருதக் கல்லூரி, குப்புஸ்வாமி சாஸ்திரி ரிஸர்ச் இன்ஸ்டிட்யூட், சம்ஸ்கிருத அகாடமி, சம்ஸ்கிருத கல்விச் சங்கம் முதலிய சங்கங்கள், சென்னை ஷெரீப் திரு பி. சூரியநாராயணா அவர்கள் தலைமையில் ஒரு விழா கொண்டாடி, டாக்டர் ராகவனுக்குப் பொன்னாடை போர்த்திக் கௌரவித்தன. இவ்விருது டாக்டர் ராகவனுக்கு மட்டும் கிடைத்ததாக எண்ணக்கூடாது. ஸம்ஸ்கிருத மொழியின் வளர்ச்சிக்கே ஊக்களிக்கும் வகையில் இவ் விருது கிடைத்துள்ளது என்று கூறி வாழ்த்தி மகிழ்ந்தனர் பல அன்பர்கள். ஸம்ஸ்கிருத பாஷா பிரசாரணி சபையின் ஆண்டு விழாவின் பொழுது 'சம்ஸ்கிருத ரத்ன' என்ற பட்டத்தையும் அச் சபையினர் ராகவனுக்கு வழங்கிப் பாராட்டினர்.

டாக்டர் ராகவனுக்கு இவற்றைக் காட்டிலும் பெரு மகிழ்ச்சியளித்தவை காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் வழங்கிய சால்வையும், அம்பாள் பொற்காசுமாகும்.

# தாய்மைத் தவம்

சுபஸ்ரீ

மரகதம்மாளுக்குத் துக்கம் பொங்கி வந்தது. இந்தப் பதினைந்து ஆண்டுகளை, வாழும் அவஸ்தையாக அனுபவித்துக் கொண்டிருக்கிறாளே அதுகூடப் பெரிதாகத் தோன்றவில்லை. 'ஆகட்டும்' என்று ஆசை காட்டிவிட்டுத் தலைவி செண்பகத்தம்மாள் தன்னை அவமானப் படுத்திய நிகழ்ச்சி அவள் நெஞ்சிலே வேதனைத் தடத்தைப் பதித்து விட்டது. தேற்றமின்றிக் குமுறிக் குமுறி வரும் விசனத்துக்கு மாற்றம் காண அவளால் முடியவே இல்லை.

மரகதம் ஊனத்தைப் பிறவிச் சொத்தாக இந்த உலகத்துக்கு எடுத்து வரவில்லை. அம்மி மிதித்து, அருந்ததி பார்த்து, வேள்வித் தீயை வலம் வந்து மணத் தவிசு ஏறியபோது அவளது கால்கள் உறுதியாக இருந்தன. உத்தியோக உயர்வும், ஊதிய நீட்டமும் ஏற்படுகின்றன என்று அவளது கணவர் குருசாமி சிறுமலை அணைத் திட்ட வேலைக்குச் சென்ற போது, அவரது இன்ப துன்பத்தில் பங்குகொள்ளும் துணைவியாக மரகதம் சென்றாள். இரண்டு மாதங்கள் மலைக் காய்ச்சல் அவளைப் படாத பாடு படுத்தி அவளது காலின் இயக்கும் சக்தியைப் பறித்துக் கொண்டு போய் விட்டது. அதற்குப் பிறகு ஊன்றுகோலின் உதவி தேவையாகி விட்டது. ''இந்த மட்டும் நீ பிழைத்தாயே!'' என்றுதான் கணவரும் தேறுதல் கூறினார். ஆனால் உயிர் பிரியாமல் காலின் உறுதி பிரிந்த விளைவு அவளது இதயத்தில் ஊமையடியாக விழுந்து விட்டது. மெத்தையிடப்பட்ட ஊன்றுகோல் இந்தப் பதினைந்து ஆண்டுகளாக அவளது வலது கைக்கு ஆதரவாக நின்று, அவளது நடமாட்டத்துக்கு உதவி புரிந்து வந்திருக்கிறது. நித்தியமான தாலிச் சரட்டைப்போல் அதுவும் அவளது உறுப்பினுள் ஒன்றாகி விட்டது.

விஷப் பிணி விதித்து விட்ட இக்கட்டை அணிகூட நாளடைவில் அவளுக்குப் பழகிப் போய் விட்டது. ஆனால் இறைவன் அளிக்காமல் அளித்து விட்ட மற்றொரு குறை அவளது உள்ளத்தில் நீங்காத வடுவாகப் பதிந்து விட்டது. கால்தான் முடமாகி விட்டது. ஆனால் வயிறும் மலடாகி, வாழ்க்கையும் சூன்யமாகி விட வேண்டுமா? அதிகமாக நடமாட முடியாத ஜீவனாகி வீட்டுக்குள்ளேயே முடங்கிக் கிடக்க வேண்டிய நிலைமை ஏற்பட்ட பிறகு, தனது தனிமைத் துன்பத்தைப் போக்குவதற்கு ஓர் உயிர்ச் சிசுவைத் தோற்றுவிக்கக் கூடவா தனது உடலுக்கு இயலாமற் போய் விட்டது! தனது பூசைகளும், ஆசைப் பிரார்த்தனைகளும் ஆண்டவன் காதில் விழாமல் இருப்பதற்கு, தோடுடைய செவியனும் கேள்விப் புலத்தை இழந்து விட்டானா என்ன? அப்படியானால் அந்த இறைவனுக்கும் ஊனம் உண்டு என்றுதான் முடிவு செய்யத் தோன்றுகிறது.

மரகதத்தின் புறவாழ்க்கை பசுமையாகவே இருந்தது. குருசாமிக்குப் பொன்னும் பொருளும் அந்தஸ்தும் இணைந்தன. ஆயினும் அகத்திலே மலர்ச்சியை ஏற்படுத்த ஆடிச் சிரித்துவிட்டுப் பல வேடிக்கைகள் புரிந்திடும் பசுங்கிளிச் சிசு ஒன்று அவ்வீட்டில் இல்லையே! ''மயக்குறு மக்களை இல்லோர்க்குப் பயக்குறை இல்லைத் தம் வாழ்நாளே'' என்ற அறிவுடை நம்பியின் பாடலைத்தான் அடிக்கடி அத்தம்பதி நினைவுகூருவர்.

தனது ஊனும் உதிரமும் படைக்காத புத்திர செல்வத்தைச் சுவீகாரத்தால் பெற முடிவு செய்தாள் மரகதம்.

''வள்ளியூர் அநாதை ஆசிரமத்தில் உங்களுக்குத் தெரிந்தவர்கள் இருக்கிறார்கள் என்றீர்களே, எழுதுங்களேன். அங்கிருந்து ஒரு குழந்தையைத் தேர்ந்தெடுத்து நாம் வளர்க்கலாமா?'' என்று அவள் ஆதுரத்துடன் கேட்ட போது குருசாமியும் ஒப்புக்கொண்டார்.

''உங்களைப் போன்று அன்புடன் விரும்புகிறவர்களுக்கு எங்கள் ஸ்தாபனம் உதவி செய்ய இயலும். நீங்கள் நேரில் வரவும்'' என்று தலைவி செண்பகம் எழுதியிருந்த கடிதத்தை மரகதம் வாசித்தாள். அந்த நற்செய்தியை அடுத்த அறையிலிருந்த புருஷனிடம் சொல்ல விழைந்த மரகதம் தன்னை மறந்த சந்தோஷம்தன்னில் ஊன்றுகோல் இன்றியே தத்தித் தத்திச் சென்றாள். அவளது உற்சாகம் குருசாமியின் கண்களில் நீர் முட்டச் செய்தது.

காரிலிருந்து தம்பதி இறங்கினர். வருங்காலத் தாயின் வலது கையில் ஊன்றுகோலைக் கண்டதுமே தலைவியின் புருவங்கள் உயர்ந்தன.

''குழந்தையைச் சுவீகரிக்க விரும்புவது நீங்கள்தானா?'' என்று மீண்டும் கேட்டுத் தனது சந்தேகத்தைத் தெளிவித்துக் கொண்டாள். சிறிது யோசனைக்குப் பிறகு, ஸ்தாபனத்தின் சட்டதிட்டங்களை விவரித்த பின்னர், குழந்தைக்கு ஆள் அனுப்பினான்.

பாலன் வந்தான்; அவனோடு பால் வடியும் வதனமும், புதியவர்களைக் கண்டு விழிக்கும் இரு கண்களும் வந்தன. ஆரோக்கியமான உடல் அசைந்த போது...

இடது கால் பூட்ஸ் வலது காலைவிட உயரமாக இருந்தது. மரகதத்தின் பார்வை நிலைக்காமல் தவித்தது.

''பிறவியிலே அவனது இடது கால் அளவு குறைவாக அமைந்து விட்டது. இந்தப் பாத அணி மூலம் அதனை ஓரளவுக்கு நிவர்த்தி செய்து விட்டோம். எனினும் அதனுதவி அவனுக்கு நிரந்தரமாகத் தேவை.'' தலைவி சொல்லிக் கொண்டே போனாள். மரகதத்தின் கண்கள் நீரோடை ஆயின.

''தாயே! இவன்தானா நீங்கள் அனுமதிக்கும் சிறுவன்?''

''ஆமாம், அம்மணி! அவனது ஊனத்தை நீங்கள்தான் அனுதாபத்தோடு கவனித்து வேண்டியவற்றைச் செய்ய முடியும் என்பது எனது நம்பிக்கை. தவிர, உங்களுக்குள்ள குறைபாட்டைக் கருதும்போது அதிக விஷமம் செய்யாத இவனைப் போன்ற குழந்தையைத்தான் நீங்கள் உடற் சிரமம் இல்லாமல் வளர்க்க முடியும் என்றும் நான் எண்ணுகிறேன்.''

''அம்மா, என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். இந்தக் குழந்தையின் ஊனத்தை நம்மால் போக்க முடியாது. அந்த நிலையில் ஊனமுள்ள தாயாரை நீங்கள் அவனுக்கு அளிப்பானேன்? தன்னுடைய குறையின் சாயலை, புதிய சம்பந்தமான வளர்ப்புத் தாயிடம் கண்டு, தனது வாழ்க்கையைக் கோணல் நிறைந்ததாகக் கொள்ளச் செய்கிறீர்களா? வேண்டாம் அம்மா!'' உணர்ச்சி வெடிக்கும் இந்தச் சொற்களை உதிர்த்து விட்டு மரகதம் விம்மி அழுதாள்.

''அவ்வாறு நீங்கள் கருதும பட்சத்தில், நான் உங்களுக்கு உதவி செய்ய இயலாத நிலையிலிருப்பதற்கு மிகவும் வருந்துகிறேன்.''

நாற்காலியில் சாத்தியிருந்த மரகதத்தின் மர ஊன்றுகோல் நழுவிப் படாரென்று சிமெண்ட் தரையில் விழ்ந்தது. சிறுவன் அதிர்ந்து நின்றான்.

மரகதத்துக்கு இந்தச் சம்பவம் நினைவில் வந்து சுழன்ற போதெல்லாம் செண்பகம் தனது ஊனத்தைப் பழித்து விட்டதாகவே உணர்வு சொல்லிற்று. மூன்று மாதங்கள் ஓடி விட்டன.

''டவுனில் பொருட்காட்சி நடைபெறுகிறதாம். போய் வருவோமா?'' என்று அழைத்தார் குருசாமி.

''ஆமாம், எனது பிழைப்பே காட்சிப் பொருளாகப் போய்விட்டது. நான் எங்கும் வரவில்லை'' எனச் சிணுங்கினாள் மரகதம், படுத்த நிலையில் கிடந்த ஊன்றுகோலைப் பார்த்தவாறு.

''அதற்கில்லை மரகதம். புட்டிப்பால் நிறுவனம் ஒன்று 'ஆரோக்கியக் குழந்தைகள் பரிசுத் திட்டம்' வைத்திருந்தது அல்லவா? அதன் முடிவுத் தேர்தல் நடைபெற இருக்கிறது இன்று.....''

குழந்தைகள் என்ற சொல் மந்திரம் போல் வேலை செய்தது. மரகதம் புறப்பட்டு விட்டாள்.

எண்ணற்ற கடைகள்; வண்ண விளக்குகள்; வர்ண ஜாலங்கள்; வியாபார உலகத்தின் விளம்பரப் பேட்டை — பொருட்காட்சி மைதானம்.

புட்டிப்பால் ஸ்டாலின் பரிசுத் திட்டத்தில் கலந்து கொண்ட குழந்தைகள் வரிசையாக அணிவகுத்து நின்றன. நெற்பயிரின் பசும் நாற்றுக்களை வட்ட வடிவமாகக் கட்டி வைத்தது போல் அந்த இளமை தவழும் முகங்களைக் கண்ட போது மரகதத்துக்கு நெஞ்சு குறுகுறுத்தது; மெய் விதிர்விதிர்த்தது.

நடுவர்கள் தீர்ப்பு வழங்கினர்.

''முதல் பரிசு பெற்ற இவன் எங்கள் ஸ்தாபனப் பாலகன்'' என்று பெருமிதத்தோடு வந்து பேசிய பெண்மணியின் மீது கண் பதித்தாள், மரகதம். வந்தது செண்பகம்.

''மிக்க மகிழ்ச்சி. இங்கே வாடா ராஜா!'' என்று அந்தச் சிறுவனை அணைத்துக் கொண்டாள்.

''இப்படி ஒரு குழந்தை நமது வீட்டில் வளைய வருவதற்கு நான் தவம் செய்யவில்லையே!'' என்று கணவரிடம் துக்கத்துடன் கூறினாள். இளம் பரிதி போன்ற வளந்தரு தெய்வீக முகத்தை உளம்தனில் கண்டு உருகினார் குருசாமி.

ஃ ஃ ஃ

அரை மணிக்குப் பிறகு குடைராட்டினம் அருகே சென்று வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள் மரகதம். தூரத்தே நாலைந்து பாலகர்கள் சூழ,

செண்பகத்தம்மாள் யாரிடமோ பரிசுக் கோப்பையைக் காண்பித்தபடி உரையாடிக் கொண்டிருந்தாள்.

இராட்டினக் குதிரைகள் மீதெல்லாம் இதழ் விரிந்த மலர் போன்று சிரிப்பு அவிழும் சிறுவர் முகங்கள். சங்கு ஊதிற்று. மின் விசை கொண்டு இயங்கும் இராட்டினமும் தனது சுழற்சியைத் தொடங்கிற்று. சுற்றி நின்ற பெற்றோர்கள் பொங்கும் உவகையுடன் தங்கள் செல்வங்களின் ஆனந்த அனுபவத்தை இமைக்காது ரசித்துக் கொண்டிருந்தனர்.

மரகதம் மீண்டும் செண்பகத்திடம் பார்வையைத் திருப்பியபோது பரிசு பெற்ற பாலன் சண்முகத்தைக் காணவில்லை. இராட்டினத்தின் காந்தக் கவர்ச்சி அவனை ஈர்த்து விட்டது போலும்! சம்பாஷிக்கும் செண்பகத்தின் பிடியிலிருந்து நழுவி, இராட்டினத்தின் எல்லையில் பாதுகாப்பு வேலியான இரும்புக் கிராதியின் உள்ளாக நுழைந்து, சுழலும் வட்டத்தை நோக்கி முன்னேறிக் கொண்டிருந்த பாலனை, மரகதம் மட்டும் கவனித்தாள். இன்னும் அரை நிமிடமோ, கால்நிமிடமோ -தடுக்காவிடில் சுழலும் இராட்டினத்தின் படித்தட்டு சண்முகத்தைச் செதுக்கிக் கொண்டு சென்று, தூக்கி எறிந்திருக்கும்.

''சண்முகம்!'' என்ற கூவல் கேட்டது. மறுகணம் —

மரகதம் கைக்கட்டையை நெம்பிக் கொண்டு விசையாக முன்னேறினாள். இரையைக் கவ்வும் மிருகம் போன்று ஒரு பாய்ச்சல். ஊன்றுகோல் பின் தங்கி விழுந்தது. இரு கைகளாலும் — பாலனைப் பிடித்து இழுத்தாள். சண்முகம் அவள் காலடியில் உருண்டான். பாய்ந்த வேகத்தில் நிற்க முடியாமல், அவளது உடலின் முன்பாகம் சுழலும் இராட்டினத்துக்குக் கீழே சென்று விட்டது. இயக்குபவன் மின்சாரத் தொடர்பைத் துண்டித்தான்.

சுழற்சி நின்ற பிறகு, மரகதம் வெளியே எடுக்கப்பட்டாள், மயக்க நிலையில். முதுகெல்லாம் பலகைகள் சிராய்த்து, ரத்த வெள்ளம் பெருக்கெடுத்தது! பையனுக்குப் பயத்தின் அதிர்ச்சி மட்டும் இன்னும் நீங்கவில்லை.

ஃ ஃ ஃ

மருத்துவ விடுதிக் கட்டிலில் மயக்கம் தெளிந்த மரகதம் கேட்ட முதற் கேள்வி, ''சண்முகம் சுகமா?'' என்பதுதான்.

''உங்கள் புண்ணியத்திலே அவனுக்குக் குறைவில்லை. ஆனால் எத்



தகைய தியாகச் செயலைப் புரிந்து விட்டீர்கள் நீங்கள்!''

''நானா செய்தேன்? அரை மணிக்கு முன்பு ஆரோக்கியத்துக்காகப் பரிசு பெற்ற குழந்தைக்கு ஆபத்து வந்து விடுமோ என்று மனசு துணுக்குற்றது. என்னுள் ஏதோ பலம் வந்தது. அப்புறம் நான் நானாக இருக்கவில்லை. அது தெய்வத்தின் சாதனை!''

''தாய்மையின் சாதனை. தாய்தான் முதல் தெய்வம். உங்களைப் போய் ஊனம்னு என் நொண்டி மனம் எண்ணிற்றே! கைகால்களைக் கல்லுப் போல் வைத்துக் கொண்டு நாங்கள் எல்லாம் அசந்து மறந்து நிற்கும் போது நீங்கள் எப்படித் துணிச்சலுடன் உயிரைப் பணயம் வைத்து உயிரை மீட்டீர்கள்! அன்றைக்குத் திடமான குழந்தையை வளர்க்கும் உடல் வலு இல்லை என்று தவறாக எடை போட்டு உங்களை நோக அடித்தேன். என்னுடைய சிறுமை அம்மா. சண்முகம் நீங்கள் காப்பாற்றின உயிர். அவன் உங்கள் மகன்.....''

''நிசந்தானா, செண்பகம்!''

''உண்மைதான் மரகதம். உங்களை நாங்கள் நன்றாகப் புரிந்து கொள்ளவில்லை. தாய்மை வேட்கைக்குள்ள பலத்தை நேரிடையாகப் பார்த்தபிறகு தான் புரிந்தது. அதனுடைய மாபெரும் சக்திக்கு முன்பு தங்களுடைய ஊனம் ஒன்றுமே இல்லை. ஆனால் அதை நாங்கள் உணருவதற்காக எத்தகைய ரணகாயத்துக்கும் துன்பப் பரீட்சைக்கும் ஆளாகி விட்டீர்கள்!''

''அம்மா, குழந்தைப் பேறு அடையு முன்பே தாய்மார்கள் பத்து மாதம் சுமந்து எத்தனை கஷ்டத்தை அனுபவிக்கிறார்கள். பின்னே வரம் வேண்டும் நான் இந்த அளவாவது துன்பச்சுமை இல்லாமல் இன்பம் ஏற்க முடியுமா?'' மரகதத்தின் மார்பகம் விரிந்தது. ரத்த நாளங்கள் புடைத்தன.

''நாங்கள் செய்தது தாய்மைத் தவம். அது பலித்து விட்டதம்மா.''

செண்பகத்தம்மாள் கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

# கேட்டீர்களா சேதி?

''பின் தங்கிய வகுப்பினருக்குச் சர்க்கார் அளித்து வரும் சலுகைகள் இன்னும் கணிசமாக அதிகப்படுத்தப்பட வேண்டும். பின்தங்கிய வகுப்பினர்களின் நிலைமை இன்னும் வருந்தத்தக்க நிலையில்தான் இருக்கிறது'' என்று ஒரு மேடைப் பிரசங்கி ஆவேசத்துடன் கூறினார்.

''என்னுடைய மகன் இந்த வருஷப் பரீட்சையில் தேறாமல் வகுப்பில் பின்தங்கி விட்டான். அவனுக்கு ஏதாவது சலுகைகள் உண்டா?'' என்று கேட்கிறார் ஒரு தகப்பனார்.

ஃ ஃ ஃ

''ஓர் அமெரிக்க ஆஸ்பத்திரியில் குலுங்கும் படுக்கை அமைக்கப்பட்டிருக்கிறதாம்.''

அந்த ஆஸ்பத்திரியில் உள்ள நோயாளிகள் இனிமேல் மருந்தைக் குலுக்கிச் சாப்பிட வேண்டியதில்லை!

ஃ ஃ ஃ

''சாலையோர மரங்களைத் திருட்டுத்தனமாக யாராவது வெட்டினால் அதைச் சர்க்காருக்கு அறிவிக்கும் பட்சத்தில், தகுந்த சன்மானம் வழங்கப்படும்'' என்று அரசாங்க அதிகாரி ஒருவர் கூறினார்.

ரொம்பவும் நல்ல காரியம். ஆனால் சன்மானம் யாருக்கு வழங்கப்படும் என்பதை அறிவித்து விட்டால் நல்லது!

''பொதுஜனங்களுடைய சௌகரியத்துக்காக இஷ்டம்போல் பிரயாணம் செய்வதற்குள்ள டிக்கெட்டுகளை மீண்டும் அமுலுக்குக் கொண்டு வர முடியாது''-டில்லி சர்க்கார் ரயில்வே மந்திரி.

மந்திரிகள் இஷ்டம்போல் பிரயாணம் செய்வதற்கே ரயில்கள் போதாமல் இருக்கும்போது பொதுஜனங்களுடைய இஷ்டத்தை யார் கவனிக்கப் போகிறார்கள்?

ஃ ஃ ஃ

''இலங்கையைச் சேர்ந்த ஒரு குருட்டுப் பெண்ணுக்கும், யார்க்ஷயரைச் சேர்ந்த ஒரு குருட்டு வாலிபனுக்கும் காதல் ஏற்பட்டுச் சமீபத்தில் திருமணம் நடந்தது'' என்று செய்தி கூறுகிறது.

காதலுக்குக் கண் இல்லை என்பதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

ஃ ஃ ஃ

''இருதார மணத் தடைச் சட்டத்தை ஆட்சேபித்து மனு.''

''மதுவிலக்கை ஆட்சேபித்து மனு.''

''கம்யூனல் ஜி. ஓ. செல்லாது என்ற தீர்ப்பை ஆட்சேபித்து மனு.''

''வீட்டு வாடகைக் கண்ட்ரோலை ஆட்சேபித்து மனு—'' இவை சமீபத்தில் இரண்டொரு நாட்களில் வந்த செய்தித் தலைப்புகள்.

இவைதான் மனுதர்மம் போலும்!

— செய்தி சேகரன்

RC77

சிறுவர் உலகத்தில் எப்போதும்
நியூட்ரைன் என்பதே பேச்சு




நியூட்ரைன் கன்பெக்ஷனரி கம்பெனி
பிரைவேட் லிட்., சித்தூர், (ஆந்திரப் பிரதேசம்)

# மணிபல்லவம்

## 4. அகக்கண் திறந்தது



தன் தாய் தந்தை உற்றார் உறவினர் எல்லாரும் அழிந்தொழிந்து காலமாகி விட்டார்கள் என்று அருட்செல்வ முனிவர் கூறிய தாங்க முடியாத அந்தத் துக்கச் செய்திக்காகக் கதறி அழுவதா, அல்லது: 'நீ அழுவதை நான் விரும்பவில்லை. நீ வீரனாக எழுந்து நிற்க வேண்டும்' — என்று அவர் கேட்கும் வேண்டுகோளுக்கு இணங்கி நிற்பதா என்று புரியாமல் மருண்டான் இளங்குமரன். 'நெகிழ்ந்த உணர்ச்சிகளை எதிரெதிரே சந்திப்பதற்கு ஞானிகளாலும்கூட முடியாது' — எனக் கப்பலிலிருந்து இறங்கி வரும்போது வளநாடுடையார் கூறியிருந்த அநுபவம் நிறைந்த சொற்களை இப்போது மீண்டும் நினைக்கத் தோன்றியது அவனுக்கு. கண்களை இமையாமல் தன் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த அருட்செல்வ முனிவரை நோக்கிக் கூறலானான் இளங்குமரன்:—

''சுவாமீ! மதம் பிடித்த யானையைப் போல் என்னுடைய இந்த இரண்டு கைகளுக்கும் நான் எதிர்ப்பைத் தேடிக் கொண்டு இரிந்த காலத்தில் எந்தச் செய்தியை உங்களிடம் பலமுறை தூண்டித் தூண்டிக் கேட்டேனோ அதை அப்போது சொல்வதற்கு மறுத்தும், மறைத்தும் என்னை ஏமாற்றி விட்டு உணர்வுகளாலும், இலட்சியத்தாலும் நான் மாறிவிட்ட இந்தக் காலத்தில் இப்போது இப்படி அதைச் சொல்வதற்கு முன் வருகிறீர்களே?''—

அருட்செல்வரிடம் இப்படி இந்தக் கேள்வியைக் கேட்டபோது கண்ணும் மனமும் கலங்கிய நிலையில் இளங்குமரன் வேதனைப்படுவதை அருகில் நின்ற வளநாடுடையாரும், குலபதியும் கவனித்தார்கள். இளங்குமரனுக்கு ஏற்பட்ட சந்தேகத்தை அருட்செல்வ முனிவர் தம்முடைய மறுமொழியால் போக்கினார். அந்த மறுமொழியை அவர் கூறும்போது அடக்கம் நிறைந்த அவருடைய இயல்பையும் மீறிக் கொண்டு அவர் பேசும் சொற்களில் கணத்துக்குக் கணம் ஆவேசம் வளர்வது புலப்பட்டது. தம்முடைய சொற்களின் மூலம் அவன் மனத்தில் ஏதோ ஒரு கனலைப் பற்ற வைப்பதற்கு முயன்றார் அவர்.

''இளங்குமரா! நீ உணர்ச்சி வசப்பட்ட விடலைப் பிள்ளையாகத் திரிந்து கொண்டிருந்த காலத்தில் உன்னிடம் பல செய்திகளை நான் சொல்லாமல் மூடி மறைத்துக் கொண்டிருந்ததற்குக் காரணம் உண்டு. காவிரிப்பூம்பட்டினத்திலே நான் உன்னை வளர்த்து ஆளாக்கிய போது உன்னையும், என்னையும் அழித்து விடுவதற்கு ஒவ்வொரு கணமும் சூழ்ந்து கொண்டிருந்த பகைகளைப் பற்றி நீ அறிந்திருக்க மாட்டாய். அந்தக் காலத்தில் ஒற்றர்களைப் போல் உன்னையும், என்னையும் சுற்றித் திரிந்துகொண்டிருந்த பயங்கரமான மனிதர்களைப் பற்றியும் நீ அறிந்திருக்க மாட்டாய். அப்படிப்பட்ட சூழ்நிலையில் உன் உயிரையும் காப்பாற்றி வளர்த்துக் கொண்டு, என் உயிரையும் பகைவர்கள் பறித்துக் கொண்டு விடாமல் நான் வாழ்ந்த வாழ்க்கையை இப்போது நினைத்தாலும் எனக்கு மெய் சிலிர்க்கிறது. கடைசி கடைசியாக நான் எதற்குப் பயந்து கொண்டிருந்தேனோ அந்த விளைவே உன்னையும் என்னையும் மிக நெருக்கமாகச் சூழ்ந்தது. அப்போதுதான் நான் இந்தத் தந்திரத்தைச் செய்தேன். உன்

நா. பார்த்தசாரதி

எதிரிகளைப் பழி வாங்கி அவர்களிடமிருந்து நீ மீட்கவேண்டிய செல்வங்களை மீட்பதற்காக உன் உயிர் காப்பாற்றப்பட வேண்டும். உன்னுடைய குலப் பகைவர்கள் யார் என்பதைக் காலம் பார்த்து உனக்குச் சொல்லி உன்னைத் தூண்டுவதற்காக நானும் காப்பாற்றப்படவேண்டும். 'நாம் இரண்டு பேருமே அந்த நோக்கத்துக்காக உயிரைக்காத்துக் கொண்டு வாழ்கிறோம்' — என்று நம்மை அழிக்க விரும்புகிறவர்களுக்குத் தெரிவதும் உடனடியாக இருவருக்கும் கெடுதலைத் தரும். இப்படித் தீர்மானமாகச் சிந்தித்த பின்புதான் 'நான் சிறிது காலம் இறந்து போய்விட' முடிவு செய்தேன். இறப்பது என்றால் 'எல்லை கடந்து போவது'— என்றும் ஓர் அர்த்தம் உண்டு அல்லவா? அந்தப் பொய்ச் செய்தியை உலகத்துக்குப் பரப்பிவிட்டு நான் பூம்புகாரின் எல்லையைக் கடந்து இங்கே வந்தபோது வளநாடுடையாரிடம் முன்பு ஒப்படைத்து விட்டு வந்த கடமையை அவரும் இன்றைக்கு இங்கே உன்னை அழைத்து வந்ததன் மூலம் நிறைவேற்றி விட்டார். உன்னையும் என்னையும் காப்பாற்றிக் கொண்டு நான் சக்கரவாளக் கோட்டத்துத் தவச்சாலையில் வாழ்ந்தபோது வளநாடுடையாரும், ஆலமுற்றத்து நீலநாக மறவரும் பல வகையில் எனக்கு உதவியாயிருந்தார்கள். அப்படி அவர்கள் என்னிடம் அந்தரங்கமாகப் பழகியும் அவர்களிடம் கூடச் சில இரகசியங்களை நான் சொல்ல முடிந்ததில்லை. சூழ்நிலை அப்படி என் வாயைப்பேசவிடாமல் அடக்கியிருந்தது!

''குழந்தாய்! நீண்ட காலமாகத் திட்டமிடப்பட்ட காரியமானாலும் அந்தக் காரியத்தைத் தொடங்குவதற்கு முன் இருள்தீர எண்ணித் தொடங்க வேண்டும். உனக்கு ஆவல் வந்தபோது இந்தக் காரியத்தைச் செய்யக் காலம் வரவில்லை. இப்போது ஏற்ற காலம் வந்திருக்கிறது. ஆனால் உன் மனத்தில் மானமும், உணர்வுகளில் கொதிப்பும் வரவில்லை. தீக்கடையும் அரணிக்கோலில் கடைகிறவரை நெருப்பு ஒளிந்திருப்பதைப் போல க்ஷத்திரியனுடைய மனத்தில் மானம் நிறைந்திருக்க வேண்டும். உராய்ந்து பார்க்கும் போது தீக்கடை கோலிலிருந்து நெருப்புப் பிறப்பதைப் போலத்தான் பிறந்த குடிக்கு உற்ற துன்பங்களை உணர நேரும் போதே வீரனுடைய நினைவுகளில் சூடு பிறக்க வேண்டும். சூழ்நிலையிலும், உணர்வுகளிலும், எவ்வளவுதான் அமைதியடைந்திருந்தாலும் நீ உன்னுடைய உள்ளக் கனலை ஒருபோதும் அவிய விட்டுவிடக் கூடாது. தன்னுடைய பகைக்குலத்தின் கடைசி மூச்சுத் துடித்துக் கொண்டிருக்கிற வரை வீரனின் மனத்தில் கனல் நிறைந்திருக்க வேண்டும்...'' என்று கூறிக் கொண்டே வந்த முனிவரின் பேச்சில் இளங்குமரன் நடுவே குறுக்கிட்டான்.

''சுவாமி! உங்களுடைய பேச்சின் ஆவேசத்தில் நான் இடையே குறுக்கிடுவதற்காகத் தாங்கள் என்னைப் பொறுத்தருள வேண்டும். நானோ 'என் எண்ணங்களில் திரு நிறைய வேண்டும்' — என்று இடைவிடாமல் பாவனை செய்துகொண்டு அமைதியில் மூழ்க ஆசைப்படுகிறேன். நீங்களோ 'உன் மனத்தில் கனல் நிறைய வேண்டும்' — என்கிறீர்கள். மனத்தின் எல்லையில் அருளையும், சான்றாண்மையையும் நிறைத்துக் கொண்டு நான் கருணை மறவனாக வாழ ஆசைப்படுகிறேன். நீங்களோ கொடுமை மறவனாக என்னை வில்லும், வாளும் எடுத்துக் கொண்டு உங்கள் வழியில் எழுந்து நிற்கச் சொல்கிறீர்கள்.''—

''அப்படி எழுந்து நிற்க நீ கடமைப்பட்டிருக்கிறாய்! அதோ அந்த ஓவிய மாடத்தைப் பார். அந்த ஓவியங்களில் உயிரற்று வாழ்கிறவர்களுக்கும், உயிரோடு வாழ்கிற உனக்கும் என்ன வேறுபாடு? உன்னுடைய உடம்பில் இரத்தம் ஓடுகிறது. அது வீரக்குடியின் புகழ் பெற்ற குருதி. இன்று உன் குடும்பத்துக்கு நீ பயன்பட வேண்டிய காலமும் வந்து விட்டது.

பொருள்கருவி காலம் வினையிடனொ(டு)
ஐந்தும்
இருள்தீர எண்ணிச் செயல்

என்று செயலுக்கு இலக்கணம் கூறியிருக்கிறார்கள் நம் முன்னோர்கள். நம்மைச் சூழ்ந்திருந்த இருள் தீர்ந்து விட்டது. சில ஆண்டுகளுக்கு முன் சம்பாபதி வனத்து நாவல் மரத்தடியில் இந்திர விழாவின் முதல் நாள் இரவு உன் தாயை உனக்குக் காண்பிப்பதாக நான் கூறியிருந்தேனல்லவா? அதற்கு முன்பே இரண்டொரு இந்திர விழாக்களின் போதும் அப்படிக் கூறி உன்னை ஏமாற்றி ஏங்க வைத்தேன். அப்போதெல்லாம் நீ என் மேல் கோபப்பட்டிருப்பாய். ஆனால் உண்மை என்ன தெரியுமா? நீ வளர்ந்து பெரியவனாவதற்குப் பல ஆண்டுகளுக்கு முன்பே உன்னுடைய தந்தையும் தாயும் இந்த உலகத்தை விட்டுப் போய்விட்டார்கள். நீ பெரியவனான பின்பு உன்னிடம் சொல்வதற்காக என்னிடம் உன் தாய் கூறி விட்டுப் போன செய்தி ஒன்று உண்டு. அது வேறொன்றுமில்லை. உன் தந்தையும் தாயும், அழிந்துபோகக் காரணமாயிருந்தவர்களை நீ உன் கைகளால் பழி வாங்க வேண்டுமென்ற கட்டளை

தான் அது. அதை இவ்வளவு காலங் கடந்து உன்னிடம் சொல்வதற்காக நீ என்னைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். அந்தக் கொடுமை நிறைந்த செய்திகளைக் கேட்டு நீ ஏங்கி நலிந்து வளர்ச்சி குன்றலாகாதே என்பதற்காகச் சிறிது காலம் அவற்றை நீ அறிந்து விடாமல் மறைத்தேன். நீ வலிமையோடு உணர்ச்சி வசப்பட்டு நின்ற காலத்தில் அந்த உணர்ச்சி வேகத்திலேயே எல்லாத் திட்டமும் கெட்டுப்போகுமோ என்றும் சிறிது காலம் அவற்றை உன்னிடமிருந்து மறைத்தேன். அப்படி மறைத்ததெல்லாம் கூட உன்னுடைய நன்மைக்காகத்தான்.

கடைசியாக உன்னைச் சம்பாபதி வனத்துக்கு வரச் சொல்லி அங்கு உன் தாயைக் காண்பிப்பதாகக் கூறியிருந்தேனே. அன்று நான் உனக்குக் காட்ட நினைத்திருந்தது உன் தாயின் அருமையான ஓவியத்தையும், அவள் இறந்து போன இடத்தையும் தான். அவற்றை நீ பார்த்துவிட்டு உண்மையைப் புரிந்து கொண்டு ஆவேசமாயிருக்கும் சமயத்தில் இன்று உன்னுடைய உள்ளத்தில் நான் மூட்டுவதற்கு முயன்று கொண்டிருக்கிற இதே கனலை அன்றே மூட்டிவிட விரும்பியிருந்தேன். ஆனால் அன்றிரவில் நான் எதிர்பார்த்தபடி எதுவுமே நடக்கவில்லை. உன் தாயின் ஓவியம் ஒன்றும் அவள் சாவதற்கு முன்பு அணிந்திருந்த விலை வரம்பற்ற அணிகலன்கள் பலவும் நீ இன்ன குடியிலே இன்னாருக்கு மகளாகத் தோன்றியவள் என்பதை நினைவூட்டும் அடையாள மாலை ஒன்றும் பூம்புகாரில் ஓரிடத்தில் ஒரு கொடிய மனிதனுடைய பாதுகாப்பில் ஒளிக்கப்பட்டுக் கிடக்கின்றன. அவை தன்னிடத்தில்— ஒளிக்கப்பட்டுக் கிடப்பதை நான் ஒருவன் தெளிவாக அறிந்து வைத்திருக்கிறேன் என்பதும் அந்தக் கொடியவனுக்குத் தெரியும். உனக்கு நினைவு தெரிந்து 'நான் உன்னுடைய வளர்ப்புத் தந்தையே தவிர உன்னைப் பெற்ற தந்தையில்லை' - என்பதையும் அறிந்துகொண்ட பின் நீ உன் பெற்றோரைப் பற்றி என்னிடம் கேட்டபோதெல்லாம் நான் அந்தக் கொடியவனிடம் போய் இரகசியமாக அவனைச் சந்தித்து உன் தாயின் ஓவியத்தையும் பிற பொருள்களையும் என்னிடம் கொடுத்து விடுமாறு உன் சார்பாக மன்றாடியபோதெல்லாம் அவன் என் வேண்டுகோளுக்குச் சிறிதும் செவிசாய்க்கவில்லை. என்னை அலட்சியப் படுத்தினான். ஏளனம் செய்தான். பயமுறுத்தினான்.

இறுதி முறையாக நீயும் நானும் பிரிவதற்கு முந்திய இந்திர விழாவன்று முதல் நாள் காலையிலும் அந்தக்கொடியவனைச் சந்தித்து மன்றாடினேன். 'இன்று நடு இரவுக்கு மேல் சம்பாபதி வனத்து நாவல் மரத்தடியில் காத்திருந்தால் அவற்றை என் பணியாட்கள் உங்களிடம் கொண்டு வந்து சேர்த்து விடுவார்கள்' — என்று உறுதி கூறி அன்று என்னைத் திருப்பி அனுப்பியிருந்தான் அந்தக் கொடியவன். அன்றிரவு அவன் அனுப்பிய பணியாட்கள் செய்ய வந்த பணி என்ன தெரியுமா? சம்பாபதி வனத்துப் புதரில் வைத்து உன்னையும் என்னையும் கொன்றுவிட முயன்ற பணி தான். தெய்வ சித்தத்தால் அன்று நீயும் நானும் உயிர் தப்பினோம். அதன் பின்பு தான் நான் அதிகமான விழிப்பையும் கவனத்தையும் அடைந்தேன். என் மனத்தில் இடைவிடாமல் சிந்தித்து இப்படி மிகவும் தந்திரமாகத் திட்டமிட்டேன்.

வளநாடுடையாரின் இல்லத்திலிருந்து வெளியேறி நானே என்னுடைய தவச்சாலைக்குத் தீ வைத்து விட்டு நகரில் நான் இறந்து போனதாகப் பொய்ச் செய்தியைப் பரப்பிய பின் இந்தத் தீவுக்குப் புறப்பட்டு விடலாம் என்றும் அப்படிப் புறப்படுமுன் நீலநாகரிடமோ வளநாடுடையாரிடமோ மட்டும் உண்மையைக் கூறிக் காலம் வருகிற வரை அந்த உண்மையை அவர்கள் வெளியிடக் கூடாதென்று வாக்கும் வாங்கிக் கொண்டு விடவேண்டும் என்றும் திட்டமிட்டிருந்தேன். இந்த எண்ணத்தோடு நான் வளநாடுடையாரின் வீட்டிலிருந்து சொல்லாமல் கொள்ளாமல் இரகசியமாக வெளியேறிச் சக்கரவாளத்துக்குள் நுழைந்த போது வன்னிமன்றத்துக்குப் போகிற வழியில் ஒரு புதரருகே நமக்கு ஆகாதவர்களின் பேச்சுக்குரல் கேட்டு நின்று கவனித்தேன். முதல் நாள் இரவு சம்பாபதி வனத்து நாவல் மரத்தடியில் நம்மைக் கொன்று விட முயன்றவர்களே இந்திர விழாவின் இரண்டாம் நாளாகிய மறுநாளன்று இருள் மயங்கும் மாலையில் என் தவச்சாலைக்குத் தீ வைத்துவிடத் திட்டமிட்டுக் கொண்டிருப்பது தெரிந்தது. எதைச் செய்வதற்காக நான் போலியாய்த் திட்டமிட்டுக் கொண்டிருந்தேனோ அதை மெய்யாகவே செய்வதற்குத் திட்டமிடுகிறவர்களைப் பற்றி அறிந்தபின் எனக்கும் மகிழ்ச்சியாகவே இருந்தது. அவர்கள் வைக்கிற நெருப்பில் சிக்கி அழிந்தது போலத் தோன்றும்படி பொய் செய்து விட்டு நான் யாரும் அறியாமல் தப்பி வளநாடுடையாரைச் சந்தித்து அவரிடம் கூற வேண்டியதைக் கூறிய பின் இரவோடிரவாகப் புறப்பட்டு இந்தத் தீவுக்குப் பயணத்தைத் தொடங்கி விடுவ



## தொழில் முன்னேற்றமே தேசிய வளம்

எங்களது நிறுவனத்தில் பிக்செட் டிபாசிட்டுகளில் முதலீடு செய்து நிறையச் சம்பாதியுங்கள்.

இத்தகைய டெபாசிட்டுகளுக்கும் அதற்கான வட்டிக்கும் நிபந்தனை எதுவுமின்றித் தமிழக அரசு உறுதி அளிக்கிறது.

எங்கள் பிக்சட் டிபாசிட்டுகளின் பேரில் கீழ்க்கண்டவாறு வட்டிகள் அளிக்கிறோம்

| | | |
|---|---|---|
| 1 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு ... .. | 4¼ % |
| 2 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு --- --- | 4½ % |
| 3 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு --- ... | 4¾ % |
| 4 | வருடமும் அதற்கு மேலும் வருடம் 1க்கு .. --- | 5 % |
| 5 | வருடத்திலிருந்து 20 வருடம் வரை வருடம் 1க்கு -- | 5¼ % |

மற்ற விவரங்களுக்கு எழுதவும்: எஸ். ராஜரத்தினம், காரியதரிசி



## தி மதறாஸ் இண்டஸ்டிரியல் இன்வெஸ்ட்மெண்ட் கார்ப்பரேஷன் லிமிடெட்

38, ஒயிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, சென்னை-14

MIIC-4-9A

---

பண்டிட் P.S. ராமசர்மாவின்

# சக்திசஞ்சீவி

குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டிகளுக்கு.

எங்கள் மாதாந்திர சுற்றுப் பிரயாணம் வழக்கம்போல் நடைபெறுகிறது. தங்கும் இடம், நேரம் வழக்கம்போல். ஆயுர்வேத முறைப்படி எல்லா வியாதிகளுக்கும் சிகித்சை அளிக்கப்படும். விவரங்களுக்கு எமக்கு எழுதவும்:

### எங்கள் ஸ்பெஷல் மருந்துகள்

1. குமாரசஞ்சீவி - வாயு பவுடர். குழந்தைகளுக்குக் கட்டி வராமல் தடுக்கக் கூடியது.
2. குக்குட சஞ்சீவி - கக்குவான் இருமல் மருந்து.
3. மயூர சஞ்சீவி - மாந்த எண்ணெய்.
4. நாக சஞ்சீவி - பிரளி வாயு எண்ணெய்.
5. கண்டசக்தி ரஸாயனம் - தொண்டை சதை வளர்ச்சியை ஆபரேஷனில்லாமல் குணப்படுத்தக் கூடியது.

குறிப்பு: எங்கள் பெங்களூர் முகாம் பிரதி மாதம் 26-ம் தேதிக்கு மாற்றப்பட்டிருக்கிறது.

## ஸ்ரீ சக்தி விலாஸ வைத்யசாலை, கரூர்

போன்: 67

கிளை ஆபீஸ்கள்

1. 2332, V-th கிராஸ் ரோடு, மல்லேஸ்வரம், பெங்களூர் - 3
2. 94 டவுன் ஹைஸ்கூல் ரோடு, கும்பகோணம், தஞ்சை ஜில்லா

# விரிவான விலாசம்

# விரைவுடன் விநியோகம்

சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல்; இது மெச்சத்தக்கதுதான். ஆனால் கடிதத்தில் விலாசம் எழுதும்போது இதை அனுசரிப்பது சரியல்ல. விலாசத்தைக் குறுக்கி எழுதினால் கடிதம் அனாவசியமாக குறுக்கும் நெடுக்கும் அலைந்து திரிந்து, செல்லவேண்டிய இடத்திற்குத் தாமதித்தே செல்லும்.

கடிதம் சீக்கிரம் போய்ச் சேர முழு விலாசத்தை தெளிவாக எழுதுங்கள்



**உங்களுக்கு சிறந்த முறையில் சேவை செய்ய எங்களுக்கு உதவுங்கள்**

DA 61/718

தபால் தந்தி இலாகா

தென்று இருந்தேன். எல்லாம் அப்படியே நடந்தது. இருட்டியபின் நகர் அரவம் அடங்கி ஓய்கிற வரை கடுகாட்டுக் கோட்டத்தின் பாழடைந்த காளி கோயிலில் மறைந்திருந்து விட்டு அப்புறம் வளநாடுடையாரைச் சந்திக்கப் போகலாம்' என்று நான் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் தற்செயலாக வளநாடுடையார் நான் ஒளிந்திருந்த அந்த இடத்துக்கே வந்து என்னைச் சந்திக்கும்படி நேர்ந்து விட்டது. நானும் அவரும் பேச வேண்டியவற்றை யெல்லாம் எங்களுக்குள் பேசிக் கொண்டு விட்டோம்.

அன்று பின்னிரவு நேரத்தில் பூம்புகார்த் துறையில் நான் இந்தத் தீவுக்குக் கப்பலேறு முன்பு வளநாடுடையாரிடம் உன்னைப் பற்றிக் கூறிய சொற்கள் எனக்கு இன்னும் நன்றாக நினைவிருக்கின்றன. 'அந்தப் பிள்ளையின் தன்னம்பிக்கை அவனைக் காப்பாற்றும். தன்னைப் பிறர் வெற்றி கொள்ளாவிடாமல் தானே பிறரை வெற்றி கொள்ளும் மனம் அவனுக்கு இருக்கிறது. உலகத்தில் மிகப் பெரிய செல்வம் இப்படிப்பட்ட மனம்தான். இந்த மனம் உள்ளவர்கள் உடம்பினால் தோற்றுப் போனாலும் உள்ளத்தினால் வெற்றி பெறுவார்கள்' — என்று உன்னைப் பற்றிச் சொல்லியிருந்தேன். அன்று அப்படிச் சொல்லிய நானே இன்று நீ உடம்பினாலும்தோற்றுப் போகக்கூடாதென்று கருதுகிறேன். நான் நீண்ட காலமாக உனக்குக் காண்பிப்பதாகச் சொல்லியிருந்த உன் தாயின் உருவத்தை இன்று நீயே இந்த ஓவிய மாடத்தில் பார்த்து விட்டாய். ஒருவேளை இங்கு நீ பார்த்த ஓவியங்களில் எது உன்னுடைய தாயின் ஓவியம் என்று புரியாமலே அதை உன் கண்கள் பார்த்திருக்கலாம். என்னுடன் மறுபடியும் வா; இப்போதே உனக்கு மீண்டும் அந்தப் புண்ணிய வடிவைக் காண்பிக்கிறேன்'' என்று பூப்போல் மென்மையாயிருந்த அவன் கையைப் பற்றி அழைத்துக் கொண்டு போய் ஓவிய மாடத்திலே ஓரிடத்தில் அவனை நிறுத்தி வைத்தார்.

இத்தனை காலமாகத் தன்னைப் பெற்றவளைக் காண வேண்டுமென்று நிலைத்த ஏக்கமாக அடிமனத்தில் அழுந்திப் போயிருந்த இணையில்லாத பேருணர்வு இன்று இந்த ஒரே ஒரு கணத்தில் விசுவரூபமாய்ப் பெருகி மனத்தின் எல்லையெல்லாம் வியாபித்து நிற்க, இந்த ஒரு கணத்துக்காகவே இத்தனை நாளும் காத்துக் கொண்டிருந்ததைப் போலப் பரிவு பெருக இளங்குமரன் கண் மலர்ந்தான். எதிரே பார்த்தான். அந்தக் கணத்தை வாழ்ந்தான். அந்தக் கணத்துக்காகவே வாழ்ந்து கொண்டிருந்ததைப்போலவே வாழ்ந்திருந்தான். அது அவன் சற்று முன்பு பார்த்திருந்த ஓவியம்தான்.

எந்த ஓவியத்தின் கண்களிலிருந்து நவரசங்களுக்குப் பதில் கருணை ஒன்றே பெருகி அவன் உள் உணர்வுகளை அன்பு வெள்ளத்தில் நனைத்ததோ அதே ஓவியத்தை நோக்கி இப்போது அவனுடைய கண்களிலிருந்தும் கருணைபெருகிச் சுரந்து முதலில் பெருகிய கருணையோடு கலப்பதற்கு முந்துவது போல் தவித்தது. காலத்தின் இயக்கத்தையே தடுத்து நிறுத்தி ஓடாமற் செய்து விட்டாற் போன்ற நித்தியமான விநாடிகளாயிருந்தன அவை. யார் யாரோ தன்னிடமிருந்து பெற்றுக் கொண்டு மகிழத் தவித்த அன்பையெல்லாம் அப்படித் தவித்தவர்களுக்கு அளிக்காமல் இந்த ஒற்றைக் கணத்துக்காகவே தான் சேர்த்துக் கொண்டு வந்தது போல் தோன்றியது அவனுக்கு. அப்போது அவனுக்கு ஏற்பட்டிருந்த பெருமிதத்துக்கு ஓர் அளவே இல்லை.

'என்னுடைய தாய் தன் காலத்தில் தனது தலைமுறையிலேயே பேரழகு வாய்ந்தவளாக வாழ்ந்திருக்க வேண்டும். என்னுடைய தாயின் கண் பார்வையிலிருந்துதான் நவரசங்களுமே பிறந்ததாக யாரோ கவியுணர்வு உள்ளவர்கள் இந்த ஓவியத்தின் கீழுள்ள ஏட்டில் எழுதியிருக்கிறார்கள். இந்த எழில் வாய்ந்த தாயின் கைகளில் நான் ஏதோ ஒரு காலத்தில் என் பிஞ்சுக் கால்களை உதைத்துக் கொண்டு மெல்லத் தவழ்ந்திருக்கிறேன். இந்த எழில் வாய்ந்த தாயின் கண்கள் பார்த்துப் பார்த்துப் பெருமைப்படும்படியாக நான் இவளுக்குக் குழந்தையாயிருந்திருக்கிறேன்' என்று நினைத்துக் கொண்டே கண்களில் நீர் மல்க நின்ற அவனுக்குத் தன் தாயோடு தொடர்புடைய வேறொரு ஞாபகம் அப்போது வந்தது.

'நீங்கள் சான்றாண்மையாளராகப் புகழ் பெற்று நிற்பதை உங்கள் தாய் கண்டால் உங்களை ஈன்றபோதினும் பெருமகிழ்ச்சி அடைவாள்'—என்று திருநாங்கூர்ப் பூம்பொழிலில் ஏதோ ஒரு நாள் மாலை விசாகை கூறிய வார்த்தைகள் இந்தக் கணத்தில் அவனுக்கு நினைவு வந்தன. அத்தகைய பெரும் பாக்கியத்தைத் தன்னுடைய தாய்க்குத் தான் அளிக்க முடியாமல் போய் விட்டதை எண்ணிய போது மனத்தில் பொறுத்துக் கொள்ள முடியாத வேதனையை அடைந்தான் அவன்.

'உன் மனத்தின் வலிமையை வளர்த்துக் கொள்வதற்கு நீ என்ன கற்றிருக்கிறாய்?'—என்று பல நாட்களுக்கு முன்பு

இந்திர விகாரத்துத் துறவி தன்னைக் கேட்ட போது அவன் உள் மனத்திலிருந்து விழித்துப் பார்த்த அகக் கண் எதுவோ அந்த அகக் கண்ணிலேயே அவலம் கலங்கித் துயரம் மலிந்து கொண்டிருந்தது இப்போது.

''இவர் உன் தந்தை! இவரும் இப்போது இந்த உலகத்தில் இல்லை'' என்று அந்த ஓவியத்தில் இருந்த வீர ஆடவரைச் சுட்டிக் காண்பித்தார் அருட்செல்வ முனிவர். அந்த ஓவியத்தைத் தன் கண்களால் பார்த்த முதல் கணத்திலேயே அதிலுள்ள காதலர்களை உமையாகவும், சிவனாகவும் பக்தி பாவித்துக் கொண்டு வணங்க வேண்டும் போலத் தனக்குத் தோன்றிய உணர்வை மீண்டும் இப்போது இளங்குமரன் எண்ணினான். இப்படி எண்ணிய போது தன்னுடைய அகக்கண் இன்னும் நன்றாக மலர்ந்து அங்கே ஆன்மாவின் உணர்ச்சிக்கு மட்டுமே புலப்படக் கூடியதொரு நுக்கமயமான சுக விளைவு பெருகுவதை இளங்குமரன் அநுபவித்தான். அந்தப் பரிபூரணமான அநுபவத்தில் அவன் மெய்ம்மறந்து நின்ற போது வளநாடுடையார் அவன் அருகில் வந்து கூறலானார் —

''குலபதி உன்னுடைய தாய்மாமன் மகன் என்பதை இப்போது நீயாகவே புரிந்துகொண்டிருக்கலாம், இளங்குமரா! இந்தப் படத்திலிருக்கிற பெண் தன் தந்தையோடு உடன் பிறந்தவள் என்று சிறிது நேரத்துக்குமுன் குலபதியே உன்னிடம் கூறியிருந்ததை மறுபடியும் நீ இப்போதும் நினைத்துக் கொள். 'இந்தக் குடும்பத்தின் புகழை உலகத்துக்குச் சொல்ல வேண்டிய சக்தி ஒன்று இதிலிருந்து தவறி எப்படியோ எங்கோ வெளியேறிப் போய்விட்டது! அதை மறுபடியும் கண்டு பிடித்து இங்கே சேர்க்கிறவரை எனக்கு இவ்வளவு செல்வமிருந்தும் நான் மனத்தினால் ஏழைதான்'—என்று இந்த ஓவிய மாடத்துக்குள்ளே நீ நுழைந்தபோது உன்னிடம் குலபதி வருத்தப்பட்டது யாருக்காகத் தெரியுமோ? உனக்காகத் தான்! நீதான் இந்தக் குடும்பத்தின் பெருமையைக் காப்பாற்றப் போகிற சக்தி என்று குலபதியும், அருட்செல்வ முனிவரும், நானும் எல்லாருமே நம்பிக் கொண்டிருக்கிறோம். அந்த நம்பிக்கைதான் சாவதற்கு முந்திய விநாடியில் உன் தாயின் மனத்திலும் தோன்றியிருக்கும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. நீதான் எங்களுடைய நம்பிக்கைகளைக் காப்பாற்ற வேண்டும்.''

''ஐயா! இந்த உறவுகளையும் பற்றுதல்களையும் புரிந்து கொள்ளும் போதில் எனக்குப் பெருமையாக இருப்பதைப் போலவே தயக்கமாகவும் இருக்கிறது. இந்த உறவுகளை அங்கீகரித்துக் கொள்வதன் மூலமாகவே நான் வேறெந்த மனிதர்கள் மேலாவது உறவு மாறி வைரமும், பகைமையும் கொள்ள நேருமோ என்று எண்ணிக் கலங்குகிறேன்.''

''இனிமேல் கலங்கிப் பயனில்லை குழந்தாய்! இதோ இந்தச் சுவடிகளைப் பார். சக்கரவாளக் கோட்டத்துத் தவச் சாலையில் வசிக்கும்போது



இவற்றை என் கையில் வைத்து நான் எழுத்தாணியால் கீறிக் கொண்டிருந்த பல சந்தர்ப்பங்களில் நீ இவற்றையும், என்னையும் சேர்த்துப் பார்த்திருக்கிறாய். ஆனால் அப்போதெல்லாம் இவற்றில் நான் எழுதிக் கொண்டிருப்பது என்னவாக இருக்கும் என்று அறியும் ஆவல் உனக்கு ஏற்படவில்லை. நான் ஏதாவது பழைய நூல்களுக்கு உரையெழுதிக் கொண்டிருப்பதாக நீ நினைத்திருக்கலாம். ஆனால் இன்று இவற்றைப் படிக்கச் சொல்லி நானே உன்னைத் தூண்ட வேண்டிய நிலையில் பொறுப்புடையவனாக இருக்கிறேன். உன்னுடைய புகழ் வாய்ந்த குடிக்குத் துன்பம் நேர்ந்த சோக வரலாறு இந்தச் சுவடிகளில் அடங்கியிருக்கிறது. இதை நீ படித்து உணரும் போது உன் குடிக்குக் கேடு சூழ்ந்தவர்கள் யாரோ அவர்கள் மேல் நீ கோபமும் கொதிப்பும் அடைந்து தான் ஆக வேண்டும். நெருப்பையும், சந்தனத்தையும் ஒரே உணர்ச்சியோடு உடம்பில் தாங்கிக் கொள்கிற அளவு சாந்த குணத்தின் உயரமான எல்லையில் போய் நிற்கிறவனாகவே இருந்தாலும் இந்த ஏடுகள் கூறும் உண்மைகளைப் படிக்கும் போது உன் இரத்தம் சூடேறிக் கொதிக்கத்தான் செய்யும். அதை உன்னால் தவிர்க்க முடியாது. நீ தவிர்க்கவும் கூடாது.''

''அப்படி ஒரு கொடிய அநுபவம் எனக்கு ஏற்படத்தான் வேண்டுமென்று நீங்கள் நினைக்கிறீர்களா?''

''உன் தாயே அப்படித்தான் நினைத்தாள். சொன்னாள். அவள் இன்று உயிருடன் இல்லாத காரணத்தால் அவள் மனம் எந்தக் காரியத்தை நீ செய்து நிறைவேற்றுவாய் என்று நம்பிக் கொண்டே அழிந்து இறந்ததோ, அந்தக் காரியத்தை உனக்கு நினைவூட்டும் பொறுப்பை நானே மேற்கொள்ள வேண்டியிருக்கிறது.''

''உங்களை நான் மறுப்பதற்கில்லை. உங்களுக்கு நான் நிறையக் கடமைப்பட்டிருக்கிறேன். அதோ அந்த மாடத்துக்கு அப்பால் பேரொளிப் பக்கமாகிய சுக்கில பட்சத்து நிலா எழுந்துவிட்டது. இந்த ஏடுகளை நாளை இதே வேளைக்குப் படிக்கிறேன் நான். இன்று இந்த வேளைக்கும் நாளை இதே வேளைக்கும் நடுவிலுள்ள ஒரே ஒரு நாளை மட்டும் என் விருப்பம் போல் செலவழிக்க எனக்குப் பிச்சை கொடுத்தருளுங்கள்'' என்று அருட்செல்வ முனிவருடைய கால்களில் வீழ்ந்து வணங்கியபடியே மன்றாடினான் இளங்குமரன். அவனுடைய பவித்திரமான கண்களிலிருந்து பெருகிய கருணை நீர்ப் பெருக்கில் அவருடைய தளர்ந்த பாதங்கள் நனைந்தன. அவர் அவனை நோக்கிக் கேட்டார்:

''பல நாட்களாகத் தீர்க்க வேண்டிய பழி சுமந்து கிடக்கும் போது இந்த ஒரே ஒரு நாளை என்னிடமிருந்துபிச்சை கேட்டு வாங்கிக் கொண்டு நீ என்ன செய்யப் போகிறாய்?''

''வாழ்க்கைத் துன்பங்களுக்கு வேறு விதமான மருந்து காண வேண்டுமென்ற தாகம் ஒருநாளில் ஏதோ ஒரு விநாடியில் தான், புத்தருக்கு உண்டாகியிருக்க வேண்டும். அந்தப் புனித ஞாயிறு பிறந்த ஒளி நாளைக்குப் பரவ இருக்கிறது. நாளைக்குக் காலையில் நான் மணிபல்லவத்துக்கு வருவதாக விசாகையிடம் சொல்லியிருக்கிறேன். நாளைக்கு ஒருநாள் மட்டுமாவது என்னைக்கோபமும் கொதிப்பும் அடையவிடாமல் என்போக்கில்வாழ அநுமதி தந்தருளுங்கள். நாளைக்கு இரவில் இதே நிலா உச்சி வானத்தை அடைவதற்குள் நான் மறுபடி இங்கே திரும்பி வந்து விடுகிறேன். அதன் பின்பு என்னை எந்த வழியில் நடத்த வேண்டுமோ அந்த வழியில் நீங்கள் நடத்திக்கொண்டு போகலாம். நாளைக்கு மறுநாள் பொழுது புலர்வதற்குள் என்னுடைய குடியின் வரலாறுகளெல்லாம் அடங்கிய

இந்தச் சுவடிகளை நான் படித்து முடித்து விடுவேன். என் அறிவின் வலிமையால் இந்தச் சுவடிகளை நான் படிக்கும்போது என் மனம் யார் மேல் வைரமும் பகைமையும் கொள்ள முடியுமோ, அவர்களைக் கூடப் பொறுத்து நிற்க நான் முயல்வேன்.''

''அப்படிப் பொறுத்து நிற்பதற்கு நீ முயலக் கூடாது குழந்தாய்! கோபத்தில் இரண்டு வகை இருக்கிறது. சீற்றம் என்பது ஒன்று. செற்றம் என்பதும் ஒன்று. சீற்றம் என்பது கோபம் விளைய வேண்டிய நிகழ்ச்சி நிகழ்ந்த உடனே தோன்றித் தீர்ந்த உடனே தீர்ந்து போகிற கோபம். செற்றம் என்பது மனத்தினுள்ளேயே நெடுங் காலமாக நிகழ்ந்து வளர்ந்து கொண்டிருக்கிற கோபம். நீ உன் எதிரிகள் மேல் அடைய வேண்டிய கோபம் இரண்டாவது வகையைச் சேர்ந்தது. அந்தக் கோபத்தை இன்னும் ஒரு நாள் தாமதமாகத்தான் அடைய வேண்டும் என்று நீ விரும்பினால் அதற்கு நான் குறுக்கே நிற்கவில்லை. உன் விருப்பப்படியே வளநாடுடையாரையும் உடன் அழைத்துக் கொண்டு புத்த பூர்ணிமைக்குப் போய் விட்டு வா. ஆனால் எனக்கு நீ வாக்குக் கொடுத்திருப்பதை மறந்து விடாதே. இதே இடத்தில் தீபத்தையும் சுவடிகளையும் வைத்துக் கொண்டு நாளை இரவு உனக்காக நான் காத்திருப்பேன்'' என்று கூறி அவன் வேண்டுகோளுக்குச் செவி சாய்த்தார் அருட்செல்வ முனிவர்.

குலபதி அவர்களை வழியனுப்புவதற்குச் சங்குவேலித் துறை வரை உடன் வந்திருந்தான். அவர்கள் பூம்புகாரிலிருந்து புறப்பட்டு வந்திருந்த பழைய கப்பல் மாலையிலேயே மணிபல்லவத்துக்குப் புறப்பட்டுப் போயிருந்தது. மணிமார்பனும் அவன் மனைவி பதுமையும் மாலையில் அந்தக் கப்பலிலேயே புறப்பட்டுப் போயிருக்க வேண்டுமென்றும் தோன்றியது. சங்குவேலித் துறையிலிருந்து மணிபல்லவத்துக்குப் புறப்பட்டுக் கொண்டிருந்த ஈழநாட்டு வாணிகக் கப்பல் ஒன்றில் இளங்குமரனும் வளநாடுடையாரும் இடம் பெற்றுக் கொண்டு புறப்பட்டுச் சென்றார்கள்.

''ஐயா! நாளைக்கு நிலாப் புறப்படும் நேரத்துக்கே நான் இந்தத் துறையில் வந்து உங்களை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பேன். உங்கள் ஓவிய நண்பரையும் திரும்பி வரும் போது இங்கே உடனழைத்து வந்து விடுங்கள்'' என்று விடைபெறும் போது குலபதி மனம் நெகிழ்ந்து கூறினான். அவனுடைய வார்த்தைகளில் இப்போது உறவின் நெருக்கமும், உரிமையும் கலந்து தொனித்தன.

''அதைப் பற்றியெல்லாம் நீ ஒன்றும் கவலைப்படாதே குலபதி! நான் ஒருவன் துணையாகக் கூடச் செல்லும் போது இளங்குமரனைத் திரும்ப அழைத்து வருவது பற்றி உனக்குச் சந்தேகம் ஏற்படவே வழியில்லை'' என்று உறுதி கூறினார் வளநாடுடையார். வெள்ளி வெண் குடம் போல் நிலா மிதக்கும் வானத்தின் கீழே கடலில் பயணம் செய்யும் அந்த அழகிய வேளையில் இளங்குமரனுடைய புறக் கண்கள் தாம் கப்பலையும், கடலையும், உடன் இருந்தவர்களையும், வானத்து நிலாவையும் பார்த்துக் கொண்டிருந்தன. புறக் கண்களைவிட ஆற்றல் வாய்ந்த அவனது அகக்கண்ணோ மணிநாகபுரத்தின் ஓவிய மாடத்தில் பார்த்த தன் தாயையும் தந்தையையும் மறுபடி மறுபடி தன்னுடைய மனத்துக்குள்ளேயே உயிருருவமாகக் கற்பித்துப் பார்த்து மானசீகமாக அவர்களைப் பலமுறை வணங்கிக் கொண்டிருந்தது.

## 5. விசாகையின் தத்துவம்

மணிநாகபுரத்திலிருந்து புறப்பட்டிருந்த கப்பல் ஒன்றரை நாழிகைப் பயணத்தில் மணிபல்லவத் தீவை அடைந்து விட்டது. மணிநாகபுரமும் மணிபல்லவமும் வேறு வேறு இடங்கள் என்று பிரித்துச் சொல்ல முடியாதபடி மிக அருகிலேயே இருந்தன. மணிநாகபுரத்து நகர எல்லை முடிகிற கோடியில் ஒரு சிறிய நீர்ச் சந்திதான் மணிபல்லவத்தைத் தனியே பிரித்தது. நீண்ட தொலைவிலிருந்து வருகிற பிற நாட்டு மக்கள் மணிநாகபுரம், சங்குவேலி, பெருந் தீவு, மணிபல்லவம் எல்லாப் பிரிவுகளையும் நாக நாடு என்ற ஒரே தொகுதியாக எண்ணிப் புண்ணியப் பெயராகிய மணிபல்லவம் என்பதனாலேயே அதனை அழைத்து வந்தனர். கடலில் மிதக்கும் மரகதப் பசுந் தளிராக நிலாக் கதிர்களின் கீழ் அந்தத் தீவு புண்ணியப் பயன்களெல்லாம் ஒன்றுபட்டு மிதப்பதுபோல் தெய்வ நகரமாய்த் தெரிந்தது. இளங்குமரனும், வளநாடுடையாரும் மணிபல்லவத்தின் மேற்குக் கரையில் இருந்த இறங்கு துறையில் இறங்கிப் பகல் நேரமே போலக் கலகலப்பாக இருந்த வீதி வழியே நடந்தனர். வீதி நிறையப் பௌத்த

சமயத் துறவிகளும், வேறு பல சமயங்களைச் சேர்ந்த ஞானிகளும், சீவர ஆடையணிந்த பெண் துறவிகளுமாக எங்கு நோக்கினும் ஒளி நிறைந்த முகங்களாகத் தென்பட்டன. தீவே மணப்பது போல அகிற் புகையும், கற்பூரமும், நறுமண மலர்களும் சந்தனமும் மணந்தன.

கோமுகி என்னும் தாமரைப் பொய்கைக் கரையில் பெரிய பெரிய கல் தூண்களில் அமைந்த தீப அகல்களில் பந்தம் எரிப்பது போல் நெய்யூற்றப் பெற்றுப் பெரிதாய் எரிந்து கொண்டிருந்த விளக்குச் சுடர்களின் கீழே பாலி மொழியில் எழுதப் பெற்ற புனிதக் கிரந்தங்களைத் துறவிகள் உரத்த குரலில் படித்துக் கொண்டிருந்தனர். அவர்களைச் சுற்றிலும் பெருங் கூட்டம் நின்று கேட்டுக் கொண்டிருந்தது. மற்றொரு புறம் பௌத்த சமயக் காப்பியங்களை விளக்கும் நாடகங்களை நடித்துக் காட்டிக் கொண்டிருந்தனர். பௌத்த சமயத்து வழிபடுந் தானங்களாகிய விகாரைகளில் எல்லாம் தீபாலங்காரம் செய்திருந்தார்கள். நோக்குமிடமெல்லாம் தாமரைப் பூக்கள் அம்பாரம் அம்பாரமாகக் குவிக்கப்பட்டிருந்தன.

நாகநாட்டின் இரத்தினத் தீவு என்று பெயர் பெற்ற அந்தப் பெருந் தீவுப் பகுதிகளின் அழகெல்லாம் இன்று இந்தப் புண்ணிய நகரத்துக்கே தனியாக வந்து பொருந்தி விட்டாற் போலத் தோன்றியது. மணிபல்லவத் தீவில் கோமுகிப் பொய்கையின் கரையைச் சுற்றிக் கொண்டே வளநாடுடையாரோடு வந்தபோது விசாகை, ஓவியன் மணிமார்பன் அவன் மனைவி பதுமை எல்லாரையும் இளங்குமரன் அங்கே சந்திக்க நேர்ந்தது. ஒரு பெரிய கூட்டத்துக்கு நடுவே அமர்ந்து போதி மாதவர் படைத்தருளிய திரிபிடக நெறியை விசாகை விவரித்துச் சொற்பொழிவு செய்து கொண்டிருந்தாள். விசாகைக்கு அருகில் அவளைச் சூழ்ந்தாற் போல ஓவியனும் அவன் மனைவியும் அமர்ந்திருந்தார்கள். தானும், வளநாடுடையாரும் அங்கு வந்திருப்பதை அவர்களில் யாரும் அப்போதே கண்டுவிட முடியாமல் ஓர் ஓரமாக ஒதுங்கி நின்று விசாகையின் பிடக நெறி விளக்கத்தைச் செவி மடுத்தான் இளங்குமரன். அங்கே விசாகையின் எதிர்ப்புறம் தொண்டு கிழவராக வீற்றிருந்த பௌத்த சமயத் துத் துறவி யாரென்று இளங்குமரனால் புரிந்துகொள்ள முடியவில்லை. ஒருவேளை அவர்தான் இளமையில் விசாகைக்குச் சமய ஞானத்தைக் கற்பித்த சமந்த கூடத்துப் புத்ததத்தராக இருக்கலாமோ என்று எண்ணினான் அவன். விசாகையின் பிடக நெறி விளக்கம்

முற்றுப் பெற்றதும் அவனுடைய சந்தேகம் தீர்ந்தது. கூட்டம் கலையப் பெற்று விசாகையும் அவளோடிருந்தவர்களும் தனியானபோது இளங்குமரனும், வளநாடுடையாரும் அவர்களுக்கு அருகிற் சென்று நின்றார்கள். விசாகை அவர்கள் இருவரையும் உற்சாகமாக வரவேற்றாள்:

"வர வேண்டும்! வரவேண்டும்! ஒரு வேளை நீங்கள் மணிநாகபுரத்திலிருந்தே நாளைக்கு வைகறையில்தான் வருவீர்கள் என்று இந்த ஒளியாரும், இவருடைய மனைவியாரும் கூறினார்கள். நல்ல வேளையாக நீங்கள் இப்போதே வந்துவிட்டீர்கள்" என்று கூறிவிட்டுத் தன் எதிரேயிருந்த மூத்த துறவியின் அருகே இளங்குமரனையும், வளநாடுடையாரையும் அழைத்துச் சென்று அவர்களை இன்னாரென்று சொல்லி அவருக்கு அறிமுகப்படுத்தினாள் விசாகை. அவன் நினைத்தபடியே அவர்தாம் புத்த தத்தராயிருந்தார். சமதண்டத்து ஆசீவகர்களை இளங்குமரன் வென்ற திறமையைப் பற்றியெல்லாம் அங்கு வந்து சேர்ந்த உடனே விசாகை அவரிடம் நிறையப் பெருமையாகக் கூறியிருந்தாள் போல் இருக்கிறது. அவர் இளங்குமரனிடம் ஆர்வத்தோடும், அன்போடும் பேசினார்:

"குழந்தாய்! இந்தத் தீவில் நிகழ்கிற வைசாக பூர்ணிமை விழா என்பது தனியாக எங்களுடைய சமயச் சடங்கு மட்டும் அல்ல. கீழ்த் திசை நாடுகளின் அறிவுத் துறை வன்மைகளும், பண்பாட்டுப் பெருமைகளும் ஒன்றுசேர்ந்து சந்தித்துக் கொள்வதற்கு இந்த நல்ல நாளும், இந்தத் தீவும் பன்னெடுங் காலமாகப் பயன்பட்டு வருகின்றன. இந்தத் தீவின் கரைகளில் அலைகள் ஒலிக்கத் தொடங்கிய நாளிலிருந்தே கீழை நாடுகளின் விதம் விதமான தத்துவங்களும் சேர்ந்து ஒலிக்கத் தொடங்கி விட்டன. நம்மைப் போன்றவர்கள் தலைமுறை தலைமுறையாகச் சந்தித்துக் கொள்ளவும் ஒரு பெரிய அறிவுப் பரம்பரை தொடர்ந்து சங்கமமாகிப் பெருகவும் இந்தத் தீவும் இந்த நாளும் இடமாயிருந்து வருகின்றன. விசாகை இந்த முறை புத்த பூர்ணிமைக்காக இங்கு வந்து இறங்கிய விநாடியிலிருந்து என்னிடம் உன்னைப் பற்றியே நெடுநேரமாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். திருநாங்கூரடிகள் என்னுடைய நெருங்கிய நண்பர். சமய வாதத்தில் நானும் அவரும் கடுமையாக எதிர்த்து நின்றிருக்கிறோம். அவர் என்னைப் பலமுறை வென்றிருக்கிறார். அவருக்கு நான் தோற்றிருக்கிறேன். ஆனால் நட்புச் செய்வதில் இருவருமே ஒருவருக்கொருவர் சிறிதும் தோற்றதில்லை. நீ அவருக்கு மிகவும் பிரியமான மாணவன் என்று விசாகையிடம் கேட்டறிந்தபோது என் மனம் பூரித்தது. உலகில் நீ வாழும் நாட்கள் நிறைந்து பெருகுமாக" -என்று அவனிடம் அன்பாக உரையாடி வாழ்த்தினார் அந்த முதியவர். அவன் அந்த முதுமைக்கும் ஞானத்துக்கும் தன் மனப்பூர்வமான பணிவையும் வணக்கங்களையும் செலுத்தினான்.

அன்றிரவு எல்லாரும் கோமுகிப் பொய்கைக் கரையிலிருந்த பௌத்த மடத்தில் தங்கினார்கள். களைப்பினாலும் பயணம் செய்த சோர்வினாலும் எல்லாரும் உறங்கிய பின்னும் விசாகையும் இளங்குமரனும் கோமுகிப் பொய்கைக் கரையில் போய் அமர்ந்துகொண்டு நெடுநேரமாகப் பேசிக் கொண்டிருந்தனர். அப்போது புத்த ஞாயிறு என்பது என்ன வென்பதை அழகிய முறையில் ஒரு தத்துவமாக அவனுக்கு விளக்கிச் சொன்னாள் விசாகை.

"புத்த ஞாயிற்றின் தோற்றத்துக்குரிய சிறந்த நாளாக வைசாக பூர்ணிமையைக் கொண்டாடுவது மட்டும் எங்கள் சடங்கு அல்ல! 'எல்லா உயிரும் எங்கும் எப்போதும் எல்லா விதத்திலும் நன்றாக இருக்க வேண்டும்' என்ற முதிர்ந்த கருணை யார் மனத்தில் எந்த விநாடி தோன்றினாலும் அங்கே அந்த விநாடியில் புத்த ஞாயிறு பிறந்து விட்டது என்றுதான் கொள்ள வேண்டும். உயிர் இரக்கம்தான் பெரிய ஞானம். அது யார் மனத்தில் இருந்தாலும் அவரைப் புத்தர் போற்றுகிறார். ஆசைகளால் தான் கோபமும், வெறுப்பும் உண்டாகின்றன. ஆசைகள் அழிந்தால் எதன் மேலும் கோபமில்லை. எதன் மேலும்வெறுப்பில்லை. எப்போதும்மனம் இந்த உலகத்தைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே இருக்கிற உபசாந்தி நிலை சித்திக்கிறது" என்று விசாகை ஆர்வம் மேலிட்டுக் கூறிக் கொண்டே வந்தபோது இளங்குமரன் நடுவில் இடையிட்டுப் பேசினான்:

"இப்போது நான் கூறப் போகிற செய்தியைக் கேட்டு நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும், அம்மையாரே! 'உபசாந்தி நிலை'யை அடைய வேண்டும் அடைய வேண்டும் என்று நான் தவித்த காலமெல்லாம் போய் என் மனம் அந்த நிலைக்குப் பக்குவமாகி நிற்கும் இந்தச் சமயத்தில் அதை நானே இழக்க வேண்டியவனாகி விட்டேன். நாளைக்கு இந்த வேளையில் இதே தீவின் வேறொரு பகுதியிலே என் மனத்தின் எல்லையெல்லாம் யார் மேலோ எதற்காகவோ கோபமும் வெறுப்பும் ஏற்படப் போகிறது. தீக் கடை கோலைப் போல என் எண்ணங்களைத் தூண்டிக் கடைந்து யாரோ யார் மேலோ என் நெஞ்சில் கனலை மூட்டப் போகிறார்கள். இந்தப்


சுளுக்கா?
உடனே சிறிதளவு
அமிர்தாஞ்சனம்
தடவுங்கள்
அது விரைவில் குணமளிக்கும்
ஜலதோஷம், ஜுரம், வாயுப் பிடிப்பு போன்ற உபாதைகளிலிருந்து உங்கள் குடும்பத்தை காப்பாற்றுங்கள். ஒவ்வொரு முறையும் சிறிதளவே அமிர்தாஞ்சனம் உபயோகிக்க வேண்டியிருப்பதால் ஒரு பாட்டில் நெடுநாள் வரை நீடிக்கிறது.
AMRUTANJAN
அமிர்தாஞ்சனம் லிமிடெட், மதராஸ்-4
பம்பாய்-1, கல்கத்தா-1, புதுடெல்லி-1

புண்ணியத் தீவுக்கு ஒரு முறை வந்து இதன் மண்ணை மிதித்து நடந்தாலே உபசாந்தி நிலை கிடைக்கும் என்று உங்கள் சமயத்தைச் சேர்ந்த துறவிகள் சொல்கிறார்கள். எனக்கோ இங்கு வந்தபின் ஏற்கெனவே கிடைத்திருந்த மன அமைதியும் போய் விடும் போல் இருக்கிறது.''

இப்படித் தாங்க முடியாத ஏக்கத்தோடு இளங்குமரன் தன்னிடம் கூறிய சொற்களையெல்லாம் கேட்டு விசாகை சிரித்தாள்.

''தத்துவங்களைக் கண்டுபிடிக்கிறவர்களைக்காட்டிலும் கடைப்பிடிக்கிறவர்கள் சிறந்தவர்கள் என்று நீங்கள் பல முறை என்னிடம் கூறியிருப்பதை மறந்திருக்க மாட்டீர்கள் என்று எண்ணுகிறேன். போதிமாதவருக்குப் பெருமை அவர் கண்ட தத்துவமாகவே அவருடைய வாழ்க்கை அமைந்தது என்பதுதான்! அறிவினாலும், மனத்தினாலும் வாழத் தொடங்கி விட்ட நீங்கள் மறுபடி உணர்ச்சிகளால் வாழ வேண்டிய அவசியம் மீண்டும் எதற்காக நேர்கிறது?''

விசாகை தொடக்கத்திலிருந்து தன் மனத்தில் பவித்திரமான நினைவுகள் பிறக்கக் காரணமாயிருந்தவள். ஆகையினால் அவளிடம் எதையும் ஒளிக்காமல் சொல்லிவிட வேண்டும் என்று தோன்றியது இளங்குமரனுக்கு. தான் மணிநாகபுரத்தில் குலபதியின் மாளிகைக்குச் சென்றதையும் அங்கே அருட்செல்வ முனிவரைச் சந்திக்க நேர்ந்ததையும் அவருடைய வேண்டுகோளையும் விசாகையிடம் கூறினான் இளங்குமரன்.

அவன் கூறியவற்றைக் கேட்டபின் விசாகை எதையோ ஆழ்ந்து சிந்திக்கிறவளாய் அமைதியான முகத் தோற்றத்தோடு இருந்தாள். இளங்குமரன் அவளிடம் மேலும் கூறலானான்:

''நீங்கள் உலகத்தின் கண்ணீரைத் துடைப்பதற்காக உங்கள் கண்களில் நீரைச் சுமந்து கொண்டு வாழ்கிறீர்கள். நானோ என் குடும்பத்தில் என்றோ இறந்து போனவர்களின் கண்ணீரை நினைத்துக் கொண்டு இன்று என் கண்களில் சினத்தைச் சுமக்க வேண்டியவனாக இருக்கிறேன். மணிநாகபுரத்து மண்ணில் இறங்கி நின்றவுடன் உங்கள் மங்கலமான வாயைத் திறந்து 'நிறைக, நிறைக' என்று என்னை வாழ்த்தினீர்களே? அப்படி வாழ்த்திய போது எது எப்படி என்னிடம் நிறைய வேண்டுமென்று நீங்கள் வாழ்த்தினீர்களோ? என் மனம் கோபத்தினால்தான் இனிமேல் நிறைய வேண்டும் என்று அருட்செல்வ முனிவர் கூறுகிறார். நானோ என் மனத்தில் எல்லையற்ற திரு நிறைய வேண்டும் என்று விரும்பினேன்....''



''நாம் ஆசைப்படுவதற்கும் அடைய வேண்டியதற்கும் நடுவில் தெய்வ சித்தம் என்று ஒன்று தனியாக இருக்கிறது. ஆசைப்பட்டவற்றை யெல்லாம் அடைவது எளிதானால் இந்த உலக வாழ்க்கை இப்படியா இருக்கும்? ஆனால் இப்போதும் உங்களுக்கு நான் ஒன்று சொல்ல முடியும். உங்களுடைய வாழ்க்கை விந்தையானது. வாழ்க்கைக் கடலின் எல்லா விதமான அலைகளிலும் நீங்கள் ஒதுங்கிக் கரை கண்டிருக்கிறீர்கள். உங்களுடைய வாழ்க்கை இந்த மணிபல்லவத் தீவைப் போலவே நான்கு பக்கத்து அலைகளையும் தாங்கிக் கொண்டு அழியாத தத்துவமாக நிற்கவேண்டுமென்று நான் விரும்புகிறேன். தத்துவம் கடந்த பொருள் எதுவோ அதைத் தத்துவங்களால் அளக்க முடியாது என்று கருதி அதற்குக் **கந்தழி** என்று தமிழில் பெயரிட்டிருக்கிறார்கள். உங்களுடைய வாழ்க்கையின் ஒவ்வொரு பருவத்திலும் நீங்கள் இது வரை அனுபவங்களால் வளர்ந்து அவற்றையே தத்துவங்களாகக் கொண்டு அனுபவங்களைக் கடந்து நின்றிருக்கிறீர்கள். இப்படிப்பட்ட வாழ்வைத்தான் காவியம் எழுதவல்ல மகா கவிகள் ஒவ்வொரு கணமும் தேடிக் கொண்டிருக்கிறார்கள். நான்கு பக்கத்திலிருந்து மோதும் கடல் அலைகளையும் தாங்கிக்

கொண்டு இந்தப் புண்ணியத் தீவு நிற்பதைப் போல நீங்களும் நான்கு பருவத்து வாழ்க்கைச் சோதனைகளும் ஒன்று சேர்ந்தாற் போல் உங்களைத் தேடி வருகிற இந்தச் சமயத்தில் இவற்றைத் தாங்கி வென்று நிற்க வேண்டும். இந்த அநுபவத்திலும் நீங்கள் வளர்ந்து நிற்க வேண்டும். தெய்விகமான பெரிய காவியங்களில் எல்லாம் அந்தக் காவியத்துக்குத் தலைவனாக இருப்பவனுடைய உயிர்க் குணம் அது நிறைகிற முடிந்த எல்லையில்தான் பிறந்து தொடங்கி ஒளிர்கிறது. இராமாயணம் முடிந்த பின்புதான் இராமனுடைய கரும வாழ்வைப் பற்றிய சிந்தனை தொடங்குகிறது. பாரதம் முடிந்த பின்புதான் பாண்டவர்களுடைய அறப் போரினது பெருமையைப் பற்றிய எண்ணங்கள் பிறக்கின்றன. தன்னுடைய கதை எல்லை முடிந்த பின்பும் தன்னிலிருந்து பிறந்த சிந்தனை எல்லைக்கு முடிவே இல்லாமல் வளர்கிற புனிதமான காவியங்களைப் போல் நீங்கள் நிறைந்து நிற்க வேண்டும். இது தான் திருநாங்கூரடிகளின் விருப்பம். என் விருப்பமும் இதுவே.....'' என்று விசாகை கூறிய போது இதைக் கேட்டுக் கொண்டிருந்த இளங்குமரனுக்கு மெய் சிலிர்த்தது. அவன் தன் கண்களை மூடிக் குருவை நினைத்துக் கொண்டான்.

'அதோ' என்று கிழக்கே காண்பித்தாள் விசாகை. இளங்குமரன் பார்த்தான். கீழ்த் திசை வெளுத்துக் கொண்டிருந்தது. இருவரும் எழுந்து நீராடப் புறப்பட்டனர். போது கழிந்ததே தெரியவில்லை.

கிழக்கே அடிவானத்தைத் நோத்துக் கொண்டு எழும் சிவப்புக் கோளத்தைப் பார்த்துக் கொண்டே, ''ஞாயிறு பிறந்து விட்டது அம்மையாரே!'' என்றான் இளங்குமரன்.

''கீழ்த்திசையில் மட்டும்தானா; அல்லது உங்கள் மனத்திலுமா?'' என்று கேட்டாள் விசாகை.

''மனத்திலும்தான். மனத்தில் சிறிது போது சூழ்ந்திருந்த இருளைப் போக்கி ஒளி கொடுத்தவர் நீங்கள். உங்களிடம் பேசிக் கொண்டிருந்த போதே இருள் விலகிப் பொழுது புலர்ந்து விட்டது'' என்று கூறிய படியே கண்களில் பயபக்தி மலர விசாகையைப் பார்த்தான் இளங்குமரன்.

''உங்கள் வாழ்க்கை காவியமாக நிறைய வேண்டும்'' என்று இரண்டாம் முறையாக அதே வாக்கியத்தைப் பொய்மையைச் சிதைக்கும் தூய்மைப் புன்முறுவலோடு மறுபடி அவனை நோக்கிக் கூறினாள் விசாகை. (தொடரும்)

# சுதந்திர நிதி

**17—2—62 லிருந்து 24—2—62**

| | | |
|---|---|---|
| பி. அனந்தசாமி | 5000 | 00 |
| மதுரை அன்பர் | 2 | 00 |
| திருவிடைமருதூர் காமாட்சி சங்கம் | 3 | 00 |
| கே. டி. கிருஷ்ணசாமி அய்யங்கார் | 5 | 00 |
| கே. ஏ. ஏ. ராஜம்பாள் அருணாசலம் | 5 | 00 |
| நேமிசந்த் ஹஜாரி | 10 | 00 |
| எச். பி. ஹானகவுடர் | 25 | 00 |
| பி. க. பிரதாப்சந்த் | 25 | 00 |
| தாகூர் அனுதாபி | 25 | 00 |
| வி. தனபால செட்டியார் | 25 | 00 |
| ஸூர்கோனா அன்பர் | 10 | 00 |
| எம். ஆர். வேங்கடராமய்யர் | 5 | 00 |
| வி. வி. ராமன் ஆசார்யா | 10 | 00 |
| சுதந்திரப் பிரியன் | 2 | 00 |
| வி. எஸ். கிருஷ்ணன் | 2 | 00 |
| எம். எஸ். சுப்பிரமணிய அய்யர் | 101 | 00 |
| ஆர். வெங்கடேசன் | 10 | 00 |
| 18-2-62 திருவல்லிக்கேணி சுதந்திரக் கட்சிக் கூட்டத்தில் அன்பர்கள் | 383 | 00 |
| அர்ச்சகம்பாள். ஜி. அனந்தபட்டாச்சாரி | 11 | 00 |
| டாக்டர் ராமய்யங்கார் | 101 | 00 |
| ஏ. எஸ். வெங்கடகிருஷ்ணன் | 25 | 00 |
| குருவாயு அன்பர் | 4 | 00 |
| ஏ. கிருஷ்ணன் | 2 | 00 |
| ஆர். ருக்மாங்கதம் பிள்ளை | 3 | 00 |
| மீனாட்சியம்மாள் | 5 | 00 |
| பி. சிவராமராவ் | 25 | 00 |

| | | |
|---|---|---|
| வாசன் பிரதர்ஸ் | 25 | 00 |
| ஜெயலக்ஷ்மி குருமூர்த்தி | 5 | 00 |
| கே. எஸ். நாகராஜன் | 10 | 00 |
| ஏ. பத்மநாபபட் | 50 | 00 |
| துரை | 250 | 00 |
| ஹரிதாஸ் | 250 | 00 |
| ஆர். வீரராகவ சீனர் | 2 | 00 |
| எஸ். எஸ். ஏ. சாஸ்திரி | 101 | 00 |
| கோயமுத்தூர் அன்பர் | 15 | 00 |
| கோவை நண்பர் | 10 | 00 |
| கோவை அன்பர் | 1 | 00 |
| திருப்பூர் அன்பர் | 1 | 03 |
| மதுரை சீனிவாசன் | 5 | 00 |
| திருமங்கலம் அன்பர் | 31 | 00 |
| மயிலை சித்திரகுளம் கூட்டத்தில் ஓர் அன்பர் | 5 | 00 |
| திருவல்லிக்கேணி கூட்டத்தில் ஓர் அம்மையார் | 15 | 00 |
| எஸ். வி. எஸ். நாராயணன் | 101 | 00 |
| கோதண்டராமன் | 1 | 00 |
| கே. ஆர். அசோக்குமார் | 5 | 00 |
| கே. கிருஷ்ணமூர்த்தி | 25 | 00 |
| 10—1—61 லிருந்து 16—2—62 வரை | 40418 | 42 |
| மொத்த வரவு | 47150 | 45 |

இதுவரை வந்துள்ள மேற்படி சுதந்திரநிதி முழுதும் அவ்வப்போது தமிழ் நாடு சுதந்திரக் கட்சியின் பொக்கிஷதாரரிடம் ஒப்படைக்கப்பட்டு விட்டது.

## காபி எப்பொழுதும் புத்துயிரளிக்கும்

காபி உங்கள் குதூகலத்தை வெளிப்படுத்துகிறது. காபியில் ருசி, மணம், சௌக்கிய உணர்ச்சி எல்லாம் இருக்கின்றன. எனவே காபி பருகி சந்தோஷமாக இருங்கள். தயாரிப்பதும் வெகு சுலபம்.*

## திருப்தியளிக்கும் காபி




**காபி போர்டு, பெங்களூர்**

*"ஒவ்வொரு முறையும் தரமான காபி தயாரிப்பது எப்படி" என்ற எமது இலவச புத்தகத்திற்கு எழுதுங்கள்.

FDS/CB/4-TM

3, 4 - 4 3




# பவழத்தீவு

கதை: வாண்டுமாமா

சித்திரம்: ரமணி.

௭
















என்ன?
என் தோழர்களின் உதவியை நாடுறேன் என்ன? மணி, இங்கே வா.......


தன் தோழர்களை அழைத்து அவைகளிடம் விஷயத்தை விளக்குகிறான்.
புரிந்ததா? எப்படியாவது ஆனந்தன் என்ன ஆனான் என்பதைக் கண்டு பிடித்தாக வேண்டும்.


கந்தனின் தோழர்கள் மோப்பம் பிடித்தபடி நாலா திசைகளிலும் தேடுகின்றன......
எப்படியும் இவைகள் கண்டு பிடித்துவிடும். கவலைப் படாதீர்கள்.


அதோ, அதோ! கந்தா மான் எதையோ தன் காலால் கிளறுகிறது.


புதர்களின் நடுவே ஒரு இடைவெளியல்லவா தெரிகிறது. உன் தோழர்கள் இதன் வழியே செல்ல விரும்புகின்றனவா கந்தா?
ஆமாம்...


உள்ளே நுழைந்து போய்ப் பார்க்கும் அவை விரைந்து புதர்களை அழித்து வழி உண்டாக்குகிறார்கள்.


பூமியினடியில் செல்லும் இந்தப் பிளவு சுரங்கப் பாதை போலல்லவா போகிறது.


பாதாளப் பாதையிலிருந்து மேலே வந்த போது........
அதோ ஒரு குகை! சேனாபதியாரே. கையில் ஏதாவது ஆயுதமிருக்கிறதா?
உடை வாளிருக்கிறது


குகைக்குள்.....
ஆனந்தா!
இளவரசே!


யார் இப்படிக் கட்டிப் போட்டிருப்பார்கள்?


இதோ இது என்ன? ஏதோ எழுதியிருக்கிறதே. பார்த்தீர்களா சேனாபதியாரே.


எச்சரிக்கை–2
என்னைத் தொடர்ந்து வராதே. ஆபத்து உங்களைத் தொடர்ந்து வரும். உடனே இந்தத் தீவை விட்டு ஓடி விடுங்கள்.


அயோக்கியன்.... எனக்கு உத்தரவிட இவன் யார்?....

ஆதரவுடன் சீராட்டி

# ஆஸ்டர்மில்க்

பாலூட்டி...

உங்கள் ஆசைக் கண்மணியின் பாக்கியம்: ஆஸ்டர்மில்க் அளிக்கும் ஆரோக்கியம். காரணம், தாய்ப்பாலுக்கு நிகரானது ஆஸ்டர்மில்க். பரிசுத்தமான பாலிலிருந்து தயாரிக்கப்பட்டுள்ள ஆஸ்டர்மில்க், பாப்பாவின் பச்சிளம்ஜீரண சக்திக்கேற்பப் பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது. தவிர, பற்களும், எலும்புகளும் திடவளர்ச்சி பெறுவதற்கான வைட்டமின் 'டி'யும் இரத்த சோகை தட்டாமல் காப்பதற்கான அயச் சத்தும் அதில் சிறப்புறச் சேர்க்கப்பட்டுள்ளன.




தாய்ப்பாலுக்கு நிகரானது.

இலவசம்: 'ஆஸ்டர் மில்க் புத்தகம்' (ஆங்கிலப் பிரதி)... விரிவுமிக்க, குழந்தைப் பராமரிப்பு நூல்... தபால் செலவுக்காக 50 ந. பைசா தபால் வில்லைகள் இணைத்து எழுதுக: ஆஸ்டர்மில்க்' தபால் பெட்டி எண் 2420, சென்னை–2.

OS.9-X31-M. TM

"சொந்த வாழ்விலும் பொது வாழ்விலும் எப்படியோ அதேபோல நாம் உற்பத்தி செய்யும் சரக்குகள் விஷயத்திலும் ஒழுங்கான கண்டிப்புமிக்க தாரதரக்கட்டுப்பாடுகளைக் கடைப்பிடித்தல் அதிமுக்கியமான கடமையாகும்..."

பாரதப் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு.



இந்த இலட்சியத்திற்காகவே தம்மை அர்ப்பணித்துக்கொண்டுள்ளது இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ் இன்ஸ்டிட்யூஷன் (ISI). தேசிய அடிப்படையிலும் சர்வதேச அடிப்படையிலும் தாரதரக் கட்டுப்பாடுகளை வகுத்த பொறுப்பு இதனுடையதே. நாட்டின் தாரதர நிர்ணயிப்புகளுக்கான இந்த ஸ்தாபனம், அரசினரும் தொழிற்துறையினரும் இணைந்து துவக்கிய கூட்டமைப்பாக 1947-ல் நிறுவப்பெற்றது.

விஞ்ஞான நிபுணர்கள், தொழில்துறை வல்லுநர்கள், தவிர, தொழிலியல், அரசாங்கம் மற்றும் பிற நிறுவனங்களிலிருந்து பொறுக்கி எடுக்கப்பட்ட பிரதிநிதிகள் ஆகியோர் அடங்கிய குழுக்கள்வாயிலாகச் செயலாற்றிவருகிறது ஐ.எஸ்.ஐ: அக் குழுக்களுக்குத் துணைபுரிகின்றனர் ஐ.எஸ்.ஐ ஊழியர்கள்.

கனரகப் பண்டங்கள், சிறு நுகர்வுப் பண்டங்கள்முதல் கோட்பாட்டு நெறிமுறைகள், குறிப்புப் பெயர் வரிசைகள்வரை இதுவரை ஐ.எஸ்.ஐ.யின் தாரதர நடவடிக்கைகளுக்கு உட்பட்ட உருப்படிகள் 1600-க்கு மேற்பட்டவை. நம் நாட்டின் அபிவிருத்தித் திட்டத்தை ஒட்டி வளரும் தேவைகளைப் பூர்த்தி செய்யும் வகையில் மேன்மேலும் புதுப்புதுப் பொருள்கள் மேற்கூறிய கட்டுப்பாடுகளுக்கு உள்ளாகி வருகின்றன. ஏனெனில், தாரதர ஒருமைப்பாடே நாட்டின் பொருளாதார நலனுக்கு அடிப்படை.

# ISI இந்தியன் ஸ்டாண்டர்ட்ஸ் இன்ஸ்டிட்யூஷன்

புது டெல்லி . பம்பாய் . கல்கத்தா . சென்னை . கான்பூர்.

இவ் விளம்பரத்திற்கு இடந்தந்து உதவியவர்கள்:
தி அத்துல் ப்ராடக்ட்ஸ் லிமிடெட்.
போஸ்ட் அத்துல், மேற்கத்திய ரெயில்வே, ஸூரத் மாவட்டம்.

# திருமூலர் தவமொழி

ராஜாஜி சோமு

## 47

எங்கும் நிறைந்து, எல்லாமும் ஆகி நின்ற பரம்பொருள், தன் உள்ளத்திற்குள் நின்றது என்ற அனுபவத்தை எடுத்துச் சொல்லுகிறார். உலகெல்லாம் பரந்து நின்ற இறைவன் என் உள்ளத்துக்குள்ளே அகப்பட்டுக் கொண்டான் என்று ஆனந்தம் பொங்கிப் பாடுகிறார்.

சிவன் வந்து தேவர்
குழாமுடன் கூடப்
பவம்வந் திடநின்ற
பாசம் அறுத்திட்டு

[குழாம்—பரிவாரம். தேவர் பரிவாரங்கள் சூழ்ந்து வந்து. பவம்—பிறப்பு. பவம் வந்திட நின்ற பாசம்—பிறப்பு உண்டாகி வருவதற்குக் காரணமாக நிற்கிற பாச வினையை. அறுத்திட்டு—களைந்தெறிந்து.]

அவன்எந்தை ஆண்டுஅருள்
ஆதிப் பெருமான்

[அவன் எந்தை—என்னப்பனாகிய இறைவன். ஆண்டு அருள் ஆதிப் பெருமான் — கருணையோடு அருள் செய்து ஆட்கொள்ளுகிற ஆதி முதல்வனாகிய கடவுள்.]

அவன் வந்துஎன் உள்ளே
அகப்பட்ட வாறே

[அவன்—இப்படிப்பட்ட பெருமையும் வியாபகமும் கொண்ட சர்வேசுரன். வந்து என் உள்ளே—கீழே இறங்கி வந்து அடியேனுடைய உள்ளமாகிய சிற்றில்லத்தில். அகப்பட்டவாறே — சிக்கிக் கொண்டான் அல்லவா!]

'அகப்பட்டவாறே' என்பதிலுள்ள 'ஆறே' என்ற சொல், 'என்ன அதிசயம் இது' என்ற களிப்பைக் காட்டுகிறது.

சிவன்வந்து தேவர்
குழாமுடன் கூடப்
பவம்வந் திடநின்ற
பாசம் அறுத்திட்டு
அவன்எந்தை ஆண்டருள்
ஆதிப் பெருமான்
அவன்வந்தென் உள்ளே
அகப்பட்ட வாறே!

பாட்டில், 'அவன்' என்ற சொல் இரண்டுமுறை வந்திருக்கிறது. அவன், அப்படிப்பட்டவன் என்ற களிப்பினால் இப்படி இருமுறை 'அவன்' 'அவன்' என்று பாடுகிறார்!

இறைவனோடு கூடி அனுபவித்த இன்பத்திலே, அந்தப் பக்திப் பரவசத்திலே, முனிவர் உறவு மேலிட்டு நாயக நாயகி நிலையில் பாடுகிறார்!

அன்புள் உருகி
அழுவன்; அரற்றுவன்;

இறைவனுக்காக இதயம் அன்பினால் உருகுவதும், கண்கள் கண்ணீர் சொரிவதும், அரற்றிப் புலம்புவதும், ஒரு காதல் அனுபவம்! அதை அப்படிச் சொல்லுகிறார்.

அன்புள் உருகி
அழுவன்; அரற்றுவன்
என்பும் உருக
இராப்பகல் ஏத்துவன்

[என்பு—எலும்பு. ஏத்துவன்—துதித்துப் பாடுவேன்.]

என்பொன் மணியை,
இறைவனை ஈசனைத்
தின்பன், கடிப்பன்,
திருத்துவன் தானே!

[என் பொன்மணியை—என்னுடைய உடைமையான ஈசனும் பொன் மணியை. திருத்துதல் — மேவி அணைதல்.]

சிவமாகிய பேரின்பக் காதலனை எண்ணிப் பக்தி பரவசத்திலே பாடுகிறார் திருமூலர். மாணிக்க வாசகரும் தமது திருவாசகத்தில்,

"நெக்குநெக்குள் உருகிஉருகி
நின்றும்இருந்தும் கிடந்தும் எழுந்தும்
நக்கும்அழுதும் தொழுதும் வாழ்த்தி
நானாவிதத்தால் கூத்து நவிற்றிச்
செக்கர்போலும் திருமேனி
திகழநோக்கிச் சிலிர் சிலிர்த்துப்
புக்குநிற்பது என்றுகொல்லோ என்
பொல்லா மணியைப் புணர்ந்தே!"

என்று பேரின்ப நாட்டத்தோடு பாடுவதும், இதே பக்தி அனுபவந்தான்! இப்படியே ஆழ்வார்களும் பாடியிருக்கிறார்கள்.

யோகியும், ஞானியும், சித்தருமாகிய திருமூலர், பக்தி நிலையிலே நின்று, சிவக் காதலோடு பாடிய திருமந்திரம் இது!

அன்புள் உருகி
அழுவன் அரற்றுவன்
என்பும் உருக
இராப்பகல் ஏத்துவன்
என்பொன் மணியை
இறைவனை ஈசனைத்
தின்பன் கடிப்பன்
திருத்துவன் தானே!

# மனம்போனபடி



வடவெங்கடவன்

## பேரன் கேள்வி !

**பா**ட்டிக்கும் பேரனுக்கும் சுத்தம் துப்புரவு பற்றிய விவாதம் எழுந்தது. முன்னதில் பாட்டி வென்றாள்; பின்னதில் பேரன் ஜெயித்தான். இளைஞன் மாணவர் இல்லத்திலிருந்து விட்டு வந்தவன். காலையில் படுக்கையிலிருந்து எழுந்துகொள்வதே தாமதமாகத்தான். துயில் கலைந்ததும், கிட்டத்தட்ட படுக்கையில் இருந்தவண்ணமே காப்பி அருந்துகிற வழக்கம் அவனுக்கு. பாட்டி எதிர்த்தாள்.

''விழித்துக் கொண்டவுடன் உடனே பல் விளக்க வேண்டும். அதற்கப்புறம் தான் காப்பியோ வேறேதோ அருந்த வேண்டும். படுக்கையிலிருந்து எழுந்ததும் அதே வாயோடு காப்பி குடிப்பதா?''

''ஒரு நாளைக்கு ஒரு தடவை பல் விளக்கியாக வேண்டும். அப்படித் தானே பாட்டி? இதோ காப்பியானதும் போய்ப் பல் விளக்கி விடுகிறேன். போதுமல்லவா?''

''போடா, பைத்தியம். வீண் பேச்சுப் பேசாமல் பல் துலக்கி விட்டு வா.''

''வீண் பேச்சு இதில் என்ன இருக்கிறது பாட்டி? நான்தான் சொன்னேனே. ஒரு நாளுக்கு ஒரு முறையாவது பல் துலக்கவேண்டும். அதை எப்போது வைத்துக் கொண்டால் என்ன?''

''தோட்டி ஒருவன் இருக்கிறான். அவன் தினமும் ஒரு முறை குளிக்கிறான். அது எப்போது என்று சொல்.''

ஏது பாட்டி கணக்கு புதிரெல்லாம் தொடங்கி விட்டாள்!

''தினமும் வேலைக்குப் போகும் முன் குளித்தால் அவன் பைத்தியமாக இருப்பான். ஏனென்றால் வெகு சுத்தமாகக் குளித்துவிட்டு வேலைக்குப் போய் வீணில் அழுக்கெல்லாம் சேர்த்துக் கொண்டு மறுநாள் குளிக்கிற வேளை வரை அசுத்தமாகவா ஒருவன் இருப்பான்? புத்திசாலியாய் இருந்தால் தினமும் தோட்டி வேலையை முடித்துவிட்டு வீடு வந்ததும் குளிப்பான் இல்லையா?''

பையனுக்கு விளங்கியது. இரவு முழுதும் சேரும் வாய்த் துர்நாற்றத்தை அகற்ற வேண்டியது எப்போது என்று.

பாட்டி தோற்ற கதை இது:

பேரப் பையன் திடீரென்று தன் வாயினுள் விரலைவிட்டு என்னவோ செய்தான்.

''போய்க் கழுவிக் கொண்டு வா.''

பையன் பக்கத்திலிருந்த தண்ணீரில் ஆள்காட்டி விரலை மட்டும் கழுவி விட்டு வந்தான்.

''போய்க் கையைக் கழுவிக்கொண்டு வா, எச்சில் போக!''

பேரன் கேட்டான்: ''ஏன் பாட்டி நீ ஒவ்வொரு தரமும் சாப்பிட்டானதும் கையைத்தானே கழுவிக் கொண்டு வருகிறாய்? உடம்பு நெடுகக் குளித்து விட்டா வருகிறாய்?''

பாட்டி பேசவேயில்லை.

## நல்ல கூத்து !

**செ**ன்ற ஆண்டு சென்னையில் இருந்தேன் இரண்டு நாட்கள். நகரப் போக்குவரத்துப் பஸ்ஸில் சென்று கொண்டிருந்தேன். திடீரென்று ஓட்டுபவர் வண்டியைப் பிடித்திழுப்பது போல் நிறுத்தினார். மறு விநாடி கிளப்பப் பார்த்தார் ஊஹூம்! பஸ் அசையவே இல்லை.

பிரயாணிகள் எல்லாரும் என்ன ஆகுமோ என்ற தவிப்புடன் வண்டியோட்டியையே பார்த்தோம். கடைசியில் பல வண்டி சண்டிமாடாய் நடந்து கொண்டது. என்ன செய்தும் அது நகரவே இல்லை.



என் பக்கத்தில் வயதானவர் ஒருவர் அமர்ந்திருந்தார். அவரது காரசாரமான ஓர் வாக்கியத்தைப் பற்றியது தான் இந்தக் குறிப்பு.



எல்லாரும் இறங்க வேண்டியதாயிற்று. இறங்கினோம். அப்போது சாலையில் எங்கள் எதிரே நகரும் தபால் நிலைய வண்டி போயிற்று. அதைக் கிழவர் பார்த்தார், எங்கள் எல்லாரையும் போல. பிரயாணிகளில் அக்கம் பக்கத்தில் இறங்க இருந்தவர்கள் எல்லாரும் தம் நம்பிக்கையை இழந்து நடையைக் கட்டினர். சற்று எட்டிச் செல்ல வேண்டியவர்கள் மட்டும் எஞ்சியிருந்தனர், கிழவர் உள்பட.

கிழவரின் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்கிறாற் போல் எதிரே இன்னொரு வண்டி சென்றது. அது என்ன தெரியுமா? கடற்கரை மணல்வெளிக்குச் சிற்றுண்டி எடுத்துச் செல்லும் 'மோபைல் காண்டீன்' எனும் இயங்கும் சிற்றுண்டிச் சாலை. பார்த்ததும் கிழவர் அழகாகச் சொன்னார்:

''இயங்கும் தபால் நிலையம், நகரும் பலகாரக் கடை, நகரும் மருந்தகம், இயங்கும் புத்தகசாலை.... இப்படி நீளமாக, நிலைத்து இருக்க வேண்டியவை எல்லாம் நகரத் தொடங்க, ஓடிக் கொண்டிருக்க வேண்டிய பஸ்ஸும் மோட்டாரும் நிலைத்து நிற்க ஆரம்பித்து வருகின்றன. நல்ல கூத்து இது!''

**வாய்மைக்கொருவன்**

பௌராணிகரது ராமாயணப் பிரவசனம் நடந்து கொண்டிருக்கிறது. தசரத மன்னன் பற்றிய விளக்கம் எனக்குத் திருப்தியில்லை. பொதுவாகப் பலர் தசரதனை முன்பின் யோசியாமல் வாக்குக் கொடுத்து விட்டு விழித்தவன் என்ற கருத்துப் படுமாறு விளக்குகின்றனர்.



உண்மையில் மன்னனது குணச் சித்திரத்தை அப்படிக் கொள்ளலாகாது. கைகேயி கூனியின் போதனையில் புத்தி பேதலித்துக் கூடாதவற்றை வரமாகக் கேட்டால், அதற்கு மன்னவனு பிணை? அன்று போர்க்களத்திலே தேரின் அச்சு முறிந்த போது உதவிய ஆசைநாயகிக்கு அரசன் மனமுவந்து வரங்கள் வாக்களித்தான், நன்றிப் பெருக்கிலே. இப்படி மதிகெட்டுப் போய்ப் பேசுவாள் இவள் என்று அவன் கண்டானா? இல்லையேல் நிபந்தனையோடு வரம் தருவதாக வாக்களித்திருக்க வேண்டுமா?

தசரதனை யார் எப்படி எடை போட்டாலும் கம்பர் வாயிலாக ராமன் சொல்வதைத்தான் நாம் கொள்ள வேண்டும். தந்தையின் மறைவு கேட்ட மைந்தன் 'இனி வாய்மைக்கு ஆர் உளரோ?' என அரற்றுகிறான். சொன்ன சொல்லுக்காக உயிரைவிட்ட உத்தமன் தசரதன் என்ற அடிப்படைக் கருத்தையே விடுத்து, என்னவோ தெரியாமல் வாய் கொடுத்து விட்டுத் திண்டாடியவன் என்ற வழியில் பேசுவது அந்தப் பாத்திரத்துக்கு அநீதியாகும்.

ஏன் கைகேயி வரத்தைத் தருமாறு பிடிவாதம் செய்யும் போதே அவள் மூலமாகக் கம்பர் மன்னனின் வாய்மை அறத்தைத்தான் நினைவூட்டுகிறார். அவளே கேட்கிறாள்:

''முன்னே தந்தாய் இவ்வரம் நல்காய் முனிவா யேல்
என்னே மன்னா யாருளர் வாய்மைக்கினி''

வாய்மைக்கொருவன் தசரத மன்னன் அல்லவா?

**வளரும் வாரங்கள்!**

சஷ்டியப்த பூர்த்திக்கு அழைப்பு வந்திருக்கிறது.

அறுபது ஆண்டுகள் வாழ்ந்ததற்கு வாழ்த்துக் கொண்டாட்டம் வழக்கமாகி விட்டது. அறுபது என்ன கணக்கு? ஐம்பதாக இருக்கலாமே. நல்ல, முழு எண் ஆயிற்றே ஐம்பது?

ஒருகால், தமிழ் வருடங்கள் அறுபதையும் ஒரு தரம் பார்த்து விட்டதற்காகத்தான் பாராட்டோ, என்

னவோ? பிரபவ, விபவ முதல் கூடிய ஆண்டு வரையில் அறுபதையும் கண்டதற்கு விழா நடத்துவது பொருத்தம்தானே? வெள்ளைக்காரர்கள் ஆண்டுகளுக்கும் கைதிகளைப் போல எண்ணிக்கை தான் கொடுத்திருக்கிறார்கள். ஆனால் நம்மவர்கள் அறுபது பெயர்கள் கண்டு பிடித்து ஆண்டுகளுக்கு அளித்துள்ளனர்.



அதைத்தான் நாம் இன்று வாரங்களின் விஷயத்திலும் பின்பற்றி வருகிறோம் எனலாம். ஆண்டிலே உள்ள ஐம்பத்திரண்டு வாரங்களில் பெரும்பாலானவற்றுக்குப் பெயர்கள் ஏற்பட்டு விட்டன. கைத்தறி வாரம், வனவிலங்கு வாரம், சேமிப்பு வாரம், இப்படி வரிசையாக மரியாதை, ரேடியோ கைத்தொழில், குழந்தைகள் என்று பெயர்கள் வளர்ந்து வருகின்றன!

## மொழிபெயர்ப்புப் பிரச்னை

தமிழ் மொழியில் ஆங்கிலச் சொற்கள் பொருள்களின் பெயர்ச் சொற்கள் — அவ்வாறே கையாளப்பட வேண்டுமா? அல்லது பெயர்த்துப் புதுச் சொற்களை உபயோகிக்க வேண்டுமா?

கல்வி நிபுணர்கள் அறிஞர்கள் சேர்ந்து தீர்வு காண வேண்டிய பிரச்னை இது. எவ்வளவு பெரிய அறிஞர்கள் ஆக்கித் தந்த சொற்கள் ஆயினும் அவை பாமரனுக்குப் புரிய வேண்டும் என்பதில் ஐயமில்லை. சைக்கிள் — மோட்டார் போன்ற வழக்கில் உள்ள வார்த்தைகளை அப்படியே தமிழில் வடித்துக் கொள்ளலாம் என்பது ஒரு கட்சி. மறு சாரார் சொல்வது, இவற்றைத் தமிழாக்க வேண்டும் என்று.

உண்மையில் நாம் செய்ய வேண்டுவது இருசாரினர் சொல்படியும் ஆகும்.

சில சொற்களை அப்படியே தமிழ் எழுத்தில் எழுதி விடலாம். மற்றையவற்றுக்கு இணையான தமிழ் வார்த்தைகள் இயற்ற வேண்டும்.

சைக்கிளை முன்பெல்லாம் சிலர் துவிச்சக்கர வண்டி என்று சொல்லிப் பார்த்தனர். சொல் எடுபட வில்லை. மொழி பெயர்ப்பு எப்படி இருக்கக் கூடாது என்பதற்கு இது ஏற்ற எடுத்துக்காட்டு. சைக்கிள் நிலைத்து விட்டது. நான் சில ஆண்டுகள் முன் ஒரு வாடகை சைக்கிள் கடையில் சைக்கிளுக்குத் தங்கமான தமிழ்ப் பதம் ஒன்று கண்டேன். அது 'பை சைக்கில்' என்பதன் குருட்டு மொழி பெயர்ப்பு அல்ல. சுயமாகத் தமிழில் புனைந்த கருத்தமைந்த நல்ல சொல். 'மிதி வண்டி' தான் அது.

அதே போல் பேசும் படத் துறையில் 'தயாரிப்பாளர்' என்ற பெயரில் இருந்தவரைப் படாதிபதி என்று ஆக்கினார்கள். இதுவும் பொருள் பொதிந்த மரபோடு ஒட்டிய புதுப் பெயர்ச் சொல் ஆகும்.

கூடாத, வேண்டாத வகைக்கு இன்னோர் உதாரணம், பவுண்டன் பேனாவைச் சிலர் 'ஊற்றுப் பேனா' என்பதாகும். பெயர்ப்பு சரிக்கவில்லை. ஆங்கிலச் சொல்லின் வறட்டுத் தமிழாக்கம் இது. வெறுமனே பேனா என்றாலேயே போதும். தோய்த்து எழுதுவதைக் கட்டைப் பேனா அல்லது பேனாக் கட்டை என்றே சொல்லலாம். இறகு பேனா, பாவம், அநேகமாகச் செத்தே போய் விட்டது. ஆங்கிலப் பாடப் புத்தகத்திலே 'குவில்' என்ற சொல்லுக்குப் பொருளாக அது வாழ்ந்து வருகிறது.

## நினைப்பும் நடப்பும்

நகர சபைத் தலைவரைக் கொடியேற்று விழா நடத்திவைக்க அழைத்திருந்தனர். நானும் சென்றிருந்தேன். கொடியேற்றி வைத்தார். பின்னர் சொற்பொழிவும் ஆற்றினார்.

மறக்க முடியாத சொற்பொழிவு!

தட்டுத் தடுமாறிக் கொண்டே நின்றும் நிறுத்தியும் பேசினார்: "இந்தக் கொடிக்காக நாம் பட்ட கஷ்டங்கள், இன்னல்கள் எத்தனை எத்தனையோ! எவ்வளவோ குடும்பங்கள் இதனால் நாசமடைந்திருக்கின்றன. எத்தனையோ இளைஞர்களின் படிப்பு அரைகுறையாக நின்றது. ஏராளமான தொண்டர்களின் இரத்தம் ஆறாகப் பெருகியது. எத்தனை மனைவியர் விதவை ஆயினரோ இக்கொடியினால்! எவ்வளவு தாய்மார்கள் தம் ஒரே புதல்வரை இழந்தனரோ!"

இப்படிப் பேசிக் கொண்டே போனார். அவர் மேல் குற்றமில்லை; பேசத் தெரியவில்லை மனிதருக்கு.

தியாகங்களைக் குறிப்பிடுவதாக அவர் எண்ணம். ஆனால் பச்சையாகச் சொல்வதானால் அவர் கொடியைத் திட்டித் தள்ளி விட்டார்!

# நந்தவனம்

## ௯. விருப்பும் வெறுப்பும்!

திவான் பகதூர் செந்தில்நாயகம் அவர்களை ஒரு பெரிய வக்கீல் என்று சொன்னால் போதாது. ஒரு விசாலமான வக்கீல் என்று சொல்ல வேண்டும்.

செந்தில்நாயகம் அவர்களின் மனம் விசாலமானது. அவருடைய சட்டஅறிவு விசாலமானது. அவருடைய உருவம் விசாலமானது. புகழும் அப்படியே!

திவான்பகதூர் அவர்களுக்கு இத்தனை விரிந்து பரந்த செல்வாக்கு நிலவி வந்ததற்குக் காரணம், அவருடைய சட்ட ஞானந்தான் என்று பொது மக்கள் சொல்லுவார்கள். அவருடைய தொழில் வர்க்கத்தைச்சேர்ந்த மற்ற வக்கீல்களைக் கேட்டாலோ, இந்தச் செல்வாக்குக் காரணம் அவருடைய சட்ட ஞானமில்லை, உலக ஞானந்தான் என்று வாதாடுவார்கள்! ஆனால் உண்மை என்னவென்றால், செந்தில்நாயகம் அவர்களுக்கு எவ்வளவு சட்ட ஞானம் இருந்ததோ அதற்குக் கடுகளவும் குறையாத உலக ஞானமும் இருந்தது! மனிதர்களை எடை போடுவது, அவர்களுடைய விருப்பு வெறுப்புக்களைப் புரிந்து கொள்வது, அவர்களை நிதானத்தோடு கையாள்வது என்பதில் எல்லாம் அவருக்கு நிகர் அவரே தான்!

வல்லாள வேலர் ஓட்டமும் நடையுமாக வந்து 'வக்கீலையாவைக் கையோடு கூட்டிக் கொண்டு வரும்படி எஜமானனுடைய உத்தரவு' என்று சொன்னதும் மறு பேச்சில்லாமல் வக்கீல் ஐயா புறப்பட்டார். அப்படிப் புறப்படும்போதே நிலைமைகளை 'உய்த்து உணர' ஆரம்பித்தார்.

''என்னையா, சென்னையிலிருந்து ஒரு சித்திரக்காரர் வந்திருக்கிறார் என்று



சொல்லுகிறீர்களே, நமக்குத் தெரியாமல் யார் அப்படி?'' என்று கேட்டார் செந்தில்நாயகம்.

''யாரோ சிவகாமிநாதனும். அவருடைய மகனும். எல்லாம் மாளிகையிலே பேசிக் கொள்வதைத்தான் நான் சொல்லுகிறேன்!''

''சிவகாமிநாதனா? சரி சரி. அவருடைய மகனா? சரி சரி. வில்வநாதனா? சரி சரி. வில்வநாதன். பெயர் நன்றாக இருக்கிறதே!'''

இவ்வாறு சொல்லிக் கொண்டே வல்லாளவேலரின் முகத்தையே கூர்ந்து பார்த்தார். அந்த முகத்தில் விளையாடிய உணர்ச்சிகளைக் கவனித்துக் கொண்டே, அவற்றிலிருந்து வல்லாளவேலரின் விருப்பு வெறுப்புக்களைப் புரிந்து கொண்டு விட்டார்!

'' செண்பகநாயகி கோவிலிலுள்ள சித்திரங்களைப் புதுப்பிக்கப் போகிறார்களா? அது சரி. நம்முடைய பொன்னுத்துரை சௌக்கியமாக இருக்கிறாரா ஐயா! அவரைப் பற்றி ஒன்றும் சொல்லவில்லையே!...''

''அவருடைய சௌக்கியத்துக்கு என்ன குறைச்சல் வக்கீலையா! குதிரைச் சவாரி வழக்கம் போல் நடக்கிறது. பாவம்!''

இவ்வாறு சொன்னார் வல்லாளவேலர்.

''குதிரைச் சவாரியா? சரி சரி! வழக்கம் போலவா? சரி சரி. பாவம் என்கிறீர்களா? சரி சரி!'' என்று இழுத்தார் வக்கீலையா.

செந்தில்நாயகம் சிங்கம்புத்தூர் நிலைமையை இப்பொழுது நன்றாகப் புரிந்து கொண்டு விட்டார்! அவருடைய கார் புறப்பட்டது.

காலை ஒன்பது மணிக்குப் புறப்பட்ட கார் பன்னிரண்டு மணிக்குச் சற்று முன்பாகவே, சிங்கம்புத்தூர் மாளிகையை வந்தடைந்தது!

பந்தியில் உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டே ஜமீந்தாரின் திட்டங்களையெல்லாம் செவியிலே உட்கொண்டார் செந்தில்நாயகம்! சென்னையிலுள்ள ஜமீன் மாளிகையைச் சித்திரக் கல்லூரிக்காக எழுதி வைப்பது. அதற்கு வேண்டிய வருமானத்துக்காகச் சில சொத்



துக்களை நன்கொடையாகக் கொடுப்பது, முதலிய ஏற்பாடுகளுக்கு வேண்டிய சட்ட யோசனைகளை எல்லாம் சொல்லிவிட்டு ஜமீந்தாரிடம் விடைபெறும் போது பிற்பகல் நான்கு மணி. அப்போது தாமரைச் செல்வி கேட்டாள்:

''அதெல்லாம் சரி வக்கீல் மாமா! சித்திரக் கலையைப் பற்றி உங்களுடைய திருக்குறளில்என்ன சொல்லியிருக்கிறது? அதைச் சொல்லவில்லையே நீங்கள்?''

செல்வி இப்படிக் கேட்டதும் வில்வநாதன் திகைப்போடு பார்த்தான். ஜமீந்தார் சொன்னார்:

''என்ன வில்வநாதா? திருக்குறள் என்றதும் திகைப்பாக இருக்கிறதோ? திருக்குறளில் சித்திரக் கலையைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறது என்று நீ ஞாபகப் படுத்திப் பார்க்கிறாயாக்கும்! செல்வி சொல்வது அந்தத் திருக்குறளையில்லை!...''

''அப்படி யென்றால்? திருக்குறளிலும் பலவிதம் இருக்கிறதா என்ன?''

''நம்முடைய திவான் பகதூர் அவர்கள் ஒரு நவீன வள்ளுவர்! குறள் மாதிரி, குறளுக்குப் போட்டியாகக் கிறள் பாடுவார்கள்! திருக்குறள் மாதிரியே இருக்கும் அது! என்ன வக்கீல் ஐயா! சொல்லுங்கள். சித்திரக் கலையைப் பற்றி உங்களுடைய கிறள் ஒன்றைக் கேட்டால்தான், வில்வநாதனுக்கு இந்தக் குழப்பம் தீரும் — ''

''ஓ! அப்படியா! சரி சரி! தம்பீ! உங்களுடைய சித்திரக் கலையைப் பற்றி என்ன சொல்லியிருக்கிறது என்றால்,

''ஓவியம் என்பது
மாதெனில், வண்ணந்தூல்
காவியம் செய்யும்
கலை!''

ஜமீந்தாரும் தாமரைச் செல்வியும் சிரித்தார்கள். வில்வநாதனோ அந்த நவீனக் கிறளின் புதுமையிலே சிந்தனையை ஓடவிட்டு நின்றான்!

திவான்பகதூர் அங்கிருந்து புறப்பட்டுச் சென்ற பிறகும், அவருடைய வருகையினால் ஏற்பட்ட கலகலப்பு அந்த மாளிகை முழுதும் வியாபித்து நின்றது. வில்வநாதனுடைய மனத்தில் வக்கீலின் இனிய முகமும், அன்பான பேச்சும், அவருடைய அந்த வாஞ்சையும், சாமர்த்தியமும் நன்றாகப் பதிந்து விட்டன! நீண்ட நேரம் அவரைப்பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தான் மௌனமாக! அப்போது ஜமீந்தார் சொன்னார்:

''வில்வநாதா! என்னிடம் ஒரு கெட்ட பழக்கம் என்னவென்றால், ஒரு காரியத்தை நினைத்து விட்டால் அதை உடனே முடித்தாக வேண்டும். அது முடிகிற வரை வேறு ஒன்றும் ஓடாது எனக்கு! வக்கீல் வந்து இந்த ஏற்பாடுகளை யெல்லாம் செய்து முடித்த பிறகு தான் ஒரு நிம்மதி உண்டாயிற்று!''

இப்படிச் சொன்னார் அனவரதர். செல்வி அந்தப் பேச்சைத் தொடர்ந்து கூற ஆரம்பித்தாள்:

''அதுமட்டுமில்லை! எங்கள் அப்பாவுக்கு ஒரு விஷயம் பிடிக்கவில்லையென்றாலும், அதுவும் இப்படித்தான்! முடிவைக் காணுகிற வரையில் உறக்கம் வராது! என்னப்பா, நான் சொல்வது சரிதானே!''

இப்படிச் சொல்லி, ஒரு செல்லச் சிரிப்புச் சிரித்தாள் மகள்! தந்தைக்கு உள்ளம் எல்லாம் குளிர்ந்தது!

''செல்வி! குதிரைச் சவாரியைப் பற்றி நம்முடைய திவான் பகதூர் ஒரு கிறள் சொல்வாரே அது என்ன? அதை வில்வநாதனிடம் சொல்லேன்!'' என்றார் அனவரதர்.

''அப்பா! அதைச் சொன்னால வில்வநாதனுக்குத் திவான்பகதூரிடம் ஏற்பட்டுள்ள இந்த நல்ல அபிப்பிராயம் அப்படியே பறந்து போய் விடும்!''

''ஏன்! ஏன் அப்படி?'' என்று ஒரே திகைப்போடு கேட்டான் வில்வநாதன். செல்வி சொன்னாள்:

''சித்திரக் கலையைப் பற்றி இத்தனை உயர்வாகப் பாடியவர், குதிரைச்சவாரியைப் பற்றியும், அத்தனை உயர்வாகப் பாடினாரா என்று அவரிடம் வெறுப்புக் கொள்வீர்கள்!'' மகள் இப்படிச் சொன்னதும் ஜமீந்தார் குறுக்கிட்டுப் பேசினார்:

''அதெல்லாம் ஒன்றுமில்லை! வில்வநாதன் அப்படியெல்லாம் நினைத்துக் கொள்ள மாட்டான். வேடிக்கைப் பாட்டுத்தானே? சும்மாச் சொல்லம்மா அதை! தம்பி கேட்கட்டும்!''

தாமரைச் செல்வி அந்தப் பாடலைச் சொல்லத் தொடங்கினாள். அதற்கு ஒரு முகவுரையும் சொல்லிக் கொண்டாள்.

''எங்கள் ஏலமலை அத்தானுக்குக் குதிரைச் சவாரி என்றால் மிகவும் பிடிக்கும். அந்த அத்தானுக்காக வக்கீல் மாமா ஒரு கிறள் சொன்னார்கள்.

குதிரைச் சவாரி அறியார், அறியார்
மதுரத் தமிழின் மதிப்பு!''

ஜமீந்தாருக்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை. சொன்னார்:

''வில்வநாதா! குதிரைக்கும் தமிழுக்கும் இப்படி ஒரு முடிச்சுப் போட்டு விட்டார் பார்த்தாயா? வெறும் வேடிக்கைதான்! நிஜம் என்று நினைத்துக் கொள்ளாதே! வக்கீலுக்கும் குதிரை என்றால் பிடிக்காது! நம்மை யெல்லாம் போலத்தான் அவரும்!''

13 சிறந்த மூலிகைகள் கலந்து முதல்முதலாகதயாரிக்கப்பட்ட



## ஆயுர்வேதிக்

### பேஸ்ட்டும்,பௌடரும்

உலகத்தில் எல்லா டூத்பேஸ்ட்டும், பௌடரும் பற்களை சுத்தம் செய்கிறது. ஆனால், ஈறுகளை பலப்படுத்த என்னென்ன கலவைகள் அதில் சேர்க்கப்பட்டுள்ளன என்று யோசித்துப் பாருங்கள். முதல் முதலாக ஆயுர்வேதிக் 'விக்கோ வஜ்ரடன்தி' (பேஸ்ட்டும்,பௌடரும்) 18 சிறந்த மூலிகைகளினால் தயாரிக்கப்பட்டது. ஈறுகளை நன்றாக இறுகச்செய்து பற்களை மிகவும் பலப்படுத்துகின்றன. ஒரு முறை உபயோகித்து திருப்தியடையுங்கள்.

# விக்கோ வஜ்ரடன்தி

## பேஸ்ட்டும், பௌடரும்







VICCO LABORATORIES DADAR T.T., BOMBAY 14.

ஏஜெண்டுகள் :

மெஸர்ஸ் : ஆர். எல். கௌடர் அண்டு கம்பெனி, சென்னை-1
மெஸர்ஸ் : கே. ெஎஸ். கௌடர் அண்டு கம்பெனி, பெங்களூர்-9
மெஸர்ஸ் : என். தேசாய் கவுண்டர் அண்டு கம்பெனி, கோயமுத்தூர்-1

இப்படி அனவரதர் சொன்னதும் வில்வநாதனுடைய திகைப்பு அதிகரித்தது.

"என்ன சொல்லுகிறீர்கள் நீங்கள்? குதிரை யென்றால் உங்களுக்குப் பிடிக்காதா! இந்த மாளிகையில் எங்கு பார்த்தாலும் குதிரைப் படங்களாகவே சுவரெல்லாம் தொங்குகின்றனவே! செல்வியும் நீங்களும் குதிரையில் ஏறிச் செல்வது போல எத்தனையோ வர்ணப் படங்களை இந்த மாளிகையில் பார்த்தேனே நான்!"

ஜமீந்தாருக்கு முகத்தில் ஒரு குழப்பம் படர்ந்தது.

"தம்பி! அதெல்லாம் பழைய காலத்துச் சமாசாரம். இப்பொழுது அந்தப் படங்களை இங்கிருந்து அப்புறப் படுத்தும்படி சொல்லியிருக்கிறேன்!"

இப்படிச் சொன்னார் ஜமீந்தார். வில்வநாதன் கேட்டான்:

"ஏன் அப்படி? எதற்காக அந்தப் படங்களை எடுத்துவிட வேண்டும்! அற்புதமான வர்ணங்களிலே மிகவும் நேர்த்தியாக வரையப்பட்ட படங்களல்லவா அவை? அதிலும் ஏலமலை இளைய ஜமீந்தாரும் தாமரைச் செல்வியும், மரங்கள் அடர்ந்த சாலையிலே குதிரையில் ஏறிச் செல்வது போல ஒரு படம் பார்த்தேன். அபாரமாக இருக்கிறது. வர்ணக் கோடுகளின் ஓட்டத்தையும், சித்திரத்திலே நிழலும் ஒளியும் விரவி நிற்கிற அழகையும் பார்த்தால், அது என்னுடைய தந்தை வரைந்து கொடுத்த படமாகவே இருக்கும் என்று தோன்றுகிறது. இத்தனை நேர்த்தியான படங்களின் மீது உங்களுக்கு ஏன் இத்தனை வெறுப்பு? கலை ஆர்வம் நிரம்பிய நீங்கள் இருவரும் இப்படிப் பேசுவது ஆச்சரியமாக இருக்கிறதே...!"

வில்வநாதனுடைய குரலில் எல்லை கடந்த வியப்பு ஒலித்தது. செல்வி நிலைமையைச் சமாளிக்க முனைந்தாள்.

"வில்வநாதன்! சற்று முன்பு நான் சொன்னேன் அல்லவா? ஞாபகம் இருக்கிறதா? எங்கள் அப்பாவுக்கு ஒரு விஷயம் பிடிக்க வில்லை யென்றால் அவ்வளவு தான். அதன் முடிவைக் காணுகிற வரையில்—"

"செல்வி! என்ன சொல்கிறாய் நீ? உங்கள் அப்பாவுக்குச் சித்திரங்களிலே அத்தனை வெறுப்பா என்ன?"

"சித்திரங்களிலே வெறுப்பு இல்லை. அந்தக் குதிரைகளில்!"

"எந்தக் குதிரைகளில்?"

"பொதுவாகக் குதிரைகளில் அவர்களுக்கு இப்பொழுது ஒரு வெறுப்பு. அதனால்—"

*The following particulars regarding the ownership of the 'KALKI', the Tamil weekly newspaper, are published, as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules, 1956.*

FORM IV

1. *Place of Publication :* Madras
2. *Periodicity of its Publication :* Weekly
3. *Name of Printer & Publisher :* R. Ananthanarayanan

   *Nationality :* Indian

   *Address :* 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10
4. *Name of Editor :* T. Sadasivam

   *Nationality :* Indian

   *Address :* 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10
5. *Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital:*

   Sri T. Sadasivam, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Srimathi M. S. Subbulakshmi, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri R. Ananthanarayanan, 20, Dr. Guruswami Mudaliar Road, Madras-10. Sri K. Rajendran, 1, Fifth St., New Colony, Lake Area, Madras-34. Sri M. P. Kalyanasundaram, 3, Water Works Colony, Kilpauk, Madras-10. Sri V. Vaidyanathan, 3, Varadarajulu Naidu Road, Egmore, Madras-8. Sri K. R. Athmanathan, 20, Dr. Guruswami Mudaliar Road, Kilpauk, Madras-10.

1-3-82 *R. Ananthanarayanan*
*Publisher*

"நிஜக் குதிரைகளில் வெறுப்பு என்றால், அதற்குச் சித்திரக் குதிரைகள் என்ன செய்யும்? நச்சுப் பாம்புக்கு விஷம் உண்டு என்ற காரணத்தால் சித்திரத்தில் பாம்பே வரையக் கூடாதா? ஓவியப் பாம்புக்குக் கூட விஷம் உண்டா என்ன? வாழ்க்கையில் உள்ள விஷத்தை யெல்லாம் அமுதமாக மாற்றுவது தானே கலை? அதனால்தானே கலைக்கு இத்தனை உயர்வு! ஓவியத்தின் அடிப்படையான உண்மையல்லவா இது!"

இப்படிக் கலையின் நுட்பங்களைப் பற்றிப் பேச ஆரம்பித்தான் வில்வநாதன். செல்வி அப்பாவைப் பார்த்துச் சொன்னாள்:

"அப்பா! என்னுடைய சித்திரக் கலையின் முதலாவது பாடம் தொடங்கி விட்டது. வில்வநாதனிடம் நான் என்னுடைய கலைப் பாடங்களைப் படிக்க ஆரம்பித்து விட்டேன். ஆகையினால்

நீங்கள் உங்கள் அலுவல் அறைக்குப் போய் உங்கள் வேலைகளைக் கவனியுங்கள். நான் என்னுடைய ஆசிரியரிடம் -வில்வநாதனிடம் நஞ்சை அமுதமாக ஆக்குவது எப்படி என்ற அந்த வித்தையைத் தொடர்ந்து படிக்கிறேன்!''

மகன் இப்படிச் சொன்னதும், ஜமீந்தார் தமது முகத்தில் ஏற்பட்டிருந்தகுழப்பத்தை ஒரு புன்னகையினால் போர்த்திக் கொண்டு அங்கிருந்து நடந்தார். கள்ளமில்லாத ஒரு முனி குமாரனைப் போல மருண்ட பார்வையோடு, நிலைமையின் முழுப் பொருளும் புரிய முடியாமல் நின்றான் வில்வநாதன்! அப்போது செல்வி சொன்னாள்:

''ஓவிய ஆசிரியரே! ஏன் இத்தனை திகைப்பு உங்களுக்கு? அப்பாவுக்குக் குதிரைகளிடத்தில் இவ்வளவு வெறுப்பு எப்படி வந்தது என்று உங்களுக்குப் புரியவில்லை. அப்படித்தானே? அதெல்லாம் விரிவாகச் சொல்கிறேன் இன்னொரு நாள்! இப்பொழுதுஉங்களை ஒருசந்தேகம் கேட்க வேண்டும். கேட்டால் சொல்லுவீர்களா? சொல்லுவீர்களா நீங்கள்?''

தாமரைச்செல்வி இப்படி ஒரே கொஞ்சலாகக் கேட்டபோது, வில்வநாதன் அவளுடைய முகத்தில் நெளிந்த நாணங் கலந்த பெண்மையைக் கூர்ந்து பார்த்தான். இப்படிப்பட்ட ஓர் உணர்ச்சியை இதற்கு முன்பு அவன் சித்திரத்திலே வரைந்து பார்த்ததில்லை. செல்வியின் முகத்தையே இமை கொட்டாமல் பார்த்தான்.

''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?''

''ஒன்றுமில்லை. சற்று நேரத்துக்கு முன்பு நீ சில வார்த்தைகள் சொன்னாயல்லவா? அவற்றை இன்னொரு முறை சொல்லுகிறாயா?''

''எவற்றை?''

''உனக்கு ஒரு சந்தேகம் என்றும் அதை என்னிடம் கேட்க வேண்டும் என்றும் சொன்னாயே, அப்படி நீ சொன்ன போது, உன் முகத்தில் விளையாடிய அந்த உணர்ச்சிச் சாயல், அதை இன்னொரு முறை பார்த்தால் அப்படியே சித்திரமாக வரைந்து விடுவேன்!''

''நீங்கள் ஏதேதோ சொல்லுகிறீர்கள். எனக்கு வெட்கமாக இருக்கிறது!'' என்றாள் செல்வி.

''ஆம். ஆம். அதேதான். எனக்கு வெட்கமாக இருக்கிறது என்று சொன்னாயே, அதை இன்னொரு முறை சொல்லு. அந்த வெட்கம், அந்த நாணம் கலந்த ஓர் அழகிய பேதைமை, அதுதான்! அதைத்தான் சித்திரத்திலே வரைய வேண்டும் என்றேன். நான் இதுவரை இப்படி ஓர் உணர்ச்சிச் சாயலை வரைந்து பார்த்ததில்லை. எங்கள் அப்பாவுக்கு இப்படிப்பட்ட சாயல்களே பிடிக்காது!'' என்றான் வில்வநாதன்.

''என்ன? என்ன சொல்லுகிறீர்கள்? எங்கள் அப்பாவுக்குக் குதிரைகளிடத்திலே வெறுப்பு என்றால், உங்கள் அப்பாவுக்கு மனிதர்களிடத்திலேயே, மனித முகங்களிலேயே, வெறுப்பா?''

செல்வி இப்படிக் கேட்டதும் வில்வநாதன் ஒரு மோனப் பெருமூச்சு விட்டான். பிறகு சொன்னான்:

''செல்வி! அதையெல்லாம் பற்றி இப்பொழுது பேசாதே. உன் தகப்பனாருக்குக் குதிரைகளிடத்தில் எப்படி வெறுப்பு உண்டாயிற்று என்பதை இன்னொரு நாள் சொல்லுகிறேன் என்றாயல்லவா? அது போலவே நானும் இன்னொரு நாள் எங்கள் அப்பாவுக்கு மனித சமூகத்திடம் ஏற்பட்ட வெறுப்புக்களைப் பற்றி உனக்குச் சொல்லுகிறேன். சரிதானே....?''

இப்படியாகக் கல்வி தொடங்கிற்று, சிங்கம்புத்தூர் மாளிகையிலே! மாளிகைக்கு வெளியிலோ, வக்கீலையாவை வழியனுப்புவதற்காகச் சென்ற வல்லாள வேலர், துப்பாக்கி காணமற்போன

விஷயத்தைச் சொல்லிக் கொண்டே நடந்தார்.

"துப்பாக்கி காணாமற் போய்விட்டதா? சரி. வல்லாளவேலரே! சரி. அதை ஏன் இந்த நிமிஷம் வரை என்னிடம் சொல்ல வில்லை?"

"என்ன வக்கீலையா? நம்மையே இப்படி மடக்குகிறீர்களே! துப்பாக்கி ராத்திரிதான் போய்விட்டது! நேற்று ராத்திரி!"

"நேற்று ராத்திரி. சரி, சரி. துப்பாக்கி நேற்று ராத்திரி காணாமற் போய் விட்டது.சரி. எப்படிப் போயிற்று அது?"

"அது தெரியாமல்தானே வக்கீலையா உங்களிடத்திலே சொல்கிறேன்!"

"ஓ! அப்படியா அது? சரி. நேற்று ராத்திரி துப்பாக்கி காணாமற் போய் விட்டது. எப்படிப் போயிற்று என்று தெரிய வில்லை. சரி. அப்படியானால் வல்லாள வேலரே! நீங்கள் என்னோடு வண்ணார் பேட்டை வரை வரவேண்டியதுதான். இந்த விஷயத்தை உடனே அதிகாரிக்குத்தெரியப்படுத்த வேணும்!"

"வக்கீலையா! எது எது சட்டப்படி எப்படி எப்படிச் செய்ய வேணுமோ அது அது அப்படிச் செய்யுங்க நீங்க. நடந்ததை மட்டும் ஒளிக்காமல் சொல்லி விட்டேன் நான்!"

"சரி. நடந்ததை ஒளிக்காமல் சொல்லி விட்டீர்கள். நடந்தது என்ன? துப்பாக்கி! அது காணாமல் போய் விட்டது. அப்படித்தானே?"

பேச்சை இப்படி இழுத்துக் கொண்டே, கொஞ்சம் கொஞ்சமாக வண்ணார் பேட்டை வரை தம்முடைய காரிலேயே வல்லாள வேலரையும் இழுத்துக் கொண்டு வந்துவிட்டார் செந்தில் நாயகம். தம்முடைய வீட்டுக்கு வந்ததும் அறையிலே அவரை உட்காரும்படி சொல்லி விட்டு மேஜைக்கு எதிரே நாற்காலியில் உட்கார்ந்தவாறே மிகவும் நிதானமாக வக்கீல் கேட்டார்:

"வேணுலிங்கமோ, அவனுடைய ஆட்களோ, உங்களுடைய வீட்டுக்கு வரவில்லையே!"

வல்லாளவேலருக்குத் திவட்டியைக் காண்பதுபோலவும், மிதியடி ஓசை கேட்பது போலவும் ஒரு நடுக்கம் உண்டாயிற்று. ஆனாலும் உறுதியோடு சமாளித்துக் கொண்டு பதில் சொன்னார்:

"வேணுலிங்கமா! நம்முடைய வீட்டுக்கா! வக்கீலையா; அதுக்கு அவன் இன்னொரு பிறப்பெடுக்கணும்!"

"ரொம்ப சரி. சரி. உங்கள் வீட்டுக்கு வருவதற்கு வேணுலிங்கம் இன்னொரு ஜன்மம் எடுக்க வேண்டும்! எடுப்பான் அவன்! அப்படி எடுக்கக் கூடிய ஆசாமி தான் அவன்!"



ஏர் இந்தியா போயிங் விமானத்தில் இந்திய கிரிக்கெட் கோஷ்டியினர் பிப்ரவரி 1-ந் தேதி மேற்கு இந்தியத் தீவுக்குப் பிரயாணமானார்கள். கல்கத்தாவிலும், சென்னையிலும் நடைபெற்ற டெஸ்ட் பந்தயங்களில் இங்கிலாந்து கிரிக்கெட் கோஷ்டியைத் தோற்கடித்த புகழ்மாலையுடன் இந்திய கோஷ்டியினர் பெருமிதத்தோடு சென்றனர். முதல் டெஸ்டில் மேற்கு இந்தியக் கிரிக்கெட் கோஷ்டியினரும் திகைக்கும்படியாக இந்திய கோஷ்டியினர் திறமையுடன் ஆடி வருகிறார்கள்.

---

இப்படிச் சொன்னார் திவான்பகதூர் செந்தில்நாயகம்!

"வக்கீலையா! என்ன சொல்லுகிறீர்கள்?" என்று திவான்பகதூரைப் பார்த்துக் கேட்டார் வல்லாளவேலர்.

"வேணுலிங்கத்தைப் பற்றிச் சொல்கிறேனையா வல்லாளவேலரே! இதுவரை அவன் வரவில்லை என்றால் இன்னொரு முறை கட்டாயம் வருவான் அவன்! ஏனென்றால், ஜமீன் வட்டாரங்களில் உள்ள துப்பாக்கிகளையெல்லாம் பதிமுதல் செய்து வருகிறான் அவன்! யார் யாரிடம் என்னென்ன துப்பாக்கி இருக்கிறது என்று ஒரு கணக்குப் போட்டு வைத்திருக்கிறான். தினந்தோறும் ஜமீன் வட்டாரங்களிலிருந்து துப்பாக்கிகள் களவு போவதாகக் கலெக்டருக்குக்

'கம்ப்ளெய்ண்ட்' வந்த வண்ணமாக இருக்கிறது ஒரு மாதமாக!''

''அப்படியா?'' என்று கேட்கும்போதே வல்லாளவேலருக்குத் தலை சுற்றியது!

''ஆமாம் ஐயா! உங்களுடைய துப்பாக்கி எது, அதன் நம்பர் என்ன, அதில் எத்தனை குண்டுகள் அடைக்கலாம், எத்தனை 'ரவுண்ட்' சுடலாம் என்றெல்லாம் அவன் கணக்கு வைத்திருக்கிறான்!''

''வேணுலிங்கத்திடமா இந்தக் கணக்கெல்லாம் இருக்கிறது?''

''ஆமாய்யா! லைசென்ஸ் கொடுக்கிற ஆபீஸ்களிலே எத்தனை கணக்கு உண்டோ, அத்தனையும் அவனிடத்திலும் உண்டு. அடையாளம் பார்த்து அடையாளம் பார்த்து ஒவ்வொரு துப்பாக்கியாகக் கொண்டு போகிறான் அவன்! ஏன் அதற்காக இத்தனை கவலைப்படுகிறீர்கள்? துப்பாக்கி போனதோ போய் விட்டது! அந்தக் கணக்குகளைப் பற்றி ஏன் இந்தக் கவலை உங்களுக்கு?''

''வக்கீலையா! ராத்திரி அவன் கொண்டு போனது நம்முடைய துப்பாக்கியில்லை! அது ஏலமலைத் துப்பாக்கியாக்கும்!''

இப்படிச் சொன்னார் வல்லாளவேலர். திவான்பகதூர் திகைப்போ வியப்போ ஏதும் இல்லாமல், நிதானமாக மறுமொழி சொன்னார்:

''ஓ! ஏலமலைத் துப்பாக்கியா அது. சரி சரி. அவன் கொண்டு போனது உங்களுடைய துப்பாக்கியில்லை. அப்படியானால் உங்களுடைய துப்பாக்கி எங்கே இருக்கிறது?''

''அது அலமாரியிலே பத்திரமாக இருக்கு வக்கீலையா!''

''ஓ! சரி. உங்களுடைய துப்பாக்கி பத்திரமாக இருக்கிறது. அப்படியானால் கலெக்டரிடம் ஏன் இப்பொழுது நீங்கள் தகவல் கொடுக்க வேண்டும்? வேண்டியதில்லை. நாளை அல்லது நாளை மறுநாள் பார்த்துக் கொள்வோம்!''

''நாளைக்குப் பார்க்கலாமா? அப்படி என்றால் என்ன வக்கீலையா?''

''உங்களுடைய துப்பாக்கி காணாமல் போன பிறகு அந்தத் தகவலைக் கொடுத்துக் கொள்வோம். அது வரையில் காத்திருப்போம். இப்பொழுது என்ன அவசரம் அதுக்கு?''

''வக்கீலையா! அப்படியானால் வேணுலிங்கம் வருவானா நம்முடைய வீட்டுக்கு? நம்முடைய வீட்டுக்கு வருவானா? அப்படியும் நினைக்கிறீர்களா நீங்கள்?''

''வல்லாளவேலரே! இனிமேல் நீங்கள் இந்த ராத்திரி ஊருக்குப் போய்ச் சேர முடியுமா? முடியாது. ரயில் வண்டி இனிமேல் ஏது? கிடையாது. நாளைக்குத்தான் பார்க்கணும்!''

வல்லாளவேலர் பேச்சற்று மௌனமாக இருந்தார். வக்கீலிடம் உண்மைகளை மறைப்பதால், அவரும் தம்மிடம் இப்படிப் பேசுகிறாரோ என்று தோன்றியது அவருக்கு. சற்று நேரம் மௌனமாக இருந்து விட்டுப் பிறகு ஆழ்ந்த யோசனைக்குப் பின்னர், திவான்பகதூரிடம் உண்மையைச் சொல்லலானார் வல்லாளவேலர். இரவு வேணுலிங்கமும் கடலையாண்டியும் தம்முடைய வீட்டுக்கு வந்து துப்பாக்கியை வாங்கிக் கொண்டு சென்றதையும், தாம் தம்முடைய துப்பாக்கியை மறைத்து வைத்து விட்டு, அவர்களை ஏமாற்றி விட்டதையும் சொன்னார். செந்தில்நாயகம் புன்னகை செய்து கொண்டே பேச ஆரம்பித்தார்:

''வல்லாளரே! வேணுலிங்கம் கறுப்பா சிவப்பா என்று எனக்குத் தெரியாது. ஆனால் அவனைப் பற்றி நம்முடைய கட்சிக்காரர்கள் சொல்லுகிற செய்திகள் ஆயிரம் இருக்கும்! இந்தச் செய்திகளையெல்லாம் உற்றுக் கேட்டிருப்பதிலிருந்து அவனைப் பற்றி எனக்குச் சில அபிப்பிராயங்கள் ஏற்பட்டிருக்கின்றன. அவன் யாராக இருக்கக் கூடும் என்பது பற்றியும், நான் சில ஊகங்கள் செய்துவைத்திருக்கிறேன். அதனால்தான் இத்தனை உறுதியோடு சொல்லுகிறேன்! அவன் கட்டாயம் மறுபடியும் உங்களுடைய வீட்டுக்கு வருவான். உங்களுடைய துப்பாக்கியை எடுத்துக் கொண்டு போகிறவரை அவன் உங்களை விடப் போவதில்லை!''

மேஜையின்மேல் ஒரு குத்துக் குத்திக் கொண்டே செந்தில்நாயகம் உறுதியாகச் சொன்னார் இந்த வார்த்தைகளை! வல்லாளவேலர் கேட்டார்:

''வக்கீலையா! அப்படியானால் என்னுடைய துப்பாக்கி நம்பரும் அவனிடத்திலே இருக்குமா? அதிசயமா இருக்கே!''

''கட்டாயம் இருக்கும்! உங்கள் முன்னிலையில் நம்பரை அவன் சரி பார்க்காமல் எடுத்துப் போயிருக்கிறான். இப்பொழுது நிச்சயம் அவன் கண்டு பிடித்திருப்பான். ஏலமலைத் துப்பாக்கி என்பது அவனுக்குத் தெரிந்திருக்கும். இனிமேல் உங்கள் துப்பாக்கியைப் பிடிக்கிற வரை, முருகபாண்டிபுரத்தை முற்றுகை போட்டுக் கொண்டே யிருப்பான். விடமாட்டான்! அதற்குத் தகுந்தாற்போல் இன்றிரவு நீங்களும் ஊரில் இல்லை! அதுவும் நல்லதாய்ப் போயிற்று. அவனுக்கும் நல்லது. உங்களுக்கும் நல்லது!''

''அதென்ன அப்படி?''

''நீங்கள் வீட்டில் இருந்தால், நேற்று அவனை ஏமாற்றியதற்காக உங்

களை எளிதில் விட்டிருக்க மாட்டான். நீங்கள் வீட்டில் இல்லேயோ பிழைத்தீர்களோ...!''

வல்லாளவேலருக்கு மீசை துடித்தது. பற்களை 'நற நற' என்று கடித்தார். வக்கீல் சொல்லுவார்:

''அதெல்லாம் சரி. அந்தக் கோபம் எல்லாம் உங்களுக்கும் எனக்கும் சரி. அவன் இதையெல்லாம் பொருட்படுத்துகிறவனா? திருட வந்த பிறகு இதையெல்லாம் சட்டை செய்வானா அவன்? உங்களுக்குள், ஜமீந்தார்களுக்குள் ஒரு ஒற்றுமை இல்லே. ஒருவரையொருவர் காட்டிக் கொடுத்துக் கொண்டிருக்கிறீர்கள்! இருடக் கொடுப்பவர்களுக்குள் பகை இருந்தால், திருடனுக்குக் கொண்டாட்டந்தானே! ஆகையினால் அவனை யாராலும் பிடிக்க முடியாது!''

''உண்மையான பேச்சு வக்கீலையா! அதையெல்லாம் எண்ணித்தான் சிங்கம்புத்தூருக்கும் ஏலமலைக்கும் ஒரு முடிச்சுப் போடலாம் என்று பார்த்தேன். அதுக்கும் வழியில்லாமல் வில்வநாதன் வந்து முளைத்திருக்கிறான்! அதெல்லாம் இப்போ பேசினா எப்படி? என்னுடைய துப்பாக்கி என்ன ஆகப்போகுது, அதைச் சொல்லுங்க!''

''வல்லாளரே, நீங்கள் இன்றிரவு உங்கள் வீட்டில் இல்லாமல் போனதே நல்லது. வேணுலிங்கத்தின் குணம் எனக்குப் புரிந்திருக்கிறது. உங்கள் வீட்டுக்குச் சென்று உங்களைத் தேடுவான். நீங்கள் இல்லையென்று தெரிந்ததும், உங்களுடைய துப்பாக்கியை மட்டும் அலமாரியிலிருந்து எடுத்துக் கொண்டு நடந்து விடுவான். மற்றப்படி பெண்டு பிள்ளைகளுக்கோ, வேலைக்காரர்களுக்கோ எவ்விதமான தொந்தரவும் கொடுக்க மாட்டான்!''

வல்லாளவேலர் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் கைகளை உதறினார். விரல்களைச் சொடக்குப் போட்டுக் கொண்டார்.

''வக்கீலையா! இந்தத் துப்பாக்கிகளையெல்லாம் எடுத்துப் போய் இந்தப் பயல் என்ன செய்யப் போகிறான்! இதனாலே இவனுக்கு என்ன லாபம்?''

''வல்லாளரே! வேணுலிங்கத்தின் திட்டங்கள் என்ன என்று ஒரு வகையாக ஆராய்ந்து வைத்திருக்கிறேன்! என்றாலும், அவன் யார், அவன் பிறந்தது எந்த ஊர், எதற்காக அவன் இப்படிச் சில பணக்காரர்களை மட்டும் கொள்ளையடிக்கிறான் என்பதையெல்லாம் பற்றி, நான் ஊகித்துள்ள செய்திகள் உண்மைதானா என்று எப்படித் தெரியும்? எதையும் நன்றாகத் தெரிந்து கொண்டாலொழிய, அதுபற்றி நான் உறுதியாகப் பேசக் கூடாது. அந்தக் கவலையெல்லாம் உங்களுக்கு ஏன்? உங்களுடைய துப்பாக்கியை மறந்து விட்டு இன்று இரவைக் கழியுங்கள். பிறகு பார்த்துக் கொள்ளலாம்!''

திவான்பகதூர் இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போதே அவருடைய வேலைக்காரன் வேகமாக வந்து ஒரு கடிதத்தை வக்கீலையாவிடம் நீட்டினான்!

திவான்பகதூர் அதை வாங்கிப் பார்த்தார். பசையினால் நன்றாக ஒட்டப்பட்ட காகித உறையின் மீது குண்டு குண்டாக விலாசம் எழுதியிருந்தது.

''திவான்பகதூர் செந்தில்நாயகம் அவர்கள் மேற்பார்த்து வல்லாளவேலர் கையில் கொடுப்பது.''

என்று எழுதியிருந்தது. இடதுபுறத்தின் மூலையில் கடிதம் அனுப்பியவரின் பெயர் இருந்தது. அந்தக் குறிப்பையும் உரக்கவே படித்தார் திவான்பகதூர்.

அனுப்பியது : வேணுலிங்கம்.

புன்னகை செய்துகொண்டே மிகுந்த நிதானத்தோடு உறையைக் கிழித்து, அதற்குள் இருந்த கடிதத்தை எடுத்தார் திவான்பகதூர் செந்தில்நாயகம்! அப்படியே அதை வல்லாளவேலரிடம் கொடுத்தார்! (தொடரும்)


ரெமி
அழகு சாதனங்களில்
ஒன்று
டஸ்டிங்
பவுடர்
புஷ்பலதா

# வந்தது பெருநாள்

ஜமீலா

ரம்ஜான் பண்டிகை நாள் போல போலவென்று புலர்ந்தபோது காதர் சாஹேபின் உள்ளமும் கட்டுக்கடங்காத மகிழ்ச்சியினால் துள்ளியது! கடந்த பல மாதங்களாக அந்தத் திருநாளின் வருகைக்காகக் காத்துக் கொண்டிருந்தார் அவர். ''பெருநாளன்று ரஹ்மான் சாஹேபை எப்படியாவது நேருக்கு நேர் சந்தித்துத் தம் நெஞ்சில் கொந்தளித்துக் கொண்டிருக்கும் உணர்ச்சிகளையெல்லாம் கொட்டி விட வேண்டும்; அவரை மார்போடு மார்பு தழுவிக் கொண்டு மன்னிப்புக் கேட்க வேண்டும்.'' — இதயத்தின் அடித்தளத்தில் தவித்துக்கொண்டிருந்த இந்த எண்ணங்கள் காதரை வாட்டி வதைத்துக் கொண்டிருந்ததற்குக் காரணமில்லாமலில்லை!

பண்டாரவாடையில் பெரிய கடைத் தெருவில் அ. ஆ. க. கா. காதர் சாஹேப் நடத்திவந்த மளிகைக் கடைக்கு எதிர்வாடையில் ச. சா. த. தா. ரஹ்மான் சாஹேபின் விறகுக் கடை காட்சியளித்து வந்தது. வாணிபத் துறையில் 'முடிசூடா நவாபுகளாக'த் திகழ்ந்து வந்த இந்த இரண்டு பாய்மார்கள் ஒருவரோடு ஒருவர் நெருங்கிப் பழகி 'துலாவி' வந்த விதம் வியாபார உலகில் சர்வ சாதாரணமாகக் காணும் நிகழ்ச்சியேயாகும். காதரின் மளிகைக் கடையின் அந்தரங்க விஷயங்களை நன்றாக அறிந்தவர் ரஹ்மான். உள்ளூரிலும் அக்கரையிலுமுள்ள ரஹ்மானின் குடும்பத்தாரின் உள் விவகாரங்களைப் பரிபூர்ணமாகத் தெரிந்து வைத்தவர் காதர். லேவாதேவி போன்ற 'தருவான' காரியங்களில் பாய்மார்கள் இருவரும் ஒருவருக்கொருவர் ஒன்றுமே விட்டுக் கொடுத்ததுமில்லை. எந்தக் 'குல்வா பறக்கிற' விஷயமானாலும் அதைக் காதரிடம் கலந்தாலோசித்துத்தான் 'பைஸல்' செய்வார் ரஹ்மான். நண்பனுக்குத் தெரிவிக்காமல் எந்தக் கடுகளவு காரியத்திலும் காலை வைக்க மாட்டார் காதர்!

இப்படி உயிருக்கு உயிராகப் பழகி வந்த சிநேகிதர்களிடையே 'கண்ணாமூச்சி' ஆட்டத்தைப் பலே ஜோராகக் காலதேவன் ஆடிவிட்டதை நினைத்துப் பார்த்தால் 'வாழ்வில் நிகழாதது ஒன்றுமில்லை எம் மொலெபத்தினே!' என்ற குணங்குடி மஸ்தானின் ஞான மொழியின் தத்துவம் எளிதில் புரிந்து விடாமல் போகாது!

அந்தக் கண்ணாமூச்சி ஆட்டம் எப்படிப்பட்ட விபரீதத் திண்டாட்டத்தை உண்டாக்கி ஊராரின் கொண்டாட்டத்துக்கு இடம் கொடுத்து விட்டது என்ற நேர்முக வர்ணனையை விவரித்து விடுகிறோம்:

அன்று முதல் தேதி. வியாழக்கிழமை. சவுக்கு மரக் கட்டைகளை ஏற்றிக்கொண்டு சாரி சாரியாக வந்த கட்டை வண்டிகள் ரஹ்மான் சாஹேபின் விறகு வாடிக்கு முன்னால் மணிக்கணக்கில் நின்று கொண்டு தம் மளிகைக் கடை வியாபாரத்துக்கு இடைஞ்சல் விளைவித்துக் கொண்டிருப்பதை உணர்ந்த காதர் சாஹேப் எரிச்சலுடன் வழுக்கைத் தலையைப் பலமாகச் சொறிந்து கொண்டிருந்தார். கடைப் பையன்கள் திடீரென்று 'டிமிக்கி' கொடுத்துவிட்டதால் சாமான்களைத் தாமே எடை போட்டு நிறுத்தும், அவற்றைப் பொட்டலங்களாகக் கட்டிக் கொடுத்தும் வாடிக்கைக்காரர்களைத் திருப்திப் படுத்தும் பொறுப்பு அவர் தலையில் விழுந்தது. 'மூந்திரிக்கொட்டைகள்' போன்ற வாடிக்கைக்காரர்களின் நச்சரிப்பும், 'அவசரக் குடுக்கை'களின் சளசளப் பேச்சு ஒருபுறம் மதி மருளச் செய்யக் கட்டை வண்டிகளிலிருந்து இறக்கப்படும் மரக் கட்டைகள் எழுப்பிய 'தடால் தடா'லென்ற இடியோசை காதுகளைச் செவிடாக்க, அடம் பிடித்த மாடுகள், தெருவில் புரிந்த அட்டகாசத்தினால் வாடிக்கைக்காரர்கள் கடையை விட்டு நழுவி ஓட — இந்தச் சோகக் காட்சிகளைக் கண்டதும் காதரின் மூளை குழம்பியது. நடு ரோட்டில் நிறுத்திவைக்கப்பட்ட கட்டை வண்டிகளை, உடனே அப்புறப்படுத்துமாறு ஆள் மூலமாக ரஹ்மானுக்குத் 'தாக்கீது'' கொடுத்தனுப்பினார் காதர். ஆனால் பலன்தான் கிட்டவில்லை! மறுமுறையும் ரஹ்மானின் கடைக்கு வேறோர் ஆளை அனுப்பி வைத்தார். அந்த முயற்சியும் தோல்வியடைந்ததைக் கண்டதும் காதர் சீறிப் போனார். கைலியை இறுகக் கட்டிக் கொண்டு குல்லாவை எடுத்துத் தலையில் போட்டுக் கொண்டு மிதியடிக் கட்டைகள் கிடுகிடுக்க அனல் கக்கும் மூச்சை உதறிக் கொண்டு ரஹ்மானின் விறகு வண்டிக்கு முன்னால் போய் விறைப்புடன் நின்றார் காதர். 'இது என்ன கடைத் தெருவா? கால்நடைப் பவுண்டா? மாட்டுச் சந்தையான்னு கேட்கிறேன்?'' ரௌத்ராகாரமும் ஆவேசமும் கலந்த கனத்த குரலில் கர்ஜித்தார். வண்டிக்காரர்களின் தொல்லைகளையும் பிடுங்கலையும் சமாளிக்க முடியாது தத்தளித்துப்போன ரஹ்மான் தடுமாறிக் கொண்டு தாடியை நெருடிக் கொண்டிருந்த பொல்லாத வேளையில் காதர் எழுப்பிய கூச்சல் அந்த விறகுக் கடைக்காரரின் செவிகளைத் துளைத்தது. ரஹ்மானின் கண்கள் தீவட்டிகளாக மாறின. அங்கங்கள் வெடவெடவென்று அடித்துக் கொண்டன. கல்லாப் பெட்டியை விட்டுக் குபீரென்று எழுந்து நின்றார்.

''இருக்கிற நச்சரிப்புகள் போதாதுன்னு எவரெவரோ ஊளை வேறுவிட ஆரம்பிச்சுட்டாங்களா?'' — கறுவினார் ரஹ்மான்.

இதைக் கேட்டதும் காதரின் நரம்புகளில் குருதியோட்டம் பீறிட்டெழுந்தது. மூக்கு படபடத்தது. ''என்ன பாய். நாவை அடக்கிப் பேசும்.'' — ஆர்ப்பரித்தார் காதர்.

''உம்ம தவளைத் தொண்டையை முதலில் குறைத்துக் கத்தும்'' என்று கொக்கரித்தார் ரஹ்மான்.

''அடசட். நீர் ஒரு 'சைத்தான்'-பிசாசு'' என்று கர்ஜித்தார் காதர் கட்டுக்கடங்காத கோபத்துடன்.

''அட சட்! நீர் ஒரு 'ஹய்வான்'-மிருகம்-'' என்று தொண்டை கிழியக் கத்தினார் ரஹ்மான் ஆவேசத்துடன்.

நல்ல வேளையாகத் தெருவில் 'தமாஷா' பார்க்கக் குழுமி விட்ட ஜனக்கூட்டம் சரேலென்று படையெடுத்து இருவரிடையே 'கைகலப்பு' நிகழாதவாறு தடை போட்டு அந்தப் பகுதியின் நற்பெயரைக் காப்பாற்றி விட்டது!

துரதிருஷ்டவசமாக நடந்துவிட்ட இந்தச் சம்பவத்தின் காரணத்தால் காதரையும் ரஹ்மானையும் பிணைத்திருந்த நட்பின் அணை ஆத்திர வெள்ளோட்டத்தினால் உடைந்து விட்டது. பேச்சு வார்த்தைகள் நின்று விட்டன. நாளடைவில் ஒருவர் முகத்தில் மற்றவர் விழிக்கக் கூடாது என்ற கேவல முடிவுக்கும் அவர்கள் வந்து விட்டார்கள்!

மாதங்கள் மலர்ந்து உதிர்ந்து விட்டன.

எந்தத் தினத்தை எதிர் பார்த்தவாறு ஏங்கிக் கிடந்தாரோ, அந்த ரம்ஜான் பண்டிகை நாளும் வந்து சேர்ந்ததை முன்பே கூறிவிட்டோமல்லவா?

தம் பரம 'வைரியான' ரஹ்மான் சாஹேபை நேரில் சந்தித்து நிகழ்ந்து விட்ட செயலுக்கு மன்னிப்புக் கேட்க வேண்டும் என்ற வைராக்கியத்துடன் துயிலெழுந்த காதர் தம் 'லட்சியம்' நிறைவேறுவதற்காகப் பலத்த ஏற்பாடுகளில் மும்முரமாக முனைந்திருந்தார். பெருநாள் தொழுகையில் கலந்து கொள்வதற்கு ஊரிலுள்ள எந்த மசூதிக்கு ரஹ்மான் போகப் போகிறார் என்ற விஷயத்தை முன்கூட்டியே ஓசைப்படாது தெரிந்து கொண்டார். சந்திப்புக்கு அதுவே ஏற்ற இடம் என்று தீர்மானித்தார்.

இளஞாயிறு எழுகின்ற இன்ப வைகறையில் குளியலை முடித்துக் கொண்டு சுவையான பண்டிகைப் பலகாரங்களை உண்டு பசியாறி விட்டுப் புத்தம் புதிய உடைகளைத் தரித்துக் கொண்டு நைநாரலி தெருவிலிருக்கும் பெரிய பள்ளிவாசலுக்குப் போய்ச் சேர்ந்தார் காதர்.

மசூதியிலே குழுமியிருந்த நூற்றுக்கணக்கான பாய்மார்கள் கோமான், பாட்டாளி என்ற பாகுபாடின்றி, சீமான், பக்கிரி என்ற





மேடு தாழ்வின்றித் தோளோடு தோள் உரசிக் கொண்டு வரிசை வரிசையாக நின்று கொண்டு 'அல்லாஹு அக்பர் அக்பர்....அல்லாஹு' என்று அருளாளனின் பெருமையை ஒரு குரலாக எழுப்பிக் கொண்டு 'நமாஸி'லீடு பட்டிருந்த நேத்திரானந்தமான புனிதக் காட்சியைக் காணக் கண்கள் கோடி வேண்டும்!

தொழுகை முடிந்ததும் பாய்மார்கள் ஒருவரோடு ஒருவர் மார்போடு மார்பு இறுகத் தழுவிக் கொண்டு நல்வாழ்த்துக்களைப் பரிமாறிக் கொண்டிருந்த இன்பகர

மான வேளையில் ஆர்வம் மிகுந்த காதரின்விழிகள் ரஹ்மானின் இருப்பிடத்தைத் துழாவிக் கொண்டிருந்தன! கூட்டத்தில் முண்டியடித்துக்கொண்டு மண்டபம் எங்கும் தேடியும் காதரின் பார்வையில் ரஹ்மான் சிக்கவேயில்லை! உண்டான பெருத்த ஏமாற்றத்தினால் காதரின் நெஞ்சம் சஞ்சலித்தது. கால்கள் நிலை கொள்ளவில்லை. 'அருமையான தருணத்தை இழக்கக் கூடாதே!' — அங்கலாய்த்தது இதயம். வியர்வைத் திவலைகள் அரும்பிய வதனத்தை மேல் துண்டினால் துடைத்துக்கொண்டார். ''இனி அவர் விஜயம் செய்யும் இடங்களைத்தான் தேடிப் பார்க்க வேண்டும்'' என்ற எண்ணம் அவர் மனத்தில் குமிழியிட்டது. பல்வேறு தெருக்களிலும் சந்துகளிலும் வசிக்கும் ரஹ்மானின் நண்பர்களின் வீடுகளுக்குப் போய் விசாரித்துப் பார்த்தும் பலன்தான் கிடைக்காமற் போயிற்று! ரஹ்மான்சாஹேப் 'சாயா' குடிக்கும் டீக் கடைகளைச் சோதனை போட்டும் அவர் முயற்சிகள் வியர்த்தமாயின. காதரின் உள்ளம் சாம்பியது.

ஆழ்ந்த கவலையில் அமிழ்ந்து விட்ட அவர் இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தார். ரஹ்மான் சாஹேபின் வீட்டுக்கே நேராகப் போய் அவரைப் பார்த்து விட வேண்டும் என்ற திடமான எண்ணம் உண்டானதும் காதரின் நரம்புகளில் ஒரு புதிய உணர்ச்சி குபீரென்று பாய்ந்தோடியது. நடையில் விறுவிறுப்பு மிளிர்ந்தது.

துவாபு நடை போட்டுக் கொண்டு புறப்பட்ட அவர் ஷேக்மீரா சந்துக்குள் புகுந்து ரஹ்மான் சாஹேபின் வீட்டுப் படிக்கட்டுகளிலும் ஏறி விட்டார். மறு கணத்தில் ''சாஹேப் வீட்டில் இல்லை. எப்போது வீட்டுக்குத் திரும்புவார் என்று நிச்சயமாகச் சொல்வதற்கில்லை''—படீரென்று வீட்டுக்குள்ளிருந்து வெளிக்கிளம்பிய பெண் குரல் பளீரென்று செவிகளை மோதியதும் காதர் கலகலத்துப் போனார். தோல்வி மேல் தோல்வியே கிடைப்பதை மறுமுறை நினைத்துப் பார்த்ததும் அவர் சித்தம் துடித்தது.

வெய்யிலின் கொடுமை உடலை வாட்டி வதைக்க, ஏமாற்றமும் ஏக்கமும் நெஞ்சைப் பிழிந்தெடுக்க மதி மருண்டு போன காதர் தெருவோரத்திலிருந்த இடிந்த மதகின் மேல் தொப்பென்று உட்கார்ந்துவிட்டார். சோகம் கப்பிய அவர் முகம் தொங்கி விட்டது. நெடுமூச்சு நெஞ்சுக் கூட்டை உலுக்கியது. விழிகள் கழன்றன. வானத்தை நோக்கி இரு கரங்களை நீட்டி, ''யா அல்லாஹ்! உன்னைத் தஞ்சமடையும் பாவிகளிலும் பெரும் பாவியைக் கூட மன்னித்து அருள்புரிபவன் நீ ஆச்சே! இந்த எளியவன் மேல் ஒரு அணு அளவு கருணை கூட நீ காட்டக்கூடாதா? அப்படிப்பட்ட மகா பாதகனா நான்!'' உணர்ச்சியுடன் மனமொடிந்து 'ஓ'வென்று பிரலாபித்தார் காதர்.

மதகை விட்டு எழுந்தார்.

அக்கரையில் யாவற்றையும் இழந்துவிட்டுத் தாய் நாட்டின் மண்ணைத் தேடி வரும் அகதி போல் உச்சி வேளை வெயிலில் தள்ளாடித் தள்ளாடிக் கொண்டு தம் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்ததுதான் தாமதம். அங்கே அவர் கண்ட காட்சி காதரை ஸ்தம்பிக்க வைத்து விட்டது! எந்த மனிதரைக் காலை முதல் கால் கடுக்க, உள்ளம் வெதும்பத் தேடி அலைந்தாரோ அந்த சாஹேப் தம் வீட்டுத் திண்ணையில் வெற்றிலைச் சருகை மடித்து வாயில் போட்டுக் கொண்டு சாவதானமாக அமர்ந்திருப்பதைப் பார்த்ததும் காதருக்குத் தூக்கிவாரிப் போட்டது! திண்ணையை விட்டெழுந்த ரஹ்மான் சாஹேப் புன்முறுவல் பூத்த வதனத்துடன், ''அஸ்ஸலாமு அலைக்கும் காதர் பாய்! ஈத் முபாரக்!'' என்று வாழ்த்தின போது காதர் விதிர் விதிர்த்துப் போனார்.

கனிந்த குரலில் பேசலானார் ரஹ்மான்.

''அந்தக் காலத்தில் நான் நடந்து கொண்ட தவறான முறைக்கு உத்தமராகிய உங்களை நேரில் கண்டு மன்னிப்புக் கேட்க வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடன் நாட்களைத் தள்ளி வந்த நான் இந்தப் பெருநாளின் வருகைக்குத் தனியாய்த் தவித்துக் கொண்டிருந்தேன். இப்பு கல்தான் தெருவிலிருக்கும் சின்ன மசூதிக்கு நீங்கள் போகிறது வழக்கம் என்று கேள்விப்பட்டு உங்களை அங்கே சந்திக்கலாம் என்ற பூர்ண நம்பிக்கையுடன் காலையில் கிளம்பினேன்! பள்ளிவாசல் எங்கெங்கேயோ தேடிப் பார்த்தும் நீங்கள் அகப்படவில்லை. வழக்கமாகக் காப்பியைத்தான் நீங்கள் அடிக்கடி குடிப்பதை நான் பார்த்திருப்பதால் ஊரிலுள்ள பல காப்பி ஹோட்டல்களையெல்லாம் துழாவித் துழாவிப் பார்த்தும் நான் கண்ட பலன் தோல்விதான்! ஒருகால் நண்பர்களைச் சந்திப்பதற்குப் போயிருப்பீர்களோ என்று சந்தேகித்து உங்கள் ஆப்த 'தோஸ்த்'களின் இல்லங்களுக்கெல்லாம் நடை போட்டும் பயனில்லாமற் போய்விட்டது'' என்றார்.

''அப்படியா!'' — காதரின் தலை சுற்றியது. சிரத்திலிருந்து நழுவிய குல்லாவைச் சரிப்படுத்திக் கொண்டார். தொடர்ந்தார் ரஹ்மான்: ''பளைபளைக்கும் வெயிலில் நன்றாக மாட்டிக் கொண்ட நான் பஸ் ரோட்டிலிருந்த வேப்ப மரத்து நிழலில் ஒதுங்கி நின்று கொஞ்ச நேரம் யோசிக்கலானேன். 'சரி, உங்கள் வீட்டுக்கே நேராகப் போய் லட்சியத்தை ஏன் பூர்த்தி செய்து கொள்ளக் கூடாது?'—இந்தக் கடைசி ஆசை என் கழுத்தைப் பிடித்துத் தள்ளியது.

''அல்லாஹுத்தாலாவின் மேல் பாரத்தைப் போட்டு விட்டு நேராக இங்கே வந்து சேர்ந்தேன். 'பாய் வெளியே போயிருக்கிறார். அநேகமாகச் சீக்கிரம் திரும்பிவிடுவார்' என்று வீட்டுக்குள்ளிருந்து வந்த தெம்பு தரும் குரல் எனக்குச் சற்று ஆறுதலளித்தது!

''உங்கள் வருகைக்காக ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்துக் கொண்டு இந்தத் திண்ணையில் குந்திக்கிட்டிருந்தேன். நீங்களும் வந்து சேர்ந்தீர்கள்! என் அன்பார்ந்த காதர் பாய்! அந்தக் காலத்தில் நடந்து விட்ட அசம்பாவித சம்பவத்தை அடியோடு மறந்துவிட்டு முறைதவறி நடந்துவிட்ட இந்தப் பாவியை மன்னித்துவிடுங்கள்.''-மேலெழுந்த உணர்ச்சி பொங்கி வழிய, நாத் தழுதழுக்கக் கதறிக் கொண்டு ரஹ்மான் தம்மை மார்போடு மார்பு இறுகத் தழுவிக் கொண்டதும் காதர் அசந்துபோய் விட்டார்.

''அந்தச் சம்பவத்துக்குச் சரிநிகர் பொறுப்பாளியான இந்தக் குற்றவாளியையும் நீங்கள் மன்னித்துவிடுங்கள், ரஹ்மான் பாய்!''— என்று மிழற்றிக் கொண்டு பொல பொலவென்று விழிநீர் சொரிந்தார் காதர்சாஹேப்!

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




**ஸினிக்கு ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர்நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.**

கால்கேட் உடனடியாக வாய் துர்நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினும் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிசோதனைகள் நிரூபித்தன்னன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு! சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினும் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் விசேஷமும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர்நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் நீடித்திருக்கும் நறுமணத்திற்காக, குழந்தைகள் ஆர்வமுடனேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது!

- ✔ துர்நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.




பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.

CCL 73 QT-TAM



# மாடப்புறா

காந்தன்

பி. வி. என். புரொடக்ஷன்ஸாரின் தயாரிப்பான ''மாடப்புறா''வைப் பற்றி எழுது முன் வித்தை உணர்ச்சிதான் ஏற்படுகிறது. பல ஆண்டுகளாகத் தயாரிப்பில் இருந்த இப்படத்தைப் பலர் சற்று அதிகமாகவே எதிர்பார்த்திருப்பார்கள். மாடப்புறா ஒரு பிரமாதமான கதை என்று படத்தைப் பற்றிய பத்திரிகைக் குறிப்புகளில் கண்டேன். ஆனால் படம் பார்த்ததும் அது ஒரு குழப்பமான கதை என்று தெரியவந்தது. பிரபல நடிகர்களான எம். ஜி. ராமச்சந்திரன், எம். ஆர். ராதா, பி. சரோஜா தேவி, வசந்தி, வி. ஆர். ராஜகோபால், எம். என். நம்பியார் ஆகியவர்கள் நடித்திருக்கிறார்கள். என்னத்தையெல்லாமோ எதிர்பார்த்துக் கொண்டு ஆவலோடு போன எனக்கு எதிர்பாராதவிதமாக நல்ல ஏமாற்றம் கிடைத்தது!

''மாடப்புறா''வின் திரைக்கதைக் குழப்பத்தைப் போல் நான் இதுவரையிலும் எந்தப் படத்திலும் பார்த்ததில்லை. மயிலாப்பூர் அறுபத்து மூவர் திருநாள், திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள் கோவில் சொர்க்கவாசல் உற்சவம் ஆகிய மாபெருங் கூட்டங்களில் ஒரு குறிப்பிட்ட மனிதரைத் தேடிப் பிடிப்பது எவ்வளவு சிரமமோ அவ்வளவு சிரமமாயிருக்கிறது திரைக் கதையைப் புரிந்து கொள்வது.

மிராசுதார் மகன் ராமுவும், அநாதைப் பெண் வசந்தாவும் ஒருவரையொருவர் நேசிக்கின்றனர். வக்கீல் வரதராஜன் ராமுவின் சொத்துக்களைப் பொய்யான உயிலின் உதவியைக் கொண்டு பறிக்க முயன்று, தம் மகளை ராமுவுக்கு மணம் முடித்து வைக்கத் திட்டமிட்டுகிறார். ஆனால் வக்கீல் வரதராஜனின் மகள் ராமுவின் தம்பி மூர்த்தியை நேசிக்கிறாள். தன் தம்பியின் காதலியை மணக்க விரும்பாத ராமுவுக்கும் வக்கீலுக்கும் வாக்குவாதம் முற்றுகிறது. அன்றிரவு வக்கீல் வரதராஜன் கொலை செய்யப் படுகிறார். தம்பி மூர்த்தியின் வாழ்வுக்காக ராமு அந்தக் கொலைக் குற்றத்தைத் தான் ஏற்றுக் கொள்கிறான். அதன் பயனாகக் காட்டில், பாம்புகள் வாழும் குகையில் வசந்தியுடன் காதல் புரியவும், வீட்டிலிருந்து 'டிபன் செட்'டில் சாப்பாடு வரவழைத்துக் காதலியுடன் சாப்பிடவும் வாய்ப்புக் கிட்டுகிறது! உண்மைக் குற்றவாளியைக் கண்டுபிடிக்கும் முன் மீனு என்ற ஓர் ஏழைப் பெண்ணின் அன்பும் ராமுவுக்குக் கிட்டுகிறது. வில்லனின் சதிகளும் வளர்ந்து வருகின்றன. வசந்தியைக் காதலித்த ராமு, மீனுவுக்குத் தாலி கட்ட நேருகிறது. இதனால் சித்தசுவாதீனத்தை இழந்த வசந்தி வெடிகுண்டு விபத்தில் இறக்கிறாள். ராமு கொடிய விஷப்பாம்பு கடித்தும் மூலிகை சிகிச்சையினால் பிழைத்து விடுகிறான்.

வக்கீல் வரதராஜன் குத்தப்பட்டதைக் கண்டு நான் திகைக்கவும் இல்லை; திடுக்கிடவும் இல்லை; வருந்தவும் இல்லை. ஆனால் இதே மாதிரி எல்லாப் பாத்திரங்களையும் யாராவது தீர்த்துக் கட்டியிருக்கக் கூடாதா என்று நான் ஏங்கினேன்!

எம். ஜி. ராமச்சந்திரன் ராமுவாக வருகிறார். தான் செய்யாத ஒரு கொலைக் குற்றத்துக்காக மறைந்து வாழும் பாத்திரம் அவருக்குப் பல படங்களில் பழக்கமானதுதான். காதலிக்கவும், துயரக் கண்ணீர் விடவும், துன்

பத்தில் உருகவும், வில்லனின் ஆட்களுடன் கைகலக்கவும் அவருக்குச் சந்தர்ப்பங்கள் கிட்டியும் ஏனோ நடிப்பு சிறக்கவில்லை. 'தாய் சொல்லைத் தட்டாதே' படத்தில் எம். ஜி. ஆரிடம் கண்ட மெருகையோ, நாசூக்கான நடிப்பையோ ''மாடப் புறா''வில் காண முடியவில்லையே! தவறு அவருடையதல்ல. அசட்டுத் திரைக்கதை தான் கெட்டதுமல்லாமல் அவரையும் கெடுத்து விட்டது!

எம். ஆர். ராதா இந்தப் படத்தில் ஓர் அதிகப் பிரசங்கி வேலைக்காரனாக வருகிறார். ஏரே கத்தலாய்க் கத்தி, வசனத்தை உளறிக் கொட்டுகிறார். என்ன வேதனையோ! இம் மாதிரியே ராதா கத்த ஆரம்பித்தால், எம். ஆர். ராதா இராத படம் இராதா என்று ரசிகர்கள் ஏங்க ஆரம்பித்து விடுவார்கள்.

மீனுவாக வரும் சரோஜா தேவியும் கத்துகிறார். அது ஏன் என்று விளங்கவில்லை. மீனு தன் தாயாரின் பேச்சைக் கூடவே பேசுவதும், ராமுவுக்கும் கூடக் கூடப் பேசுவதும் என்ன கருத்தில் அமைக்கப்பட்டனவோ! அசடு வழிகிறது. நல்ல நடிப்பினாலும், முக பாவங்களின் சிறப்பினாலும் ரசிகப் பெருமக்களின் அபிமானத்தையும் ஆதரவையும் பெற்றிருக்கும் சரோஜா தேவி இனியாவது இது போன்ற அசட்டுக் கதாபாத்திரங்களை ஏற்காமல் இருப்பாராக!

வசந்தி பிரதம பாகத்தில் நடித்தும் பயனற்றுப் போய் விட்டது. பெரிய ஏமாற்றத்துக்குத் தாம் ஆளானதுமல்லாமல் நம்மையும் ஏமாற்றத்துக்கு ஆளாக்கி விட்டார். பாவம்! கதையின் கோளாறுதான் காரணம். வசந்தியின் பாத்திரமே சரியாக உருவாகவில்லை.

வி. ஆர். ராஜகோபால் வித்தைக்காரனாக வருகிறார். அநாதைப் பெண்ணுக்கு அண்ணனாக வந்து, உண்மைத் தங்கையை எதிர்பாராத விதமாய்ச் சந்திக்கிறார். (இதெல்லாம் எப்படிச் சாத்தியமாயிற்று என்று கேட்காதீர்கள்!) தங்கையின் வாழ்வைக் குலைத்து விட்டதற்காகக் கதறும் போது அவர் நடிப்பு உருக்கமாயிருக்கிறது. கடைசிக் காட்சியில் பாம்புக் கடியுண்ட ராமுவைக் காப்பாற்றித் திரைக் கதையைக் கொன்று விடுகிறார்!

திரைக்கதை நம்பியாரையும் விட்டு வைக்க வில்லை. 'நம்பியாரை நம்பிப் படம் பார்க்கப் போகலாம்' என்றிருந்த நம்பிக்கையையும் ''மாடப்புறா'' தகர்த்து விட்டதே!

படத்தின் ஒளிப்பதிவும் உபயோகமற்றதாய்ப் போய் விட்டது மிகவும் வருத்தத்துக்கு உரியது.

மீனுவின் தாய், ராமுவோடு அவள் பேசியதைச் சந்தேகித்துத் தலையில் அடித்துக் கொண்டு இறந்து போவது மிகவும் பரிதாபப் பட வேண்டிய காட்சி! (பரிதாபம் காட்சிக்காக அல்ல; கதை அமைப்புக்காகத்தான்) இந்தக் காட்சியைக் கண்டு யாரேனும் உருகுவார்கள் என்று படத் தயாரிப்பாளர்கள் எதிர்பார்த்திருந்தால் அது மிகப் பெரிய அறியாமையாகும்!

வக்கீல் மகள் அமுதாவைப் பற்றிப் படத்தில் ஒன்றும் விவரமாயில்லை. திரைக் கதையின் முக்கியமான பகுதியைத் தெளிவாக்காதது பெருந் தவறு. வசந்தியைப் பற்றிய விவரமும் காணவில்லை. ஆரம்பக் காட்சியில் வரும் மலைக் குகையும், பாம்புகளும் ஏன் வருகின்றன என்று புரியவில்லை. ராமு வசந்தியோடு காதல் புரிய மலைக் குகையை நாடுவானேன்! படத்தில் பயங்கரக் காட்சிகள் வர வேண்டும் என்பதற்காக இதைச் சேர்த்திருக்கிறார்களோ!

பாட்டு ஒன்றுகூட நன்றாயில்லாமற்போனது ஒரு பெரிய துரதிர்ஷ்டமாகும்.

''மாடப்புறா'' என்ற பெயர் ஏன் வைக்கப்பட்டிருக்கிறது என்று யாரும் கேட்க மாட்டார்கள். பொருத்தமில்லாத எத்தனையோ அம்சங்கள் கொண்ட ஒரு படத்துக்குப்பெயர் மட்டும் எப்படிப் பொருத்தமாக அமைந்து விடும்! தமிழ்ப் படங்கள் முன்னேற்றமடைந்து வரும் இந்நாளில் இம்மாதிரிப் படமும் வெளியாவதைக் கண்டு எப்படிச் சகித்துக் கொண்டிருக்க முடியும்?

தமிழர்கள் எங்கு சென்று வாழ்ந்தாலும் தமிழை மறப்பதில்லை. தமிழ்ப் பணியைத் தம் பணிகளில் ஒன்றாக்கித் தமிழுக்குச் சேவை செய்தவண்ணம் இருக்கிறார்கள். பம்பாய், தில்லி, கல்கத்தா முதலிய நகரங்களில் நடத்தி வருவது போலவே, அஹமதாபாத் நகரத்தில் வாழும் மக்களும் 'தமிழ் மன்றம்' ஒன்று தொடங்கி நடத்தி வருகிறார்கள். நல்ல நூல் நிலையம் ஒன்று நிறுவும் நோக்கத்துடன், முத்தமிழில் ஒன்றான நாடகத்தையே நிதி உதவிக்காக மேடையேற்றினர். கல்வி உதவி ஆசிரியர் திரு ரா. வீழிநாதன் எழுதிய 'மனோரமா' வைத் தங்கள் மன்ற அங்கத்தினர்களைக் கொண்டே திறம்பட நடிக்கச் செய்தனர். நாடகத்தின் மூலம் வரும் வரவான தொகை நூல் நிலையத்துக்குப் பயன்படப் போகிறது என்பது மிகவும் மகிழ்ச்சி தரும் விஷயமாகும்.





ஏ. எம். எம். தருமநிதியிலிருந்து அம்பத்தூரில் நிறுவப்பட விருக்கும் ஸர் ஐவன் ஸ்டெட்போர்ட் ஆஸ்பத்திரிக்கு லார்ட் ப்ளௌடன் பிப்ரவரி பத்தாந் தேதி அஸ்திவாரக்கல் நாட்டினார். இந்த விழாவில் பங்கெடுத்துக் கொண்ட தொழிலதிபர் திரு ஏ. எம். எம். முருகப்ப செட்டியார், ஸர் ஐவன் ஸ்டெட்போர்ட், ஸர் ஏ. ராமசாமி முதலியார், லார்ட் ப்ளௌடன், திரு ஏ. எம். எம். அருணாசலம் ஆகியவர்களை மேலே படத்தில் காணலாம்.



பம்பாய் ராஜ ராஜேசுவரி பரத நாட்டிய கலாமந்திரத்தின் மாணவி சுசீலாவின் பரத நாட்டிய அரங்கேற்றம் பிப்ரவரி மாதம் இருபதாம் தேதி வெகு சிறப்பாக நடைபெற்றது. குமாரி சுசீலா திரு பி. எஸ். ராமன் அவர்களின் புதல்வி. இச்சிறுமி கோவிந்தராஜபிள்ளை மகாலிங்கம் பிள்ளை ஆகியோரிடம் பரதநாட்டியம் பயின்றவள். சிறப்புற நடனமாடிய இந்தச் சிறுமியைச் சபையோர் யாவரும் வியந்து பாராட்டினர்.



வானொலி நாடகப் போட்டியில் இவ்வாண்டு 'என்ஜினீயர்' என்ற தமிழ் நாடகம் எழுதி முதல் பரிசு பெற்ற மாணவர் நீல பத்மநாபன்.



அம்பத்தூரில் நிர்மாணமாகப் போகும் அல்ட்ரா மரைன் ப்ளூ தொழிற்சாலையைப் பார்வையிட அதன் டைரக்டர் ஜட்டோலிவர்கஸ் சென்னைக்கு விமானத்தில் வந்து சேர்ந்தார். இந்தத் தொழிற்சாலை இவ்வருட மத்தியில் உற்பத்தியைத் தொடங்குமாம். டைரக்டர் ஜட்டோலிவர்கஸ் அவர்களை டைரக்டர்கள் திரு எஸ். ஆர். அய்யங்காரும், திரு என். டி. அய்யங்காரும் விமான நிலையத்தில் வரவேற்றனர்.





# சிறப்பு மிக்க சான்றோர்கள்

## ஸர் பிட்டி. தியாகராய செட்டியார்

சென்னை நகரின் ஒரு பகுதிக்கு முன்னாட்களில் மாம்பலம் என்றே பெயர் வழங்கி வந்தது. மாம்பலம் பிறகு இரு துண்டுகளாகி ஒன்று பழைய மாம்பலம் என்றும், மற்றொன்று புது மாம்பலம் என்றும் பெயர் பெற்றது.

இன்று அநேகமாகச் சென்னைவாசிகள் எல்லாருக்கும் பழைய மாம்பலம் எங்கே இருக்கிறது என்று தெரியும். ஆனால் புது மாம்பலம் எங்கே என்பது எளிதில் தெரியாது. புது மாம்பலம் அப்படியொன்றும் மாயமாய் மறைந்து விடவில்லை. அதைத்தான் தி. நகர் என்று மிகச் சுருக்கமாகக் கூறும் வழக்கம் ஏற்பட்டிருக்கிறது. தி. நகரின் முழுப் பெயர் தியாகராய நகர் என்பதாகும். புது மாம்பலம் தியாகராய நகராகப் பெயர் பெற்ற காரணம் என்ன என்பதை அறிய வேண்டுமானால் சென்னை நகர சபைக் கட்டடத்தின் முகப்பில் நின்று பார்க்க வேண்டும்.



நகர சபைக் கட்டடத்தின் வாயிலில் நின்று கவனித்தால், முகத்தில் சாந்தமும் புன்னகையும் தவழத் தலைப்பாகையுடன் நீண்ட கோட்டு அணிந்து காட்சி யளிக்கும் ஸர் பிட்டி தியாகராயச் செட்டியார் அவர்களுடைய கம்பீரமான சிலையைக் காணலாம். சென்னை நகர அபிவிருத்திக்காக மிகவும் பாடுபட்ட பெரியார்களில் ஸர் தியாகராய செட்டியார் சேவைகளை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும்.

நாற்பது வருட காலம் தொடர்ந்து ஒருவர் நகர சபை அங்கத்தினராக விளங்கினார் என்றால், அதைவிட அவருடைய சேவையின் உயர்வுக்கு எடுத்துக் காட்டு வேறு எதுவும் வேண்டியதில்லையல்லவா?

ஸர் தியாகராய செட்டியார் அத்தகைய உயர்ந்த சேவையில்தான் ஈடுபட்டுச் சென்னை நகர வளர்ச்சிக்காகப் பாடுபட்டு வந்தார். அதற்கு நன்றி தெரிவிக்கும் முறையில்தான் புது மாம்பலத்துக்கு அவருடைய பெயரை வைத்திருக்கிறது சென்னை நகர சபை.

இவ்வளவுக்கும் ஸர் தியாகராயச் செட்டியாரின் வீடு, வாசல் எதுவும் தியாகராய நகரில் கிடையாது. வண்ணாரப்பேட்டையில்தான் அவருக்கு வீடு வாசல் எல்லாம். அங்கிருந்துதான் அவருடைய பொதுப் பணிகள் ஆரம்பமாயின. இன்றைக்குச் சற்றேறக்குறைய நூற்றுப் பத்து வருடங்களுக்கு முன் 1852-ல் பிறந்தவர் தியாகராய செட்டியார். இவருடைய தந்தையின் பெயர் பிட்டி அய்யப்ப செட்டியார் ஆகும். 'பிட்டி' என்பது இவர்களுடைய குடும்பப் பெயர். சித்தூர் வட்டம் சத்தியவேடு கிராமத்தைச் சேர்ந்த வர்த்தக சமூகத்தினர். சென்னையில் திரு அய்யப்ப செட்டியார் குடும்பத்தினர் தோல் வியாபாரம் செய்து வந்தனர். திரு தியாகராய செட்டியாருடைய பிறப்புகூட ஓர் அதிசயம் என்று கூற வேண்டும். அவரும் இவருடைய தமையனாரும் இரட்டைப் பிள்ளைகளாகவே பிறந்தார்கள். இரண்டு குழந்தைகளுக்கும் தகப்பனார் ஒரே பெயராகவே வைத்து, ஒரு குழந்தையை மூத்த தியாகராயன் என்றும், மற்றொரு குழந்தையை இளைய தியாகராயன் என்றும் அழைத்து வந்தார். மூத்த பிள்ளையைக் குடும்பம், வர்த்தகம் இவற்றில் ஈடுபடச் செய்து, இளைய பிள்ளையைக் கல்வியில் பூரணமாகத் தேர்ச்சி பெறச் செய்தார் இவர்கள் தந்தை. அதன்படி, இளைய தியாகராய செட்டியார் சிரத்தையுடன் கல்வி பயின்று சென்னை ராஜதானிக் கல்லூரியில் 1876-ல் பி.ஏ. பட்டம் பெற்றார்.

படித்துப் பட்டம் பெற்ற திரு செட்டியாருக்கு உத்தியோகம் பார்க்க வேண்டும் என்ற ஆசை ஏற்படவில்லை

என்பது அந்நாளில் மற்றோர் அதிசயமான விஷயம் என்றே கூற வேண்டும். அதற்கு மாறாகத் தமது கல்வித் திறமையைத் தகப்பனாரின் தொழிலில் உபயோகித்து அதை வளர்ப்பதிலேயே ஆவல் கொண்டார், திரு தியாகராய செட்டியார். இதன் பயனாக, அவர்களுடைய குடும்பத் தொழிலாகிய வர்த்தகம் மளமள வென்று வளர்ந்தது. தோல் வர்த்தகத்தில் இவர்களுடைய வர்த்தக ஸ்தாபனத்தின் பெயர் வெளிநாடுகளில்கூடப் பெயர்பெற்று விளங்கிற்று.

தோல் வர்த்தகத்துடன், தோல் பதனிடும் தொழிற் சாலையும் அமைத்து நடத்தி வந்தார்கள். கைத்தறித் துணி உற்பத்திச் சாலை ஒன்றும் ஆரம்பித்து, அதையும் சிறப்பாக நடத்தி வந்தார்கள்.

தொழில் துறையில் ஈடுபட்டவாறே, பொது மக்களுக்குச் சேவை புரிய அரசியல் துறையில் வழி காண முயன்றார். அதன் விளைவாகவே ஜஸ்டிஸ் கட்சியில் பிரபல தலைவர்களில் ஒருவராக அவர் விளங்கினார் என்று கூற வேண்டும். இன்னும் கூறப் போனால், ஜஸ்டிஸ் கட்சி தோன்றுவதற்கு ஒரு காரணமாக இருந்தவரே திரு தியாகராய செட்டியார் என்றும் குறிப்பிடலாம்.

ஆங்கிலேயரிடமிருந்து பூரண சுதந்திரம் பெற வேண்டும் என்றும், அதற்குக் குறைவாக எதையும் பெறுவதில்லை என்றும் காங்கிரஸ் கூறி வந்ததல்லவா? இதை ஜஸ்டிஸ் கட்சியினர் ஆதரித்தாலும் கூட முழு சுதந்திரம் வரும் வரையில் காத்துக் கொண்டிருப்பதை விட, ஆங்கிலேயர்கள் அளிப்பதாகச் சொல்லும் கொஞ்ச நஞ்சம் சுதந்திரத்தை வாங்கிக்கொண்டு கிடைக்காததற்குப் பேரம் பேசலாம் என்று கூறி வந்தார்கள். இந்த அடிப்படையில் தான், பிரிட்டிஷ்காரர்கள் அளித்த சில உரிமைகளையும் பதவிகளையும் ஜஸ்டிஸ் கட்சிப் பிரமுகர்கள் ஏற்று வந்தார்கள். ஆனால் தியாகராய செட்டியார் மட்டும் இவ்விஷயத்தில் ஓர் அதிசய மனிதராகவே விளங்கித் தமது தியாக உணர்ச்சியை வெளியிட்டார்.

பொதுமக்களிடமும், அரசியலிலும் அவர் பெற்றிருந்த செல்வாக்கைப் பார்த்து, ஆங்கிலேய அரசாட்சியினர் அவரைச் சென்னை மாகாண முதன் மந்திரிப் பதவியை ஏற்கும்படி எவ்வளவோ கேட்டுக்கொண்டார்கள். தமக்கு இஷ்டமானவர்களைக் கொண்டே அவர் மந்திரி சபை அமைத்துக் கொள்ளலாம் என்று கூடக் கூறினார்கள். இப்படி வலிய வந்த முதன் மந்திரிப் பதவியை ''வேண்டாம்'' என்று மறுத்துவிட்டார் திரு தியாகராய செட்டியார். அதிகாரமும் அந்தஸ்தும் பெரிய சம்பளமும் கொண்ட முதன் மந்திரிப் பதவியை அவர் உதறித் தள்ளி விட்டு, அதற்குப் பதிலாகச் சம்பளம், வருமானம் எதுவுமில்லாத நகர சபை அங்கத்தினர் பதவியே போதும் என்று இருந்து விட்டார்.

சென்னை நகராட்சி சீர்திருத்தச் சட்டத்தின்படி தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களுக்குத் தலைவர் பதவி வகிக்கும் உரிமை வழங்கப்பட்டது. அதன்படி, சென்னை நகர சபையின் முதல் தலைவரானார் திரு செட்டியார் அவர்கள். அது வரையில் அரசாங்கம் நியமிக்கும் அதிகாரியே நகரசபைக்குத் தலைவராக விளங்கி வந்தார். தலைவர் இல்லாமலே தேர்ந்தெடுக்கப்படும் அங்கத்தினர்கள் நகர சபைக்கு வந்து பேசி விட்டுப்போய் விடுவார்கள். அங்கத்தினர் கொண்டு வரும் தீர்மானங்களை, நிர்வாக அதிகாரி ஏற்றாலும் ஏற்பார், நிராகரித்தாலும் நிராகரித்து விடுவார். இந்தச் சர்வாதிகார முறையில் ஒரு மாறுதல் ஏற்பட்டு, தலைமைப் பதவியையும், தலைவருக்குச் சில அதிகாரங்களும் விட்டுக் கொடுத்தார்கள் ஆட்சியினர். திரு தியாகராய செட்டியார் ஐந்து வருடங்கள் வரையில் தலைவர் பதவி வகித்து வந்தார். அவரைக் கௌரவிக்கும்முறையில்தான் சென்னை நகர சபையில் அவருடைய சிலையை வைத்திருக்கிறார்கள்.

திரு செட்டியார் அவர்கள் அரசியலில் ஈடுபட்டு, நகரசபை மூலமாகப் பணிகள் செய்ததோடு தமது சொந்த வருமானத்தையும் செல்வத்தையும் பல அறப் பணிகளில் செலவிட்டு வந்தார்கள். அவற்றுள் தலையான பணியாகக் கல்வி வளர்ச்சியில், அவரும் அவருடைய குடும்பத்தினரும் நிறைவேற்றிய சேவைகளைக் குறிப்பிட வேண்டும். சென்னை வண்ணாரப் பேட்டையில் அவர் பெயரால் நடந்து வரும் ஸர் தியாகராய செட்டியார் உயர்நிலைப் பள்ளி ஸர் தியாகராய செட்டியார் கல்லூரி இவற்றின் சரித்திரத்தைப் பார்த்தால், அதிலேயே திரு செட்டியார் அவர்களின் நற்பண்பின் அருங் குணங்களையும் காணலாம். திரு தியாகராய செட்டியாரும் அவர் குடும்பத்தினரும் திருப்பதி ஏழுமலையானிடம் மிகுந்த பக்தி கொண்டவர்கள் என்பதை எடுத்துக் காட்டுகிறது, கல்லூரியின் ஒரு பிரிவுக்கு 'வேங்கடேசுவரா . பகுதி' என்று பெயர் வைத்திருக்கும் பண்பிலிருந்து.

சென்னையில் தியாகராய நகர் வழியாகவோ, அல்லது நகர சபைக் கட்டடத்தின் வழியாகவோ செல்லும்போது எல்லாம் பண்பாளர், பிரமுகர் ஸர் தியாகராய செட்டியாரின் நினைவு ஏற்படாமற் போகாது. — கதிர்

# புது வெள்ளம்

## அத்தியாயம் 23

## நோய்க்கு மருந்து

சாந்தாவின் தாயாரும் தங்கையும் அவர்களுக்குள் தனியே பேசிக் கொண்ட விஷயங்கள் முருகையனின் செவிகளுக்கு எட்டியவுடன், அவன் கலக்கத்துடன் சிறிது நேரம் வீட்டுக்கு வெளியில் நின்றுவிட்டான். சட்டைப் பையைத் துழாவிப் பார்த்த போது அதில் பணமில்லை. இருந்த பணத்தை யெல்லாம்தான் குருசாமியிடம் கொடுத்து விட்டானே?

வீட்டுக்குப் போய்ப் பணம் வாங்கிக் கொண்டு திரும்பி வரலாமா என்று யோசித்தான். மாணிக்கத்திடமோ சித்திராவிடமோதான் பணம் கேட்கவேண்டும். என்ன காரணத்தைச் சொல்லிக் கேட்பது? 'சாந்தாவின் குடும்பத்துக்குக் கிராமத்திலிருந்து வர வேண்டிய பணம் வரவில்லையாம். இந்த நிலையில் மருந்துச் செலவுக்கும் டாக்டருக்குக் கொடுப்பதற்கும் பணம் இல்லாமல், அவர்கள் மிகவும் கஷ்டப்படுகிருர்கள். அதனுல் உதவி செய்ய வேண்டும்' என்று அவன் கேட்க முடியுமா?

வீட்டுக்குள் அவர்கள் பேசிக்கொண்ட விஷயம் இதுதான். தங்களுடைய கஷ்டத்தை யெல்லாம் அவர்கள் சாந்தாவுக்குக் கூடத் தெரியாமல் மறைத்து வைக்கப் பார்த்தார்கள். ஆனுல் அது முருகையனுக்குத் தெரிந்து விட்டதை அவர்கள் கவனிக்கவில்லை.

சாந்தாவுக்குத் தெரியாமல் அவர்கள் ஏன் அதைமறைக்கவேண்டும்? வைத்தியம் .... மருந்து ...நோயாளி...டாக்டர் ...இப்படிப் பேசுகிறீர்களே, புதிதாக யாருக்கு என்னவந்து விட்டது?

சாந்தாவின் தாயார் தெளிவாகப் பேசியதிலிருந்து அவள் கூடத் தனது நோயிலிருந்து தேறி விட்டாள் என்பதை அவனுல் ஊகிக்க முடிநதது. தங்கைக்கும் ஒன்றுமில்லை... பிறகு...?

வெளியில் நின்ற முருகையன் மளமளவென்று வீட்டுக்குள் நடந்தான். பேசிக் கொண்டு நின்ற இருவரும் முருகையனைக் கண்டவுடன் ஒரே ஒரு கணம் திகைத்து விட்டுப் பிறகு மகிழ்ச்சியோடு அவனை வரவேற்ருர்கள்.

''அக்கா! அக்கா! அவர் வந்திருக்கிருர்!'' என்று ஆனந்தத்தோடு சொல்லிக் கொண்டே, முருகையனைத் தாண்டிக் கொண்டு உள்ளே ஓடினுள் கல்யாணி.

''வாருங்கள்!'' என்ற குரல் ஒன்று அறைக்குள்ளிருந்து ஒலிப்பது போல் கேட்டது. குரல் வந்த திசையில் திரும்பினுன் முருகையன். கல்யாணியின் கைத் தாங்கலில் மெதுவாகப் படுக்கையிலிருந்து எழுந்து, சுவரில் சாய்ந்து கொண்டிருந்தாள் சாந்தா.



அந்த வீட்டின் நோயாளி வேறு யாருமில்லை; சாந்தாவேதான்.

''ஒரு நாள் உங்களைக் கடற்கரையில் பார்த்துவிட்டு வந்ததாய்ச் சொன்னாள். உங்களுடைய அத்தை வீட்டில் நீங்கள் இருக்கப் போவதாய்த் தெரிவித்தாள். உங்களை வழியனுப்பி விட்டு வந்த மறு நாளிலிருந்து இவள் படுத்த படுக்கையாய்க் கிடக்கிறாள்.''

''உடம்புக்கு என்ன சாந்தா?'' என்று மிகுந்த கவலையோடு கேட்டான் முருகையன்.

''ஒன்றுமில்லை'' என்று சொல்லிச் சிரித்தாள் சாந்தா. அவளுடைய உடம்பில் உண்மையிலேயே அளவற்ற ஆனந்தம் நிறைந்திருந்தது. அவனைக் கண்டதால் அவளுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிப் பெருக்கை அவளுடைய முகம் ஒளிவு மறைவில்லாமல் காட்டிக் கொடுத்தது.

''ஒன்றுமில்லையா? இதற்குப் பெயரா ஒன்றுமில்லை?''

''நெஞ்சு வலி, மயக்கம், பலவீனம் எல்லாம் ஒன்றாய்ச் சேர்ந்து கொண்டிருக்கிறது'' என்றாள் கல்யாணி. ''சாப்பாட்டைத் தொடுவதே இல்லை. கஞ்சி குடிப்பதற்குப் பிடிவாதம் பிடிக்கிறாள். நீங்கள்தான் புத்திமதி சொல்லி இவள் உடம்பைக் கவனிக்கச் செய்ய வேண்டும்.''



''கல்யாணி! வீட்டில் ஏதாவது பலகாரம் செய்யுங்கள். காப்பி கொடுங்கள். வெகு நாட்களுக்குப் பிறகு இவர் வந்திருக்கிறார்'' என்று கூறித் தன் தங்கையைச் சமையலறைக்கு அனுப்பி வைத்தாள் சாந்தா.

சாந்தாவுக்கே தெரியாத குடும்பப் பொருளாதாரம் அப்போது முருகையனுக்குத் தெரிந்திருந்ததால், ''வேண்டாம்; இப்போதுதான் சாப்பிட்டுவிட்டு வந்தேன்'' என்று மறுத்தான். ஆனால் சாந்தா கேட்கவில்லை.

கல்யாணியும் அவள் தாயாரும் அடுப்படிக்குச் சென்று ஏதோ தங்களுக்குள் ரகசியம் பேசிக் கொண்டு பலகார வேலையில் ஈடுபட்டார்கள்.

'மருந்து வாங்கப் பணமில்லாமல் தவிப்பவர்களை விருந்து வைக்கச் சொல்கிறாளே!' என்று தனக்குள் நொந்து கொண்டான் முருகையன். ஆனால் அவளிடம் வெளிப்படையாக அதை எப்படிச் சொல்வது?

சாந்தா மெல்ல இருமினாள். தொடர்ந்து அவளால் அடக்க முடியாதபடி இருமல்கள் வெளிப்பட்டன. கண்களில் நீர் திரண்டது. களைத்துப் போய்த் தலையணையில் சாய்ந்தாள். அந்தக் காட்சியைக் கண் கொட்டாமல் கவனித்த முருகையனின் விழிகளிலும் நீர் மணிகள் திரண்டு வந்தன.

முதன் முதலில் ஒரு நாள் குழந்தைகள் புடைசூழக் கடற்கரையில் உல்லாசமாக உலவிக் கொண்டிருந்தாளே, அதே சாந்தாதானா இவள்? உயிர்த் துடிப்பும், இளமை வளமும், பருவ எழிலும், சுறுசுறுப்பும் ஒன்றாகச் சேர்ந்த அதே உயிரோவியந்தானா இது? அதற்குள் இவளுக்கு என்ன வந்து விட்டது? என்ன நேர்ந்து விட்டது? முருகையன் கண்ணிமைக்காமல் அவளைக் கவனித்தான்.

சாந்தாவும் அவனது நினைவுகளை அளக்க முயல்பவள் போல் அவன் முகத்தையே உற்று நோக்கினாள். டாக்டரும், மருந்துகளும், பத்திய உணவும், படுக்கையும் செய்ய முடியாத சிகிச்சைகளை அவனுடைய முகத் தோற்றம் ஒன்றே செய்து விடும் போலிருந்தது. அன்பு, இரக்கம், பரிவு, பச்சாதாபம், துன்பம் கண்டு துடிக்கும் துடிப்பு இவ்வளவும் அவன் விழிகளில் ஒளி செய்து கொண்டிருந்தன. அவற்றை ஒன்று சேரப் பருகுவதில் ஓர் ஆறுதல் கண்டாள் சாந்தா.

மௌனமாகவே சிறிது நேரம் சென்றது.

''என்னுடைய விலாசம்தான் கொடுத்திருக்கிறேனே? எனக்கு ஒரு கடிதம் எழுதிப் போடக் கூடாதா?''

''கடிதமா?'' என்று ஏதோ யோசனையில் இருப்பவள் போல் கேட்டாள் சாந்தா. ''தினமும் போடச் சொல்ல வேண்டுமென்றுதான் நினைத்துக் கொள்வேன். ஒவ்வொரு நாளும் நினைத்துக் கொண்டுதான் இருந்தேன்......ஆனால் போடாவிட்டாலும் நீங்களே வந்து விட்டீர்களே! நான் எழுதச் சொல்லி நீங்கள் வருவதைவிட, எழுதாமலே வந்ததில் எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா? இனிமேல் சீக்கிரம் நான் எழுந்து விடுவேன். இது என்னை ஒன்றுமே செய்யாது.''

சாந்தாவின் பேச்சுக்கு என்ன பொருள் என்று முருகையனுக்குத் தெளிவாக விளங்கவில்லை. புரிந்தது போலவும் இருந்தது; புரியாதது போலவும் இருந்தது.

''நான் இங்கே வருவதால் நீ குணமடைந்து விடுவாய் என்றால் இனிமேல் தினமும் வருகிறேன்.''

''வேண்டாம்; வேண்டாம். அவ்வளவு பேராசை எனக்குக் கூடவே கூடாது'' என்று கூறிச் சிரித்தாள் சாந்தா. ''நீங்கள் உங்களுடைய வேலைகளைக் கவனித்துக் கொண்டு, அந்த வீட்டில் உள்ளவர்களுக்கும் திருப்தி ஏற்



படும் விதமாக நடந்து கொள்ள வேண்டும். வெகுநாட்கள் சிரமப்பட்ட பிறகு உங்களுக்கு நல்ல வாழ்க்கை கிடைத்திருக்கிறது. அங்கே நீங்கள் நன்றாக இருந்தால் போதும்.''

''அதனால்தான் கடிதம் எழுதவில்லையா...?''

''அதுவும் ஒரு காரணம்தான்.''

''எனக்கு ஒரு சிரமமுமில்லை. கார் இருக்கிறது. எடுத்துக் கொண்டு வந்து எட்டிப் பார்த்து விட்டுப் போவதில் எவ்வளவு நேரம் ஆகி விடும்?''

''காரில்தான் வந்திருக்கிறீர்களா?''

''ஆமாம்.''

சாந்தாவுக்கு இது உண்மையிலேயே பெருமையாக இருந்தது. முருகையன் கார் ஓட்டக் கற்றுக் கொண்டு, காரில் போகும் வசதிக்கு வந்த பிறகும், ஏழையான தன்னை மறக்க வில்லை என்பதில் அவளுக்கு அளவற்ற ஆனந்தம் ஏற்பட்டது.

சித்திராவைப் பற்றியும் அந்த வீட்டில் உள்ளவர்களைப் பற்றியும் விசாரித்தாள் சாந்தா. தொழிலைப் பற்றியும் கேட்டு வைத்தாள். சித்திராவையும் அங்கு அழைத்துக் கொண்டு வரும்படி அவள் சொல்வாள் என்று எதிர்பார்த்தான் முருகையன். ஆனால் சாந்தா அதைச் சொல்ல வில்லை. முருகையனும் அதற்காக வருந்தவில்லை. அவர்களுடைய முதற் சந்திப்பிலேயே சித்திரா சாந்தாவை ஒரு பொருட்டாக மதிக்கவில்லையாதலால், சாந்தாவின் மீதும் தவறில்லை என்று தனக்குள் நினைத்துக் கொண்டான்.

சித்திரா பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவள். அவள் பிறந்து வளர்ந்த இடத்துக்கேற்ற குணங்கள் அவளிடம் காணப்பட்டது அவளுடைய தவறாகாது. சம அந்தஸ்துக்கு மாறுபட்ட யாரையும் அந்த வீட்டில் உள்ள யாருமே மனிதர்களாக மதிப்பதில்லை என்பதை முருகையன் நேரில் கண்டவன். முருகையனிடம் மட்டிலும்தான், அவன் எந்த நிலையில் இருந்த போதும், சித்திரா ஒரே விதமாக அன்பு செலுத்தி வந்திருக்கிறாள்.

''சுந்தரம் அண்ணாவுக்கு நீங்கள் கடிதம் எழுதுவது உண்டா?'' என்று கேட்டாள் சாந்தா.

''எழுதிக் கொண்டிருக்கிறேனே! ஓரளவு அவருக்கு என்னுடைய நிலையும் தெரியும்: அங்கு போன பிறகு அவரும் வசதியாக இருக்கிறார் போலிருக்கிறது.''

''என்னைக்கூட அவர் குடும்பத்தோடு அங்கு வரும்படி எழுதி யிருக்கிறார்'' என்றாள் சாந்தா. ''அங்கே எனக்குச் சுலபமாக அவரால் ஒரு வேலை வாங்கித் தர முடியுமாம்: ஊரும் நல்ல ஊராம்.....''

''அப்படியானால்....?''

''எங்காவது ஓர் இடத்தில் இருந்து வாழ வேண்டியதுதானே? கல்யாணிக்கும் படிப்பு முடியப் போகிறது. அம்மாவுக்கும் உடம்பு தேறி வருகிறது. போனால் தேவலாம் என்றுதான் பார்க்கிறேன். ஆனால் போகத்தான் மனம் வரவில்லை.''

''போக மனம் வரவில்லையா?''

''போகவும் விருப்பமில்லை; இருக்கவும் விருப்பமில்லை.... இப்போதெல்லாம்.... இப்போதெல்லாம்...எனக்கு எதிலுமே விருப்பமில்லை.''

திடுக்கிட்டான் முருகையன். கண்களிலிருந்து வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் சாந்தா.

## அத்தியாயம் இருபத்து நான்கு

# உண்மைதான் போலும்

கல்யாணி கொண்டு வந்து வைத்த சிற்றுண்டியைச் சாப்பிட்டுக் கொண்டே சாந்தாவின் சொற்களை மனத்துக்குள் அசை போடத் தொடங்கினான் முருகையன். 'எனக்கு எதிலுமே விருப்பமில்லை' என்று அவள் வேதனையோடு கூறிய சொற்கள் அவனது நினைவில் சுழன்று சுழன்று வந்தன.

வாழ்க்கையில் அவள் கொண்டிருந்த பற்றுதலையும் விருப்பத்தையும் அவன் நன்கு அறிந்தவன். சாந்தா தன் தாயாருக்காகவும் தங்கைக்காகவும் சென்னையில் வாழ வந்தவள். வந்த இடத்தில் தன்னைச் சூழ்ந்திருந்தவர்கள் அனைவரையும் அவள் விரும்பினாள். அடுத்த வீட்டுக்காரனை சுந்தரத்தின் குடும்பத்தாருடன் அவள் ஒன்றி உறவாடியதைப் பார்த்தவர்கள், அவனை அவளுடைய சொந்தத் தங்கை என்று தான் நினைத்திருப்பார்கள். பொதுவாகவே அண்டை அயலாருடைய நலன்களில் அவள் கொண்டிருந்த ஆர்வம் அவளுடைய பரந்த மனத்தை எடுத்துக் காட்டியது.

குழந்தைகளை அவள் விரும்பியிருக்காவிட்டால் ஒரு குழந்தைக் கூட்டம் எப்போதும் அவளைச் சூழ்ந்து கொண்டிருந்திருக்காது. மனிதர்களை மட்டுமே அவள் விரும்பினாள் என்பதில்லை. வீடு, வாசல் உடை, உணவு, செய்யும் செயல் — எல்



ஒருவர்: ஏன் தாத்தா உங்களுக்கு ரொம்ப வயதாகி இருக்கிறதே உங்களைக் கேட்டால் தெரியுமே! பழைய காலத்தில் இந்த ஊரில் கோபாலன்னு ஒருத்தர் இருந்தாரே அவரைத் தெரியுமோ?

தாத்தா: எனக்குத் தெரியாதே! இந்த வயசு எனக்கு வெளியூரில்தான் ஆச்சு. இந்த ஊரில் இல்லே.

லாவற்றையுமே அவள் ஒரு தனியான பற்றுதலுடன்தான் கவனித்தாள். வாழ்க்கையில் இந்தப் பற்றுதல் இருந்திருக்காவிட்டால், எப்படி எவனோ ஓர் அன்னியனான முருகையனுக்கு வியாபாரம் செய்து பிழைப்பதற்குப் பலகாரம் செய்து கொடுத்திருப்பாள்? நோய்ப் படுக்கையில் கிடந்த அவனுக்கு எப்படிப் பற்றுதல் இல்லாதவள் பணிவிடைகள் செய்ய முன் வந்திருப்பாள்?

வாழ்க்கையின் பாசத்தை, பற்றுதலை, உழைப்புச் சக்தியை, உற்சாகத்தைத் தனது ஒவ்வொரு சொல்லாலும் செயலாலும் வெளிப்படுத்திக் கொண்டிருந்த சாந்தாவா இப்போது எதிலுமே விருப்பமில்லை என்கிறாள்? நம்ப முடியாத மாற்றம்!

''சாந்தா! என்னைவிட நீ ஒருவகையில் அதிர்ஷ்டசாலி. எனக்கோ தாய் தந்தை, அண்ணன் தம்பி, நெருங்கிய உறவினர் யாரும் இல்லை. ஆனால் உனக்கோ பெற்ற தாயார் இருக்கிறார்கள். உடன்பிறந்த தங்கை இருக்கிறாள். அன்பு செலுத்த யாருமே இல்லாத அனாதைகளும், வாழ வசதியற்றவர்களும்கூட எப்போதும் எதையாவது விரும்பிக் கொண்டுதான் இருக்கிறார்கள். அப்படியிருக்க, இப்போது திடீரென்று உனக்கு என்ன வந்துவிட்டது?''

''அதுதான் எனக்கே தெரியவில்லை.''

முருகையன் யோசித்து விட்டுப் பிறகு பேசினான்.

''உனக்கும் வயதாகி விட்டது. தங்கையின் படிப்பு முடிந்தவுடன் உன்னுடைய கல்யாணத்தை முடித்து வைக்கும்படி அம்மாவிடம் சொல்லிறேன். பிறகு உனக்கு எல்லா விருப்பங்களும் திடீரென்று திரும்பி வந்துவிடும்! கவலையெல்லாம் அப்போது பறந்து போய் விடும், சாந்தா!''

மெல்லச் சிரித்தாள் சாந்தா. அந்தச் சிரிப்பு அன்பு நிறைந்த ஒரு கேலிச் சிரிப்பாக இருந்தது.

''ஏன் சிரிக்கிறாய்?''

''அவரவர்கள் அவரவர் அனுபவத்தை வைத்துக் கொண்டு பேசுகிறார்கள். நீங்கள் உங்கள் சொந்த அனுபவத்தை வைத்துக் கொண்டு பேசுகிறீர்கள். ஆமாம், எப்போது உங்களுக்கும் சித்திராவுக்கும் கல்யாணம்?''

முருகையனின் முகம் வெட்கத்தால் சிவந்தது. அவளை ஏறிட்டுப் பார்க்க முடியாமல் தலையைக் குனிந்துகொண்டான்.

''சொல்லுங்கள். எப்போது உங்களுக்குக் கல்யாணம்?''

''அதற்கெல்லாம் இப்போது ஒன்றும் அவசரம் இல்லை. முதலில் தொழிலைக் கவனித்து ஒரு நிலைக்கு வர வேண்டும். பிறகுதான்....''

''எப்படியாவது நீங்கள் இருவரும் கல்யாணம் செய்து கொண்டு சந்தோஷமாக இருக்க வேண்டும். சித்திரா அதிர்ஷ்டக்காரப் பெண்; எல்லா வகையிலும் பாக்கியம் செய்தவள்.''

முருகையன் சாந்தாவின் பேச்சிலிருந்த உட்பொருளை உணரவில்லை. அவளைக் கல்யாணம் செய்து கொள்வதற்கு வாய்ப்புக் கிடைத்தது சித்திராவின் அதிர்ஷ்டம்தான் என்பதை அவள் சுட்டிக் காட்டினாள். ஆனால் முருகையனுக்கோ தன் கல்யாணப் பேச்சைச் சாந்தா எழுந்தவுடனேயே வெட்கம் வந்து விட்டது. அவன் படித்தவனாக இருந்தாலும் கிராமவாசிதானே?

அதற்கு மேல் அங்கு தங்குவதற்கு வெட்கப்பட்டுக் கொண்டு சாந்தாவிடம் விடைபெற்றுக் கொண்டு எழுந்தான். எழுந்தவுடன் அவனுக்கு, அந்த வீட்டுக்குள் அவன் நுழையும் சமயத்தில் சாந்தாவின் தாயாரும் தங்கையும் பேசிக் கொண்ட விஷயங்கள் நினைவுக்கு வந்தன. 'மருந்துக்குப் பணமில்லை,....வைத்தியச் செலவுக்கு வசதி இல்லை,.....அந்த நிலைமையைச் சாந்தா தெரிந்து கொள்ளக் கூடாது....'

உடனடியாக உதவி செய்வதற்கு அவன் கையில் பணமில்லை. அந்தக் கலக்கத்தோடு தலையைக் குனிந்து கொண்டே காருக்கு வந்து அதன் கதவைத் திறந்தான் முருகையன். காரின் கதவில்

அவன் விரலின் மோதிரம் பட்டதால் 'கணீர்' என்று ஓர் ஓசை எழுந்தது. விரலில் இருந்த மோதிரத்தை உற்றுப் பார்த்தான். 'வறுமையால் ஒரு பக்கம் வாழ்க்கை அழுகிக் கொண்டிருக்கும் போது அலங்காரத்துக்காக விரலில் தங்க மோதிரம் எதற்கு?'

காரை எடுத்துக் கொண்டு அடுத்த தெருவில் இருந்த மார்வாடிக் கடைக்குச் சென்றான். மோதிரத்தை அடகு வைத்து ஓர் ஐம்பது ரூபாய் கடன் வாங்கிக் கொண்டான். மார்வாடிக்கு இது போல் காரில்வந்து ஐந்தும் பத்தும்கூடக் கடன் வாங்கும் பிரமுகர்கள் பலரைத் தெரியும். அவர்களில் ஒருவராக முருகையனையும் நினைத்துக் கொண்டு, ''காருக்குப் பெட்ரோல் போட்டுக்கிட்டுச் சினிமாவுக்குப் போகணுமா? சரி, சரி!'' என்று அனுப்பி வைத்தார் மார்வாடி. அதோடு காரின் எண்ணையும் குறித்துக் கொண்டார்.

பிரமுகர்களுக்கு எதிரிலேயே தங்கத்தை உரைத்துப் பார்ப்பது நாகரிகமாகாது. அதற்குத்தான் காரின் எண்!

சாந்தாவின் வீட்டுக்குத் திரும்பி வந்து, கல்யாணியைத் தனியே அழைத்து, அவளிடம் பணத்தை வற்புறுத்திக் கொடுக்க முயன்றான். கல்யாணி மறுத்து விட்டுத் தாயாரை அழைத்துக் கொண்டு வந்தாள்.

''வைத்தியச் செலவுக்கு நான் கடனாகக் கொடுத்ததாக வைத்துக் கொள்ளுங்கள். தவறாக நினைக்க வேண்டாம். உங்களிடம் நான் இதைத் திரும்பவும் வாங்கிக் கொள்ளுகிறேன். சமயத்தில் ஒருவருக்கொருவர் உதவி செய்வதில் என்ன தவறு?''

தயக்கத்தோடு வாங்கிக் கொண்டாள் சாந்தாவின் தாயார். சாந்தாவுக்குத் தெரிய வேண்டாம் என்று முருகையன் கேட்டுக் கொண்டபடியே, அதை அவர்கள் அவளிடம் தெரிவிக்கவில்லை.

பங்களாவுக்குள்ளே கார் நுழைந்த போது, சித்திரா அவனுக்காக முகப்பில் காத்துக் கொண்டிருப்பதைக் கவனித்தான் முருகையன். காத்திருந்ததால் ஏற்பட்ட பரபரப்பையும் அடக்கப்பட்ட கோபத்தையும் அவள் முகம் காட்டிக் கொடுத்தது.

''சொல்லிக் கொள்ளாமல் திடீரென்று நீங்கள் கிளம்பி விட்டால், நான் உங்களை எங்கே தேடுவதாம்?''

''நீ எதற்குத் தேட வேண்டும்? நான் தான் எங்கு போனாலும் உன்னைத் தேடிக் கொண்டு திரும்பி வந்து விடுகிறேனே!'' சிரித்துக் கொண்டே தன் அறைக்குச் சென்றான் முருகையன். சித்திரா அடம் பிடிக்கும் செல்லக் குழந்தை போல்



''அப்பா இருக்காரா?''
''இருக்கார்.''
''என்ன பண்ணுகிறார்?''
''பீ.பீ வாசிச்சிண்டு இருக்கார்.''
''அவருக்கு வி.பீ.பீ. வந்திருக்குன்னு சொல்லு.''

முகத்தை இழுத்துக்கொண்டே அவனைப் பின்தொடர்ந்தாள். அவன் போய் வந்த இடத்தை வற்புறுத்திக்கேட்டாள்.

''முன்பு நான் குடியிருந்தேனல்லவா? அந்த வீட்டுக்குப் போய் வந்தேன்.''

''சாந்தா என்று ஒருத்தியோடு அன்றைக்குப் பேசிக் கொண்டிருந்தீர்களே, அவள் வீட்டுக்கா?''

''ஆமாம்!....பாவம், அவள்தான் படுத்த படுக்கையாய்க் கிடக்கிறாள்.''

சித்திராவின் விழிகள் விரிந்து கூர்மை பெற்றன. தன்னுடைய சந்தேகத்தைச் சிறிதும் மறைக்காமல் அவனை ஆத்திரத்தோடு பார்த்தாள்.

''பழகிய மனிதர்களைப் பார்ப்பது கூடத் தவறா சித்திரா?''

''ஓ! முன்பே நெருங்கிய பழக்கம் போலிருக்கிறது.''

''சித்திரா!..நீ என்ன சொல்கிறாய்?'' முருகையனின் குரலிலும் கோபம் திரண்டது

சித்திராவின் விழிகள் அவனை மெதுவாக உச்சி முதல் உள்ளங்கால் வரையில் அளந்து பார்க்கத் துடித்தன. அவனுடைய வலது கரத்தின் மோதிர விரலுக்கு வந்தவுடன் அவை வேறெங்கும் நகரவில்லை. கண்களில் கோபம் குமுறிக் கொப்பளித்தது. ''மோதிரம் எங்கே?''

''அது பத்திரமாக இருக்கிறது சித்திரா! கோபப்படாமல் நான் சொல்வதைக் கேள். என் மேல் உனக்கு நம்பிக்கையில்லையா?'' மெதுவாக அவள் கரத்தைப் பற்றி அருகில் உட்காரச் செய்தான் முருகையன். நடந்த விஷயங்களில் எதையும் மறைக்காமல் அவளிடம் கூறினான். அவன் குரலும் சொற்களும் அவனது வெள்ளை மனத்தைச் சித்திராவிடம் வெளிப்படுத்தின. என்றாலும் சித்திராவால் தாங்க முடியவில்லை.

அவள் அழத் தொடங்கி விட்டாள். தனது நம்பிக்கை முழுதுமே தகர்ந்து விட்டதுபோல் அவள் கண்ணீர் வடித்தாள்.

''அன்புக்கு அடையாளமாக உங்களிடம் கொடுத்த மோதிரத்தை நீங்கள் அவளுக்காக அடமானம் வைத்துப் பணம் வாங்கி யிருக்கிறீர்கள் என்றால், இதற்கு என்ன அர்த்தம்? உங்களை நம்பச் சொல்கிறீர்களே, எப்படி நம்புவது?''

''அது ஒரு நல்ல காரியத்துக்குப் பயன் பட்டிருக்கிறது சித்திரா. உன் அன்புக்கு உரியவனுக்கு ஆபத்தில் உதவி செய்தவளுக்கு இப்போது அதுநன்றிக்கடன் கட்டியிருக்கிறது. நீ விரும்பினால் இப்போதே அதைக் கடையிலிருந்து திருப்பலாம்.''

''அவளுக்கு அது நன்றி. ஆனால் எனக்கு....?''

''சித்திரா! அவளை நான் என் தங்கைக்குச் சமமாக நினைக்கிறேன் சித்திரா! எனக்கு ஒரு தங்கையிருந்து அவள் இப்படிக் கஷ்டப்பட்டால் நீ உதவி செய்ய மாட்டாயா?''

'''தங்கையைப்போல' என்றால் அவள் தங்கையாகி விடமாட்டாள். நீங்கள் வேண்டுமானால் அப்படி நினைத்துக் கொண்டிருக்கலாம். நான் உங்களை நம்புகிறேன். அவளை நம்பவே முடியாது!''

''சித்திரா!''

''பெண்ணுக்குப் பெண் ஏமாற்றிக் கொள்ள முடியாது. அன்றைக்குக் கடற்கரையில் ஒரே நிமிஷத்தில் அவள் யார் என்பதைக் கண்டுகொண்டேன். அவள் உங்களை அண்ணா என்று நினைக்கவில்லை. உங்களுக்குப் பல உதவிகளை அவள் செய்ததாகச் சொல்கிறீர்களே, காரணமில்லாமலா செய்திருக்கிறாள்? அத்தான்! உங்களுக்கு ஒன்றுமே தெரியவில்லை!''

மளமளவென்று கண்ணீர் சிந்தினாள் சித்திரா. சிலை போல் உட்கார்ந்து விட்டான் முருகையன். 'ஒருவேளை சித்திரா கூறுவது உண்மையாக இருக்குமோ?'

முருகையனின் மனத்தில் அமைதி இல்லை. 'வழியனுப்பிய மறுநாளே அவள் நோய்ப் படுக்கையில் விழுந்திருக்கிறாள். சித்திராவுடன் நான் வாழப் போகும் முடிவைக் கண்டவுடன் அவளுக்கு அதிர்ச்சி ஏற்பட்டு, அதனால் நோய்வாய்ப்பட்டிருப்பாளோ?'

''அத்தான்! உங்களுக்குப் பெண்களைப் பற்றியே ஒன்றும் தெரியாது. அத்தான்!'' என்றாள் சித்திரா.

''உண்மைதான் சித்திரா! இனிமேல் நான் என்ன செய்ய வேண்டுமென்று சொல்: அதன்படி கேட்கிறேன்'' என்றான் முருகையன். (தொடரும்)

# ஒயர்மேன்கள் குளோஸ்ட்டர் கேபிள்களைத் தேர்ந்தெடுப்பது ஏன்?

குளோஸ்ட்டர் கேபிள்கள் பிரிட்டிஷ் ஸ்டாண்டர்டு ஸ்பெஸிபிகேஷன் நெ. 7 மற்றும் இந்தியன் ஸ்டாண்டர்டு ஸ்பெஸிபிகேஷன் நெ. 434க்கு முற்றிலும் சரியாகத் தயாரிக்கப்படுகின்றன.

உலகத்திலேயே கேபிள்கள் தயாரிப்பில் முன்னணியில் நிற்கும் லண்டன் **பிரிட்டிஷ் இன்ஸுலேடட் காலண்டர்ஸ் கேபிள்ஸ் லிமிடெட்**டின் தொழில் நுணுக்கக் கூட்டுறவுடன் **குளோஸ்ட்டர் கேபிள்கள்** தயாரிக்கப்படுகின்றன.

**குளோஸ்ட்டர் கேபிள்கள்** மிருதுவாக வளைந்து கொடுப்பதால் எளிதாகக் குழாய்களில் இழுக்கவும், மரச் சட்டங்களில் பதிய வைக்கவும் முடிகிறது.

**குளோஸ்ட்டர் கேபிள்கள்** அதிக சக்தியைத் தாங்குவதால் அதை உபயோகிப்பதன் மூலம் மின்சார சாதனங்களுக்குப் பூரண பாதுகாப்பு கிடைக்கிறது.

ஒவ்வொரு குளோஸ்ட்டர் கேபிள் ரீலும் தனித்தனியே பரிசோதிக்கப்பட்டு ஐ. எஸ். ஐ. சர்ட்டிபிகேட்டுடன் சீல் செய்யப்படுகிறது.

**உயர் தரத்துக்காக அளிக்கப்படும் உத்திரவாதம் இதுவே**

IS : 434










**போர்ட் குளோஸ்ட்டர் இண்டஸ்ட்ரீஸ் லிட்.**

கேபிள் டிவிஷன்

14, நேதாஜி சுபாஷ் ரோடு, கல்கத்தா-1

மானேஜிங் ஏஜன்டு கெட்டில்வெல் புல்லன் & கோ. லிட்.

சென்னை, ஆந்திரா மற்றும் கேரள ராஜ்யங்களுக்கு விற்பனை ஏஜன்டுகள்:

மெஸர்ஸ் கார்டன், வுட்ராப் & கோ. (மதராஸ்) லிமிடெட்

1/21 நார்த் பீச் ரோடு, சென்னை-1

# தன் வினை

கலாபாரதி

"கிழவி! ஏன் இப்படிக் கூச்சல் போட்டு ஊரைக் கூட்டறே? உன் பணத்தை எடுத்துக்கிட்டு யாராவது ஓடிப் போய்ட்டாங்களா? நான்தான் தரேன்னு சொன்னேனே?"

"இப்படியே அந்த வருசமாத்தான் சொல்லிக்கிட்டே வரே. எனக்குச் சமயத்துக்கு வேணுமின்னு தான் கேக்குறேன். கொடுத்தது கேட்டா அடுத்தது பகைன்னு சொல்லுவாங்களே. அது மெய்யாத்தான் இருக்கு..."

"அதிகப்படியா மேலே மேலே பேசிக்கிட்டுப் போறியே .... வேணுமின்னு கோர்ட்டிலே கேஸ் போட்டு வாங்கிக்கோ..."

"அடப் பாவி மகளே! கேஸா போடச் சொல்லறே. உங்கிட்டே கைநாட்டு, சீட்டு ஒண்ணும் வாங்கலே என்கிற தைரியந்தானே உனக்கு. தெய்வத்துக்கு அடுக்குமா இது? பேசறதைப் பார்த்தா பணமே என்னிடம் வாங்கலேயின்னு சத்தியம் பண்ணுவே போலிருக்கே. இன்னும் இரண்டு நாளிலே பணத்தைத் தரலே, என்னை மோசம் செய்ததற்கு உன் வீட்டு வாசலிலே மண்ணை வாரி இறைப்பேன்... உன் பிள்ளை குட்டிகள் நல்லா இருக்க வேணுமின்னா, என் பணத்தை உடனே திருப்பிக் கொடுத்து விடு. இனியும் தவணை சொல்லாதே. எனக்கு இரண்டு நாட்களாக உடம்பே நல்லாயில்லே. பசி, பட்டினி வேறு. உன் வீட்டு வாசலிலேயே நான் உயிரை விட்டு விடுவேன்...."



ராக்காயி தெருவில் கிடக்கும் சாணத்தை எடுத்துத் தட்டி வறட்டியாய் விற்றும், அந்தந்தக் காலங்களில் இயற்கை அளிக்கும் காய், கனிகளான கடலை, இலந்தைப் பழம், வெள்ளரிக் காய், கொடுக்காப்புளி இவைகளை யெல்லாம் பள்ளிக்கூட வாசலில் போட்டுக் கொண்டு விற்றும் வந்த பணத்தில் தான் ஒரே கட்டையின் ஜீவனத்துக்கான செலவுகள் போக ஏதேனும் மிஞ்சுவதைக் குருவி சூக்காம் சேர்த்தது போன்று உழைத்துச் சேர்த்தது அந்த ஐம்பது ரூபாய். அந்த ஐயாயிரம் நயா பைசாக்களும் அத்தனை ரூபாய்கள்போன்று மதிப்பு அந்தக் கிழவிக்கு. சேலை நல்லதொன்று வாங்கிக் கொள்ளக்கூட மனமில்லாமல் சேகரித்த அந்தத் தொகையை வழக்கமாக வறட்டி போட்டு வரும் வாடிக்கை வீட்டுக்காரியான அஞ்சலை,காலணா வட்டி போட்டுத் தருவதாக ஒரு சமயம் தைரியமாகப் பேசிக் கிழவியிடமிருந்து வாங்கிக் கொண்டாள். விளையாட்டுப் போல் ஐந்து வருஷங்களாகியும், கிழவிக்கு வட்டியோ, முதலில் ஒரு பகுதியோ வருவதாயில்லை. கிழவி நடைகளில் அஞ்சலையிடமும், அஞ்சலையின் புருஷனிடமும் சண்டையிட்டுக் கொண்டு போனது தான் மிச்சம். ஆனால் அஞ்சலை கிழவிக்கு ஏதாவது தேத் தண்ணீர், பலகாரம் என்று கொடுத்துச் சமாதானம் சொல்லி அனுப்பி விடுவாள்.

கிழவிக்கு இப்போதெல்லாம் தள்ளவில்லை. பலஹீனமும் சோர்வும் அதிகமாகிக் கொண்டே வந்தன. ஓடியாடி உடலுழைக்க உரமில்லாமல் ஓய்ந்து ஒடிந்து உட்கார்ந்து விட்டாள். உணவுக்குக்கூட வழியில்லாமல் ஓய்ந்த உடல் தேய்ந்து காய்ந்து மாய்ந்து கொண்டிருந்தும், கிழவி அன்று கத்தியதற்குக் காரணமில்லாமல் இல்லை. இயலாத காலத்துக்குத் தேவைப்படுமே என்ற எண்ணத்தில் சேர்த்த தொகையைக் கேட்கப் போனபோது தான் அஞ்சலையின் கணவன் மேற்சொன்னவாறு பேசினான். அன்று அவளுக்குக் கோபம் அளவுக்கு அதிகமாகவே பீறிட்டுக் கொண்டு வந்து விட்டது. தெருவே கூடும்படி கடுமையாகக் கத்தினாள்.

கிழவியின் பெருங் கூச்சலும், கணவனின் பேச்சும் அஞ்சலையை என்னவோ செய்தன. அஞ்சலைக்கு அவமானமாகவும் இருந்தது. 'கிழவியோ, பசி பீறிட்டதால் கத்துகிறாள். ஆனால் தங்களிடமோ கிழவிக்குத் திருப்பிக் கொடுக்கப் பணமில்லை. தங்களுக்கே பணம் உடனடியாகப் பலவித செலவுகளுக்குத் தேவையாயிருக்கும்போது, இப்போதுள்ள நெருக்கடியில் இன்னும் சில மாதங்களுக்குள் தான் எப்படிக் கிழவிக்குத் திருப்பிக் கொடுக்க முடியப் போகிறது? ஊ..ஹூம்....சாகப் போகிற கிழத்துக்கு இப்போது பணமில்லாவிட்டால் எங்கே கொள்ளை போகிறது...?' அஞ்சலையின் மூளை அபூர்வமாக வேலை செய்தது.

"கிழவி! .... நீ இப்போது இருக்கும் நிலையில் பணத்தைக் கொண்டு போனாலும், உன்னை அடித்துப் போட்டு விட்டு, கொள்ளையடித்துக் கொண்டு போய் விடுவானுங்க. காலம் கெட்டுக் கிடக்கிறது. நீ போகாமல் இங்கேயே நம்ம வீட்டிலேயே உன் பணம் கைக்குக் கிடைக்கிறவரைக்கும் சாப்பிட்டுக்



கொண்டு இரு. பலகாரம், சாப்பிட்டு தண்ணி. தேத் தண்ணி எல்லாம் வேளா வேளைக்குத்தறேன். இந்தா இந்தத் தேத்தண்ணியை முதலில் சாப்பிடு.. வந்த களைப்பு சற்றுத் தீரும். உடம்பு தேறவோ காய்ச்சலா இருந்தால் கஞ்சிக் கஷாயம் போட்டுத் தரேன். பாவம். ஏன் இந்தத் தள்ளாத வயசிலே இந்தத் துட்டுக்காக இப்படித் திண்டாடறே?''

தேத் தண்ணி'யைச் சுவைத்ததும் இருளிக்குக் காயகல்பம் சாப்பிட்டது போன்றதொரு புத்தெழுச்சி உண்டாயிற்று. காய்ந்து வரண்ட தொண்டையில் ஈரப்பற்று கசிந்தது.

அஞ்சலை சொன்னதற்காக ஒரு நாள் அங்கு தங்கி வேளா வேளைக்குச் சாப்பிட்டு வந்தாள் இருளி. அவள் சரீரம் இனியும் அங்கு தங்க இருப்புக் கொள்ளவில்லை.

''அம்மா, அஞ்சலை! நீ பணத்தைக் கொடுக்கிறபடி கொடு. நான் பகலுக்கு என் வீட்டுக்குப் போய்ச் சேருகிறேன்.....''

இருளிக்குச் சோறுபோட்டுக் கையில் அப்பம், இட்லி பலகாரங்களைக் கட்டிக் கொடுத்து எட்டணா நாணயம் மூன்றையும் கைச்செலவுக்கென்று கொடுத்தனுப்பினாள் அஞ்சலை. இருளி புறப்பட்டுச் சென்றாள்.

*

கொஞ்ச தூரம் நடந்துசென்ற இருளிக்கு தள்ளாமையால் நெடுந்தூரம் நடந்ததுபோல் களைப்பாக இருந்தது. ஆற்றங்கரையின் பாழ் மண்டபத்தில் சற்று உட்கார்ந்தாள். கண்ணை இருட்டிக் கொண்டு கிறுகிறுப்பாய் வந்தது...

அங்கே சில சிறுவர்கள் ஓடியாடி விளையாடிக் கொண்டிருந்தனர்: ''தம்பீ! இந்தா. இந்தக் குவளையில் கொஞ்சம் தண்ணி கொண்டு வாயேன்....''

''அடப் பாட்டீ! நீயா? ஊருக்குக் கிளம்பிட்டியா....''

'' ஆமாண்டா ராசா....''

சிறுவன் ஓடிப் போய் நீர் கொண்டு வந்து கொடுத்தான். இடையே இருளி தான் கொண்டு வந்த பலகாரப் பொட்டலத்தைப் பிரித்துச் சுவைத்துக் கொண்டிருந்தாள். அந்தச் சிறுவனுக்கும் ஓர் அப்பமும் இட்லியும் கொடுத்தனுப்பினாள்.

சற்று நேரத்துக்கெல்லாம் சிறுவனைச் சுற்றி ஒரே கூட்டம். அவன் உடம்பை உதறிக் கொண்டு கீழே சாய்ந்தான். கைகால்கள் இழுத்துக் கொண்டிருந்தன. கண்கள் சொருகியபடி இருந்தன. பேச்சு மூச்சில்லை...அவளையும் ஒடுங்கிக் கொண்டிருந்தது. கையிலேயும், தன் வாயிலேயும் தின்ற பொருள்களின் பகுதிகள் ஒட்டிக் கொண்டிருந்தன. தண்ணீர் கொடுத்துப் பார்த்தனர். போலீஸ், வைத்தியர் எல்லாரும் ஓடி வந்தனர். வைத்தியர் நாடியைப் பார்த்து உதட்டைப் பிதுக்கினார். சிறுவனின் உதடுகளில் நீலம் பாய்ந்து விட்டது. 'உணவில் விஷம்' என்று முடிவு அளிக்கப்பட்டது.

போலீஸ்காரர் அங்கிருந்த சிறுவர்களை விசாரித்து அவர்கள் மூலமறிந்து, அவர்களையும் அழைத்துக் கொண்டு பாழ் மண்டபத்தை நோக்கி ஓடினார். அங்கே இருளி மரணத்தோடு போராடிக் கொண்டிருந்தாள். எஞ்சிய உணவுக்குக் காக்கையும், நாயும் போட்டி போட்டுக் கொண்டு சாவுக்கும், வாழ்வுக்கும் இழுத்துக் கொண்டிருந்தன. இறுப் பிராணனும் வருகில் போகாமல் ஊசலாடும் இரு கின்போல் முன்னும் பின்னுமாய் இழுத்துக் கொண்டிருந்தது. போலீஸ்காரர் அருகைக் காகத்தான் காத்திருந்தாள் போலும்... அவளும் சிறுவன் போல் உடனே செத்திருந்தாள். தருமம், நியாயம், சத்தியம் என்பது நிலைநிறுத்தப் படாமலே அழிந்து பட்டுப் போயிடும்...

உண்மை என்ன, குற்றவாளி யார் என்று எல்லாமே மறைந்திருக்குமல்லவா? அந்த இடம், சமயம், சந்தர்ப்பத்தில்தான் இறைவன் 'இருக்கிறேன்' என்பதை நிலைநாட்டுகிறானோ?.....

இருளி புலம்பிக் கொண்டிருந்தாள். அரைகுறை நினைவுகள் மாறி மாறி வந்து போய்க் கொண்டிருந்தன. ''அஞ்சலை! என்னே மோசம் பண்ணி விட்டாயேடி. விஷம் வைத்துக் கொன்று விட்டாயேடி. ஐம்பது ரூபாய் காசுக்காக....உன் மகனுக்கே கூடக் கொடுத்திடலாமென்றிருந்தேனடி... கொஞ்சம் செலவுக்கு வாங்கிக் கொண்ட பிறகு மீதியை?''

''யாரும்மா, அஞ்சலை?'' என்று போலீஸ்காரர் கேட்டார்.

இருமலுக்கும், பொருமலுக்கும் இடையே சற்று நினைவோடு பேசும் போது அவள் சொன்னாள். ''யாதவத் தெரு அஞ்சலை தெரியாதா? முனுசாமி பெண்சாதி. ஐம்பது ரூபா தரணும். ஐந்து வருசம்....''

''இங்கு விளையாடிக் கொண்டிருந்த பையனுக்கு நீதானே பலகாரம் கொடுத்தே?''

''பலகாரமா? ஆமாம். அந்தப் புள்ளையா, அதோட அம்மா கட்டிக் கொடுத்த பலகாரம் தானே....''

''ஏ, இருளி! இதோ பாரு. கொஞ்சம் தண்ணி குடியேன்'' என்று போலீஸ்காரர் புரட்டினார். இருளி திமிர்ந்து போலீஸ்காரரை நோக்கி எழுவது போல் எழுந்து வாயைப் பிளந்தாள். வாயில் போன நீர் வழிந்தது. இருளி கீழே சாய்ந்தாள்.

''மூச்சு, பேச்சு எல்லாம் போச்சு. இருளி, சிறுவன் கதி இப்படியாச்சு'' என்று வந்தவர்கள் புலம்பியபடி நகர்ந்தனர்.

இருளியின் மரண வாக்குமூலத்தை எடுத்துக் கொண்டு போலீஸ்காரர் மேற்கொண்டு நடவடிக்கைகளுக்காகப் புறப்பட்டார்.

பலகாரத்தைக் கட்டிக் கொடுத்த அஞ்சலையின் இதயம் தேள் கொட்டும் மின்னல் போல் அடித்துக் கொண்டது. கொலை செய்யும் நெஞ்சமெல்லாம் என்ன தான் பப்பர பந்து

போன்ற மனச்சாட்சியை அமுக்கி வைத்துக் துணிகரமாகச் செய்தாலும், அது திமிறிக் கொண்டு மன அரங்கில் எகிறி எகிறிக் குதிக்கும் போது இதயம் அடித்துக்கொள்ளாமல் என்ன செய்யும்?

கிழவி அனாதைக் கட்டை. உற்றார், உறவினர், பிள்ளை குட்டி, உடன் பிறப்பு, சுற்றம், நட்பு என்று யாரும் இல்லாதவள். ஏனென்று கேட்க நாதியற்ற பிறவி. அவள் செத்தால் யார் கவலைப்படப் போகிறார்கள்? இறந்தாலும் அவள் வயோதிகத்தால் தான் இறந்ததாக நினைத்து அனாதைச் சவத்தை அடக்கம் செய்யப் போகிறார்கள்.

எப்படி இருந்தாலும் சாகும் வயது தான். இன்றோ, நாளையோ?



வாளூர் திரு ஆர். ராமசாமி முதலியார் தமது ஐம்பத்தி நான்காவது வயதில் இவ்வுலகை விட்டு மறைந்தார். இவர் பாடலீசுவரர் கோவில் தர்மகர்த்தாவாக இருந்து அருஞ்செயலாற்றியுள்ளார்.

அவள் இருக்க இருக்கத் தலைக்குத் தொல்லை தான். பணத்துக்காகப் பிடுங்கி எடுத்துக் கொண்டே இருப்பாள். கிழப் பிராணன், வியாதி வெக்கை, நோய் நொடி என்று அவதி – அல்லல்பட்டுப் போவதை விடச் சீக்கிரமே முடிவடைவது தான் சிறந்தது. அதற்கு வழி என்ன என்று யோசித்துச் செய்த முடிவைப்பற்றிய விளைவுகளை அஞ்சலை எண்ணிக் கொண்டிருந்தாள்.

அப்போது சிறுவர்கள், அவனுடைய மகனோடு விளையாடச் சென்ற நண்பர்கள் ஓடோடி வந்து நடந்ததைச் சொன்னார்கள். சொல்பவர்களே கதறினர், பதறினர்.

''ஆ! என் மகனு போய் விட்டான்!''

எதிர்பாராத இந்தத் தாக்குதலால் அஞ்சலை அதிர்ச்சியில் விழுந்து விட்டாள். ஏமாற்றம், தோல்வி, சோகம், எதிர்பாராத ஆபத்து எல்லாம் சேர்ந்து அவளை ஒன்றும் புரியாமல் அடித்து விட்டன. அருமை மகனை இழந்த அஞ்சலையின் கணவனுக்கே, அஞ்சலையின் சூழ்ச்சியும், சதியும் தெரியாது.

''பாவி! கிழவியைக் கொல்லப் போய் நம் குழந்தையைக் கொன்று விட்டாயேடி. இன்னும் தெய்வம் அழிந்து விடவில்லையடி. தன்வினை தன்னைச் சுடும், ஒட்டப்பம் வீட்டைச் சுடும் என்று சொன்னவங்க வாக்குப் பலிக்கப் போச்சே. கிழவிக்கு வைத்த விஷ அப்பம், உன் மகனுடைய உயிருக்கும் வைத்த உலையாய் விட்டதேடி.....''

புத்திர சோகம் தாளாது புலம்பினான், கதறினான், துடித்தான் முனுசாமி.

போலீஸ் வந்தது அஞ்சலைத் தம்பதிகளை நோக்கிக் கையில் விலங்குடன். 'விலங்கு' என்ற சொல்லே, மனித இனம் 'விலங்கு'ச் செயலில் ஈடுபடுவதைக் கண்டிக்கும்—கண்டிக்கும் தன்மையைக் குறிப்பதால்தான் வந்ததோ? விலங்கைக் கண்டு கலங்கினாள் அஞ்சலை. சதியில் பங்கு கொள்ளாத முனுசாமியையும் அஞ்சலையோடு போலீஸ் வானில் ஏற்றிக் கொண்டு சென்றனர் சட்டப் பாதுகாப்பாளர்களான போலீஸ்காரர்கள்.






## பொன் மணல்

வாசகர்களின் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டி விட்டுப் புத்தகத்தைக் கையிலெடுத்ததிலிருந்து அது முடியும் வரையில் கீழே வைக்க மனம் வராத முறையில் விறுவிறுப்பான கதைப் போக்குடன் அமையும் சிறுகதைகள் ஒரு ரகம்; சம்பவச் செறிவின்றிச் சிந்தனையைத் தூண்டி விட்டு மனதுக்குள்ளாகவே ஆழ்ந்து அனுபவிக்கக் கூடிய கதைகள் இன்னொரு ரகம். இந்நூலில் அடங்கியிருக்கும் கதைகள் இரண்டாவதாகக் கூறப்பட்ட ரகத்தைச் சேர்ந்தவை. ஒரு கதையில் மனித வாழ்க்கையின் ஆசாபாசங்கள் இழையோடினால் இன்னொரு கதையில் தத்துவ ஆராய்ச்சி கலந்து நிற்கிறது. ஒரு கதையில் உலக அனுபவம் அழகாக உருவாகி நின்றால் இன்னொரு கதையில் சொல்லும் பாணி மிகவும் அழகாக அமைந்து நம்மை ஈர்க்கிறது.

''கண்ணீர் பிச்சை'' மிக மிக உருக்கமான கதை. ''தாசில்தார் அப்துல் காதர்'' பன்முறையும் படித்துப் பார்க்க வேண்டிய அருமையான கதை. ''செய்தி'' மிகவும் சுவையான கதை. ''சூரியும் பதித்ததாம்'' என்ற கதை முடிக்க மாதிரியைப் பற்றிய நல்ல முடிவைக் கொண்ட கதை.

பத்தொன்பது கதைகளும் குன்றாத சுவையுடன் விளங்குவது பாராட்டுக்குரியது. கற்பனைத் திறனும், உண்மை நயமும் கொண்ட இக்கதைகள் எல்லாரும் படித்து இன்புற வேண்டியவை என்பதில் ஐயமில்லை.

ஆசிரியர்: எம். எஸ். கல்யாணசுந்தரம், ('முன்னணி') சௌராஷ்டிர நகர், சென்னை-24 விலை: ரூ. 2.00

## தமிழ் மறுமலர்ச்சி

இந்நூலில் பதினான்கு இலக்கிய ஆராய்ச்சிக் கட்டுரைகள் அடங்கியிருக்கின்றன. ஆசிரியரின் சிந்தனை வளம் ஒவ்வொரு கட்டுரையிலும் நன்கு வெளிப்படுகிறது. பல நூல்களிலிருந்து பல கருத்துக்களை எடுத்துப் புகுத்திக் கட்டுரைகளுக்கு விளக்கம் தர முற்பட்டிருப்பது வரவேற்கத்தக்கது. 'தமிழ் மறுமலர்ச்சி' என்ற முதல் கட்டுரையில் ஆசிரியர் வாசகர்களின் சிந்தனையைத் தூண்டி விட்டுச் சிந்திக்க வைக்கிறார். வீர மாமுனிவரைப் பற்றிய இரண்டு கட்டுரைகளும் தமிழ் வளர்த்த அப்பெரியாரைப் பற்றி அருமையாகக் கூறுகின்றன. ''காப்பியக் கவிஞன் கம்பன்'' என்ற கட்டுரை இந்நூலுக்கே அணியாக அமைந்துள்ளது.

ஆசிரியர்: பிரான்சிஸ் முராய்ஸ்; பிரசுரம்: அமுத நிலையம், தேனாம்பேட்டை, சென்னை 18 விலை: ரூ. 1.40.

## சுடர்

தொன்மையான மொழிகளிலே தமிழைப் போல் சொல்வளம் நிறைந்த மொழிகள் மிகக் குறைவு. இலக்கிய வளமும் சொல் வளமும் பெற்று ஏனைய மொழிகளுக்கெல்லாம் சிறந்து நிற்கும் தமிழைப் போற்றி வளர்த்த பெரியார்களுள் தமிழ்த் தாத்தா உ. வே. சாமிநாதய்யர் மிக முக்கியமானவர்.

பதினைந்து ஆண்டுகளாகப் பாரதத்தின் தலைநகரிலே தமிழ் மணம் பரப்பி வரும் தில்லித் தமிழ்ச் சங்கம் கடந்த பத்து ஆண்டுகளாக ஆண்டு தோறும் சுடர் என்னும் மலர் விளக்கை ஏற்றி ஒளி வீசச் செய்து வருகிறது. இவ்வருடத்திய மலர் தமிழ்த் தாத்தாவின் நினைவு மலராக வருகிறது. தமிழ்த் தாத்தாவைப் பற்றியும் தமிழ்த் தாத்தா தமிழுக்குச் செய்த சேவைகள் பற்றியும் அரிய பெரிய பல கட்டுரைகள் இம்மலரில் வெளியாகியுள்ளன. அய்யர் அவர்களோடு நெருங்கிப் பழகிய திரு கி. வா. ஜகந்நாதன், திரு பெ. நா. அப்புஸ்வாமி போன்றவர்கள் இம்மலருக்கு எழில் கூட்டியுள்ளார்கள். 'ஏடு தேடிய காலங்கள்' என்னும் தலைப்பில் தணிகைமணி அவர்கள், அய்யரவர்களின் சுவடி ஆராய்ச்சிகளைப் பற்றிக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ்த் தாத்தாவின் தமிழ்ப் பணியோடு, தற்காலத்திய பல ஆசிரியர்களின் கதை, கட்டுரை, கவிதைகளும் இம்மலரில் இடம் பெற்றுள்ளன.

'தமிழின் சொல் வளம்' என்ற கட்டுரையில் எந்த மொழிக்கும் இல்லாத சிறப்பைத் தமிழ் மொழி பெற்றிருக்கும் விந்தையைத் திரு கி. ஆ. பெ. விசுவநாதம் கூறி வியக்க வைக்கிறார். தமது ஓவியங்களின் மூலம் இறை பணி செய்து வரும் ஓவியமணி திரு சி. கொண்டையராஜுவின் கட்டுரையும் கருத்தைக் கவருவதாகும். இத்தகைய சிறந்த சுடரை அளித்த தில்லித் தமிழ்ச் சங்கத்தினர் பெரிதும் பாராட்டுக்குரியவர்கள்.

வெளியிட்டோர்: தில்லித் தமிழ்ச் சங்கம், தில்லி. விலை: முப்பது புதுக் காசு.

## அரசியல் மேதை ராஜாஜி

ராஜாஜியின் எண்பத்தி நான்காவது ஜயந்தியை ஒட்டி ரங்கூன் டல்லா பகுதியிலுள்ள தமிழ் இளைஞர் மன்றம் இச்சிறப்பு மலரை வெளியிட்டுள்ளது. திரு சா. கணேசன் உள்ளிட்ட பல அறிஞர்கள் விஷய தானம் செய்துள்ளனர். பர்மாவாழ் தமிழருக்கு ராஜாஜியிடம் உள்ள பக்திக்கும் ஈடுபாட்டுக்கும் இதுவே ஒரு சான்றாகக் கருதலாம்.

வெளியீடு: ராஜாஜி இளைஞர் மன்றம், தொந்தை ரோடு, டல்லா, ரங்கூன்; விலை குறிப்பிடவில்லை.



தங்க, வைர
நகைகளுக்கும்
வெள்ளிப்
பாத்திரங்களுக்கும்
நம்பிக்கையான
இடம்



## நட்வர்லால்
## கோவிந்த்ஜி ஜவேரி

அம்ருத்லால் மேன்ஷன்
லகம்ஸி நப்பு ரோடு,
மாதுங்கா பம்பாய்-19.
டெலிபோன் : 61726

எங்கள்
ஏர்கண்டிஷன் ஷோரூமிற்கு
விஜயம் செய்யுங்கள்

NG-75



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

உட்கொண்டால், உங்கள் இருமல்
உடனேயே அகலும்.

பெப்ஸ் வில்லைகளைச் சுவைத்து, குணமளிக்கும் ஆவி போன்ற அதன் சத்து வேதனையைக் குறைக்கவும், தொண்டைப் புண், ப்ராங்கைடிஸ், இருமல் மற்றும் ஜலதோஷத் தீர்க்கும் காரணமான கிருமிகளைக் கொல்ல உதவியளிப்பதற்கான வேலையைச் செய்வதை உணருங்கள். உடனடி நிவாரணமளிக்கவும் கிருமிகளை அகற்றவும் பெப்ஸ் உதவிபுரிகிறது.




பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.
எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்.

ஸோல் ஏஜண்டுகள் :
தாதா & கோ., 88, நைனியப்ப நாயக் தெரு, சென்னை-3

# வட்ட மேஜை



## அன்பே ஆரமுதே

சிறந்த கதை என்பதற்கு இலக்கணம், அதன் தெளிந்த நடையும், உயர்ந்த கருத்துக்களும். அதில் வரும் வெவ்வேறு பாத்திரங்களும் படிப்போர் உள்ளத்திலே ஒரு நிறைவை உண்டாக்கி, 'நீங்காமல் நினைவில் இருக்கும் வகை'யில் அமையவேண்டும். இந்தக் கூற்றுக்கும் மேலாக நின்று 'இதுதான் கதை' என்னுமளவுக்கு, எல்லோரையும் இன்பத்தில் ஆழ்த்தி வந்தது அன்பே ஆரமுதே! அனந்தசாமியும் ருக்குவும் பண்பின் சுடர்கள். சந்திராவும் டொக்கியும் அந்தச் சுடரொளியிலே உலகை கண்டவர்கள். கபடமற்ற காசிலிங்கம், அனந்தசாமியென்னும் பண்புருவின் பார்வையிலேயே அழுக்கு நீங்கி, நல்லவனாகிறான். வாய் பேசாமலேயே, காரியத்தைச் சாதிக்கும், அழுத்தமான மனிதர் கப்புசாமி. ஒவ்வொரு பாத்திரமும், தனித்தனியே, உயர்ந்து நின்று, கதையளவில் ஒன்றாகப் பிரகாசிக்கின்றன. கதையின் போக்குக்கே, ஒரு சிகரமாக அமைந்துவிட்டது அதன் முடிவு. அனந்தசாமியும், ருக்குவும் எங்கள் உள்ளத்தில் என்றும் வாழ்வார்கள். இத்தகைய ஓர் இன்பக் கதையை எங்களுக்கு அளித்த திரு ஜானகிராமன் நீடூழி வாழ வேண்டும்.

பெங்களூர்—9 எஸ். விஜயராகவன்
11—2—62

'அன்பே ஆரமுதே' ஒரு தெவிட்டாத காவியம். அதில் உள்ள ஒவ்வொருவரும் பேசும் பாத்திரங்கள். அவர்கள் சோகம், இன்பம், துடிப்பு எல்லாவற்றையும் நம் கண் முன்னே சினிமாக் காட்சி போல் படம் பிடித்துக் காட்டியுள்ளார் ஆசிரியர்.

பேராசிரியர் 'கல்கி'யின் 'தியாக பூமி' கடைசியாகச் சம்புசாஸ்திரி சொல்கிறார்: ''குழந்தே! உன் அப்பாவும் அம்மாவும் ஒன்று சேர்த்து விட்டார்கள். இனி அவர்களைப் பற்றிக் கவலை இல்லை. வா! நாம் பஜனைக்குப் போகலாம்'' என்று. சிவகாமியின் சபதத்தில், நரசிம்மவர்மன் கோவிலைத் தாண்டிச் செல்கிறார். அப்போது, 'தவப் பட்டாள் நங்கை தலைவன் தானே' என்ற அடி கேட்கிறது.

இந்த இரண்டு இடங்களிலும் நமக்கு எத்தனை துன்பமும் இன்பமும் ஏற்பட்டதோ அதே போன்று, 'அன்பே ஆரமுதே' நாவலைப் படித்து முடிக்கும் போதும் உண்டாயிற்று.

தாம்பரம் எஸ். ராகவன்
10-2-62

'அன்பே ஆரமுதே' கல்கியில் வெளிவந்துள்ள சிறந்த தொடர்களில் ஒன்றாகும். கதை உயர்ந்ததாகவும் ஒவ்வொரு வார்த்தையும் கருத்துள்ளதாகவும் இருந்தன. ருக்மிணி, அனந்தசாமி, டொக்கி ஆகியோர் இக்கதையின் சிறந்த பாத்திரங்கள்.

திருப்பத்தூர் அனந்தபத்மநாபன்
10-2-62

அஷ்டக் கிரகச் சேர்க்கையால் உலகம் அழிவுமையாய், சூன்யமாய்ப் போய் விடும் என்று ஆஸ்திகர்களும், பத்திரிகைகளும் கூறியபோது ஏற்படாத அச்சம், திடீர், அன்பே ஆரமுதே ''அடுத்த இதழில் முடியும்'' என்று நீங்கள் போட்ட போது எனக்கும், என்போன்ற தி. ஜா. ரசிகர்களுக்கும் ஏற்பட்டது. அது முடிந்து விட்டால் ஏற்படக் கூடிய சூன்யத்தை எண்ணி எண்ணி உயிர் அதிர்வது; அழகது எனலாம்.

திருப்பூர் பி. சின்னசாமி
11-2-62

தெவிட்டாத தேனாக இனித்த 'அன்பே ஆரமுதே' இவ்வளவு விரைவில் முடிந்துவிட்டதே என்று மிகுந்த வருத்தமாக இருக்கிறது.

அந்தக் கதை 'கல்கி'யில் முடிந்து விட்டாலும் எங்கள் நெஞ்சங்களில் முடியாது நிறைந்துள்ளது.

ருக்மிணி, அனந்தசாமியின் பண்பு மிகுந்த சீலவொழுக்கத்தையும், சந்திராவின் அமைதியையும், டொக்கியின் துறுதுறுப்பையும் ரங்கனின் ஆடம்பரங்களையும் எண்ணினால், நம் வாழ்க்கையில் நடந்த, நடக்கும் சம்பவங்களாகத் தோன்றுகின்றனவே தவிர, படித்த உணர்வே ஏற்படவில்லை. அனந்தசாமியின் தேய்ந்த செருப்பின் நடை காதில் ஒலித்துக் கொண்டே இருக்கிறது.

புதுக்கோட்டை பத்மாமணி
11-2-62

சென்ற நாற்பத்தைந்து வாரங்களாகக் கல்கியில் தொடர்ந்து வெளிவந்த 'அன்பே ஆரமுதே' எங்கள் யாவருக்கும் அழகுமான கருத்துக்களை அள்ளிக் கொடுத்துக் கொண்டிருந்தது. அனந்தசாமி எல்லாருக்கும் மருந்துப் பொட்டணங்களைக் கொடுத்தது போல் எங்களுக்கும் புதுப் புது உபதேசங்களைக் கொடுத்து வந்தார்.

மிகச் சாதாரண நடையில், கதை நெடுகிலும், சுவை குன்றாமல் எழுதி எங்களை மகிழ்வூட்டிய திரு ஜானகிராமனுக்கு எங்களது மனமொத்த நன்றிகள்.

புதுடில்லி குருநாதன்
10-2-62

'அன்பே ஆரமுதே' முடிவு சற்றும் எதிர்பாராதது. எனினும், ஓர் உயர்ந்த இலக்கிய முயற்சி; ஓரளவுக்குத் தி. ஜானகிராமனின் சாதனையும் கூடத்தான்!

அனந்தசாமி, ருக்கு, டொக்கி சிறப்பான படைப்புகள்; துணிச்சலான படைப்புகள் கூட! பாத்திரங்கள் உரையாடும் போது காணப்படும் நெருக்கமும் நெகிழ்ச்சியும், நடையின் நயமும் கூர்மையும் ஆசிரியரின் உயர்ந்த கலைச்சுவைக்குச் சான்று பகர்கின்றன.

திருப்பதி அ. நடராஜன்
10-2-62

# இப்படியும் ஒரு மாமியார்!

பத்மாவதி

"ஏன்டியம்மா நீலா! வேலை செய்து முகமெல்லாம் வாடி விட்டதே! நன்றாகத்தான் இருக்கிறது..... இப்படி உடலை வாட்டிக் கொள்ளலாமோ! நீ பெரிய இடத்துப் பெண். வேலை செய்து பழக்கமில்லாதவள். இதற்குத் தான் வேலைக்காரி வைத்துக் கொள் என்று சொன்னேன். கேட்டால் தானே? எல்லாக் காரியமும் செய்யப் பழகிக் கொள்ளுகிறேன் என்று சொல்லிவிட்டு இப்பொழுது கஷ்டப் படுகிறாய். எனக்குச் சகிக்கவில்லை. பணமில்லையா, காசில்லையா ஆள் வைத்து வேலை வாங்க? நாளைக்கே மீனுவிடம் சொல்லி அந்தச் சமையல்காரியை உடனே அனுப்பச் சொல்லுகிறேன். வா! இப்படி வந்து உட்கார்ந்து கொள். விசிறி போடுகிறேன். நாற்காலி மேலேயே உட்காரு. கீழே வேண்டாம்.. நன்றாக இருக்கிறது. என்னைப் பற்றிக் கவலைப் படாதே. நான் ஒன்றும் தப்பாக எண்ணிக் கொள்ள மாட்டேன். எனக்கு நாற்காலியில் உட்கார்ந்து பழக்கமில்லை. கீழே உட்கார்ந்தால் தான் நிம்மதி. உம்.... முகமெல்லாம் சோர்ந்து விட்டதே. அப்படியே உட்கார்ந்திரு. ஒரு நொடியில் காப்பி கலந்து கொண்டு வந்து தருகிறேன். சூடாகச் சாப்பிட்டால் கொஞ்சம் தெம்பாக இருக்கும்......

"உம்....உன்னைப் போல் மாட்டுப்பெண் கிடைக்கத் தவம் செய்திருக்க வேண்டும்...வீடு நிறைய எவ்வளவு சீர் செனத்தி கொண்டு வந்திருக்கிறாய். ஏழு தலைமுறையைக் காப்பாற்றும். உன் அப்பா அம்மாவாகட்டும்... எவ்வளவு தங்கமான மனிதர்கள்! சாதாரணக் குடும்பத்திலே சம்பந்தம் செய்து விட்டுத் துளிக்கூட கர்வமே படாமல் எவ்வளவு பணிவாக நடந்து கொள்ளுகிறார்கள்! பணத்தோடு பண்பும் சேர்ந்திருக்கு!

"மணிமூணடிக்கிறதே! ஏன் இன்னும் நீ தலையை வாரிக் கொள்ளவில்லே? வா...வா! இப்படி வந்து உட்காரு. ஒரு நிமிடத்தில் தலையை வாரிக் கட்டி, குண்டு மல்லிகை தொடுத்து வைத்திருக்கிறேன். சூட்டி விடுகிறேன். சிறுகள்...கணவன் ஆபீஸிலிருந்து வருவதற்கு முன்பு தலைவாரி, பூச் சூட்டி, அலங்காரமாக நிற்க வேண்டாமோ! ஐயய்யய்யோ.....என்ன நீலா இது!....தலை மயிரெல்லாம் சடை சடையாக இருக்கிறதே.... என்னைத்தான் உன் சொந்த அம்மா போல எண்ணிக் கொள் என்று சொல்லியிருக்கிறேனே! தினமும் என்னிடம் வந்தால் நான் சிக்கு எடுத்து வாரிப் பின்னிவிட மாட்டேனா! கலியாணமான புதிதில் தோகை போல எவ்வளவு மயிர் இருந்தது? பாதிக்கு மேல் உதிர்ந்து விட்டதே! இதை உடனே கவனிக்காதது என் தப்புதான். ஒரு வார்த்தை சொல்லியிருந்தாயானால் கரிசலாங்கண்ணி, பொன்னாங்கண்ணியை அரைத்துப் பிழிந்து....அரைத்து என்றதும் ஞாபகம் வருகிறது. இட்டிலிக்கு ஊறப் போட்டிருக்கிறேன் என்றுயே. நீ ஒன்றும் அரைக்க வேண்டாம்... நான் வந்து அரைத்து வைக்கிறேன்.

'கந்தர் வரட்டும் கேட்கிறேன். ஏன் உன்னை நேற்று வெளியில் அழைத்துப் போகவில்லை என்று ... நன்றாக இருக்கிறது! தினமும் தங்கையையும் அழைச்சுண்டு போறதுன்னு முடியுமா? அவளுக்குக் கல்யாணமானால் அவள் கணவன் அழைத்துப் போகிறான். சிறுகள் இந்த வயதில் நாலு இடம் சுற்றாமல் எப்பொழுது போவீர்கள்? இன்றைக்குக் கண்டிப்பாக அந்தப் புது சினிமாவுக்குப் போய் வா. நான் குழந்தையைப் பார்த்துக் கொள்ளுகிறேன்.

"ஆமாம்! நேற்று புடவைகள் எடுத்து வந்தானே, அதில் எதை எடுத்துக் கொள்ளப் போகிறாய் தீபாவளிக்கு? அந்த நூறு ரூபாய்ப் புடவையைத் திருப்பித் தந்து விடு. அந்தச் சிவப்பு ஜரி வாணம்...விலை 250 ரூபாய் போட்டிருக்கே. அதையே எடுத்துக் கொள். உன் நிறத்துக்கும் உயரத்துக்கும் எடுப்பாக இருக்கும். பணத்துக்கு என்ன பஞ்சம்? தயங்காமல் ஜரி வாணத்தையே எடுத்துக் கொள். யோசிக்காதே.



"ஆமாம்... ஏன் உன் அப்பாவும், அம்மாவும் அதற்குள் அவசரப்பட்டுக் கொண்டு ஊருக்குக் கிளம்பி விட்டார்கள்? உன் தங்கைதான் எவ்வளவு சமர்த்து! 'மாமி.. மாமி!' என்று கூப்பிட்டுக் கொண்டு சிரிக்கச் சிரிக்கப் பேசிச் சிட்டுப் போல வீடெல்லாம் வளைய வந்து கொண்டிருந்தாளே! இன்னும் ஒரு மாதம் எல்லோரும் இருந்து விட்டுப் போயிருந்தால் எனக்கும் பொழுது நன்றாகப் போயிருக்கும். மகாலக்ஷ்மி போல ... உன் அம்மாவைப் பார்த்தாலே மனசு நிறைந்து விடுகிறது. நீ அப்படியே உன் அம்மாவை உரித்துக் கொண்டு பிறந்திருக்கிறாய். உன்னை மருமகளாக அடைய ஏழு ஜன்மங்கள் தவம் செய்திருக்க வேண்டும்.

"இன்றைக்கு உன் கணவருக்காக என்ன டிபன் செய்துவைக்க உத்தேசித்திருக்கிறாய்? அதையெல்லாம் என்னிடம் சொல்லிவிடு. நீ சிரமப்பட வேண்டாம். நீ போமல் ரெஸ்ட் எடுத்துக்கொள். மைசூர்பாகு, வெங்காய பஜ்ஜி, சூடாகக் காப்பி ஜோரா பண்ணித்தரேன். நான் ஒரு நொடியில் எல்லாவற்றையும் செய்து தந்து விடுகிறேன். என்னிடம் கூட நீ சொல்லச் சங்கோசப் படுவானேன்? அதற்காக இப்படி உடம்பை நீ அலட்டிக் கொள்ளலாமோ? உனக்குச் செய்து கொடுக்காத இந்த உடம்பு வேறு என்னத்துக்கு இருக்கிறது? உன்னை உட்கார்த்தி வைத்துச் செய்து கொடுக்கணும்கிற நிலே எனக்கு எவ்வளவு ஆனந்தம் தெரியுமா?

"அடடா! உன்னிடம் ஒருவிஷயம் சொல்லணும் சொல்லணும் என்று ரொம்ப நாட்களா நினைச்சுண்டிருக்கேன். அதற்கு இன்றைக்குத் தான் சமயம் வாய்ச்சுது!

"ஆமாம்... நீ கேட்காவிட்டாலும் என் வெட்டுக் கல் அட்டிகையை உனக்குத்தான் தருவதென்று தீர்மானித்து விட்டேன். அது பழங்கால உசத்திச் செட்டு. இப்பொழுது தேடினாலும் கிடைக்காது. அதை வாங்க உறவுக்காரர்களெல்லாம் நான் நீ என்று போட்டி போடுகிறார்கள். எனக்குத்தான் வெளியில் விட இஷ்டமில்லை. உன் பிறந்தகத்தில் எவ்வளவோ வைர நகைகள் செய்திருந்தாலும், இது போல் வெட்டுக் கல் அட்டிகை செய்ய வில்லை. அதுவும் உன் தந்தக் கழுத்துக்கு இந்த அட்டிகை ரொம்பவும் பொருத்தமாக இருக்கும். மெருகு போட்டு விட்டால் பளபளப்பாகி விடும். அடி வெள்ளிக் கிழமை. வாங்கி உன் கழுத்தில் போட்டுக் கொள். உனக்கு இது கட்டியிருக்கிற மாதிரி பிடிக்கா விட்டால் பிரித்து புது 'டிசைனில்' கட்டி விடலாம். பணத்தைப் பற்றித்தான் கவலையில்லையே? இதற்கு ஜதையாக மாதனி போட்டுக் கொண்டிருப்பது போல் வெட்டுக் கல் வளையலும் செய்து விட்டால் உன் உருண்டைக் கைகளுக்கு எடுப்பாக இருக்கும். சிறு வயதில் விதம்விதமான நகைகள் போட்டுக் கொள்ளாமல் பின் எப்பொழுது போட்டுக் கொள்ளுவதாம்? இந்தா! அட்டிகையை இப்பொழுதே கழுத்தில் போட்டுக் கொள்.

"உம்.. என்ன எழுந்துவிட்டாய்? நேரமாகி விட்டதா? சரி, போய் வா. பணத்துக்கு அவசரமில்லே. நாளை நானே வந்து வாங்கிக் கொள்ளுகிறேன். உம், எனக்கும் வந்து வாய்த்திருக்கிறாளே ஒரு மாட்டுப் பெண். சுத்த உதவாக்கரை. அவள் சுற்றப் போய் விட்டாள். கொஞ்சம்கூட வெட்கமே இல்லாமல்! சகிம்மா நீயா! உன்னைப்போல வீட்டுக்கு லக்ஷ்மியாக எனக்கு ஒரு மாட்டுப் பெண் வாய்க்கக் கொடுத்து வைக்க வில்லையே? நீ போய் வா. உன்னை மருமகளாக அடைந்த என் சிநேகிதி விசாலம் கொடுத்து வைத்தவள்."

குறிப்பு:— ஒரு மாமியார், தன் பக்கத்து வீட்டுப் பணக்கார மருமகளின் தலையில் இல்லை, இல்லை; கழுத்தில் தன் பழைய வெட்டுக் கல் அட்டிகையைக் கட்டுவதற்காக நடத்திய சம்பாஷணையின் சுருக்கம்.

# பச்சை மனம்



''நாயனா நாயனோவ்!''

முத்தையன் தூங்கவில்லை. ஆனால் இரண்டு முறை இந்தக் கூப்பிடு குரல் எழுகிறவரை பேசாதிருந்து விட்டுப் பிறகு சாவதானமாகத் தலையைத் தூக்கி, ''இம்ம்....'' என்றவாறு எழுந்து உட்கார்ந்தான்.

''தூங்கிட்டியா நாயனா? பொழுது விடியப்போவுதே! புறப்படலியா?''

கலைந்த தலைக் கேசத்தின் அவிழ்ந்த கொண்டையிலிருந்து வாடிக் கருகிய மல்லிகைச் சரம் தோளில் சரிந்து தொங்க, புதுமணப் பொலிவு மங்கிய நிலையில், கையிலொரு காடா விளக்குடன் கதவோரம் வந்து நின்று கொண்டிருந்த தன் அருமை மகள் அபரஞ்சியைப் பட்டும் படாததுமாகத் திரும்பிப் பார்த்தான் முத்தையன். பிறகு, போர்த்தியிருந்த கனத்த கம்பிளியை மடித்துத் திண்ணை இறைவாணத்தில் செருகி வைத்து விட்டு, ''ம்..... இப்ப மணி என்ன இருக்கும்?'' என்றான் கரகரத்த குரலில்.

''ரெண்டாம் கோழி கூவிடுச்சே; மணி மூணுக்கு மேலே யிருக்கும் நாயனா!'' என்று குரலைத் தாழ்த்திச் சொன்ன அபரஞ்சி, அடுத்த திண்ணை மேல் நார்க் கட்டிலைப் போட்டுக் குறட்டை விட்டுத் தூங்கிக் கொண்டிருந்த தன் கணவன் குப்புத்துரையை நாணம் தேங்கிய ஓரக் கண்ணால் கவனித்தாள்.

''முதல் கோழி கூவின போதுகூட நான் முழுச்சிக்கிட்டுத்தான் இருந்தேன்...'' என்று ஒரு வறண்ட சிரிப்புடன் சொல்லி, எதிர்த் திண்ணையில் படுத்துறங்கும் மருமகப் பிள்ளையையும், வாசல் நிலையில் சாய்ந்து நிற்கும் மகளையும் மாறி மாறிப் பார்த்த முத்தையன், துண்டை உதறி முண்டாசு கட்டிக்கொண்டே, ''அப்ப சரி; பொறப்பட வேண்டியது தான்'' என்றவாறு கீழே இறங்கி வீட்டின் வலப் பக்க வாட்டிலிருந்த ஒரு சிறிய ஆட்டுக் கொட்டிலை நோக்கி நடந்தான்.

தன் அப்பனின் அந்தப் பதிலில் ஏதோ ஓர் அதிசயத்தைக் கண்டு விட்டவள் மாதிரி அவனையே வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்ற அபரஞ்சி, காடா விளக்கின் கரிப்புகை கண்ணில் படிந்து எரிச்சலெடுக்கவே, முன்றானையால் நீவிவிட்டுத் துடைத்துக்கொண்டு கதவை ஒருக்களித்துச் சாத்திவிட்டு உள்ளே சென்றாள்.

'மேம்ம்....மே!'

கொட்டிலில் கட்டிக் கிடந்த ஒரு வெள்ளாடு முத்தையனைக் கண்டதும் அசை போடுவதை நிறுத்தி விட்டு எழுந்து நின்று குரல் கொடுத்தது. விடியற் சாமத்துக் கருக்கல் இருட்டு விரவிக் கிடந்தாலும் அந்த வெள்ளாட்டின் கறுத்த உடம்பிலிருந்த அழகிய வெள்ளைப் பொட்டுக்கள் இலேசாகத் தெரியவே செய்தன.

''நான்தான் ராத்திரி முழுக்கத் தூங்காமல் இருந்தேன்னா, நீயும் முழிச்சுக்கிட்டுத்தான் இருக்கிறயா?'' என்று மெல்லச் சிரித்துக் கொண்டே வந்த முத்தையன் அந்த ஆட்டின் முதுகைப் பரிவுடன் தடவிக் கொடுத்தான்.

தாய் ஆட்டின் அருகில் முடங்கிச் சுருண்டு படுத்து வயிற்றில் முகத்தைப் புதைத்துத் தூங்கிக் கொண்டிருந்த இரண்டு குட்டி ஆடுகளில் ஒன்று, முத்தையனின் குரல் கேட்டு மெல்லத் தலைதூக்கிப் பார்த்துவிட்டு மீண்டும் வயிற்றுக்கடியில் முகத்தை மறைத்துக் கொண்டது. மற்றோர் ஆட்டுக்குட்டி அவனைப் பார்க்காமலே பின்னங்கால்களை நீட்டிச் சோம்பல் முறித்து விட்டு மறுபடியும் முடங்கித் தூங்க ஆரம்பித்தது.

''தூங்குங்க தூங்குங்க; நாளை இந்நேரம் கூடத் தூங்கிக்கிட்டுத்தான் இருப்பீங்க; ஆனா, அது வேற தூக்கம்!'' என்று அடைத்த குரலில் முணுமுணுத்த முத்தையன், மூலையில் கட்டியிருந்த பெரிய ஆட்டை அவிழ்த்து விடக்



ஜெகசிற்பியன்

குனிந்தான். அவனுடைய தோள் பட்டையை மோந்து பார்த்து ஒரு தும்மல் போட்ட ஆடு, 'மேம்....மே' என்று நீளக் குரலெடுத்துக் கத்தியது. நிசப்தம் செறிந்த அந்த விடியற்சாமத்து நேரத்தில் குழந்தையொன்று அலறி அழுவது போன்ற பிரமையை உண்டுபண்ணியது. கயிற்றின் முடிச்சை அவிழ்த்துக் கொண்டிருந்த முத்தையன் அதை அப்படியே விட்டு விட்டு நெஞ்சை அழுத்திப் பிடித்துக் கொண்டு நிமிர்ந்தான். அவன் உடல் மெல்ல நடுக்கமுற்றது. ''என்னம்மா, கறுப்பி! நீ இதுக்குள்ளாற அந்த விஷயத்தைப் புரிஞ்சுக்கிட்டியா?'' என்று தொண்டையடைக்கக் குழறியவாறு அதன் முகத்தை இரு கைகளாலும் தழுவி வருடினான்.

உறங்கிக்கொண்டிருந்த குட்டிகள் விழித்துக் கொண்டன. முத்தையன் தங்கள் அம்மாக்காரியை அவிழ்த்து விடப் போகிறான் என்றும், அவன்' மேயப் போவதற்குள் தமது வயிற்றை நிறைத்துக் கொள்ள வேண்டுமென்றும் எண்ணியோ என்னவோ அவ்விரு ஆட்டுக்குட்டிகளும் துள்ளியெழுந்து சன்னக் குரலில் கத்திக்கொண்டே கறுப்பியின் வயிற்றுக்கடியில்புகுந்து முன்னங்கால்களை மடக்கிப் போட்டு முழந்தாளிட்டுக் கொண்டு ஒன்றுடன் ஒன்று போட்டி போட்டவாறு மடியை முட்டி மோதிப் பால் குடிக்க ஆரம்பித்தன. அடேயப்பா! அவற்றுக்குத்தான் எவ்வளவு பசி! எத்தனை மகிழ்ச்சி! அந்தக் குட்டி ஆடுகளின் முரட்டுத்தனமான முட்டல் மோதல்களைப் பொறுமையோடு சகித்துக் கொண்டு அமைதியாக நின்று கொண்டிருந்தது பெரிய ஆடு.

இந்த அற்புதக் காட்சியைக் கண்ணிமைக்காமல் பார்த்துக் கொண்டு மரம் போல் நின்றிருந்த முத்தையன் ஏதோ ஒரு முடிவுக்கு



வந்தவனாய்ச் சட்டென்று திரும்பி, வீட்டின் புறக்கடைப் பக்கம் விரைந்தான்.

புறக்கடை தாழ்வாரத்தில் காடா விளக்கை வைத்துக் கொண்டு ஆட்டுரலில் மாவு அரைத்துக் கொண்டிருந்தாள் அபரஞ்சி. உள்ளே முத்தையனின் மனைவி பொன்னம்மா அடுப்பு மூட்டி ஏதோ பலகாரம் சுட்டுக் கொண்டிருக்கிறாள் என்பதற்கு அறிகுறியாகச் 'சொய்ங், சொய்ங்' என்ற எண்ணெய்ப் பொரியல் ஒலி கேட்டுக் கொண்டிருந்தது.

''அபரஞ்சி!''

பூரித்துச் சரியும் மா விழுதை வலக்கையால் மடித்து வழித்துத் தள்ளிக் கொண்டே உற்சாகச் சுறுசுறுப்புடன் இடக் கையால் ஆட்டுரல் குழவியைச் சுழற்றிக்கொண்டிருந்த அபரஞ்சி அதை அப்படியே நிறுத்திப் பிடித்தவாறு தலை நிமிர்ந்தாள்.

''அபரஞ்சி! இன்னைக்கே நீ ஊருக்குப் புறப்படணுமா?'' என்று அடைத்த குரலில் கேட்டான் முத்தையன்.

அபரஞ்சிக்கு ஒன்றும் புரியவில்லை. தன் தந்தையை வியப்புடன் உற்றுப் பார்த்த அவள், ''என்ன நாயனு, திடீர்னு இப்படி வந்து கேட்கிறே?'' என்றாள்.

''காரியமாத்தான் கேட்கிறேன் மகளே! அடுத்த புதன் கிழமை வாக்கிலே பயணம் கூட்டி அனுப்பறேனே!''

'அடுத்த புதன் கிழமையா? அதுக்கு இன்னும் எட்டு நாள் இருக்கே! அதுவரை 'அவர்' இருப்பாரா? நேத்திலிருந்து 'பொறப்படு, பொறப்படு'ன்னு அவர் துடிச்சிக்கிட்டு இருக்கிறாரே!''

சற்றே தயங்கிய முத்தையன் தன் மகளைப் பரிவுடன் நோக்கி, ''அப்போ மாப்பிள்ளை மட்டும் இன்னைக்கு ஊருக்குப் போகட்டும்; அடுத்த வாரம் நான் உன்னை அழைச்சுக்கிட்டுப் போய் விடறேன்...'' என்றான் தயவான குரலில்.

அபரஞ்சியின் முகம் சுருங்கியது. அவள் தலைகுனிந்து ஆட்டுரல் குழவியைச் சுழற்றிக் கொண்டே, ''அது எப்படி நாயனு முடியும்? அவரு அங்கே போயி தனியா இருப்பாரா? நானுமில்லே இங்கே ஒரு வாரம் ஒண்டியா கிடக்கணும்!'' என்று இழுத்தாள்.

திடுக்கிட்டவன் போல் பின்னுல் நகர்ந்த முத்தையன் தன் மகளை ஏறிட்டுப் பார்த்துத் தலையை மேலும் கீழுமாக ஆட்டிக் கொண்டான். பிறகு வெறுப்புடன் முகத்தைச் சுளித்துக் கொண்டு, ''சரி, சரி; நீயும் உன் புருசனும் இன்னைக்கே ஊருக்குப் புறப்படத் தயாராயிருங்க. நான் செங்கல்பட்டுக்குப் போய்ச் சல்தியா திரும்பி வந்துடறேன்'' என்றவாறு அங்கிருந்து சோர்வுடன் சென்று, ஆட்டை அவிழ்த்து ஓட்டிக் கொண்டு வெளியே நடந்தான். ஆட்டுக் குட்டிகள் இரண்டும் மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்தவாறு அவன் பின்னல் சென்றன.

பொழுது இன்னும் சரியாகப் புலரவில்லை. எங்கும் பூஞ்சை இருள் கவிந்தே இருந்தது. ஜானகிபுரம் என்னும் அந்தக் கிராமத்து எல்லையைக் கடந்து, ஏரிக்கரை ஓரமாயுள்ள இலுப்பைத் தோப்பினுள் புகுந்து வெளிப்பட்ட முத்தையன் தெற்கு - வடக்காக ஓடும் ரயில் பாதையின் குறுக்கே விழுந்து மேற்கு - கிழக்காகச் செல்லும் வண்டிப் பாட்டையில் ஏறின சமயம், அங்கிருந்த ஒரு லெவல் கிராஸிங் கதவு சாத்தப்படவே சற்றுத் தயங்கி நின்றான். அவனுடன் சேர்ந்து ஆடுகளும் நின்றன.

இருப்புப்பாதையின் இரு திசைத் தொலை தூரம் வரை தன் பார்வையை வீசிப் பார்த்தான். ரயில் வண்டி வருவதற்கான அறிகுறிகள் ஏதும் தென்படவில்லை. நாணல் மண்டிப்படிக்கப் பள்ளத்தை ஒட்டினாற்போலச் செல்லும் கொடி வழியில் இறங்கி நடந்தான். முத்தையன், ஜானகிபுரத்திலிருந்து செங்கல்பட்டுக்கு அந்த வண்டிப் பாட்டை வழியே போனால் ஐந்து மைல் தூரம்தான். இந்தக் கொடி வழியே சுற்றிக் கொண்டு போனாலோ அரை மைல் தூரம் அதிகமாகும். ஆனால் இதைத் தவிர இப்போது வேறு வழியில்லை. மேலும், காலை ஆறு மணிக்கெல்லாம் அவன் செங்கல்பட்டை அடைந்தாக வேண்டும்... பிறகு அங்கிருந்து எட்டு மணிக்குள் திரும்பி வந்து சேரவேண்டும்-பத்து மணி வண்டிக்குப் பயணமாகப் போகும் அபரஞ்சியும் அவள் கணவனும் அவனுடைய வருகைக்காகக் காத்திருப்பார்கள்!.....

கரியழுக்குப் படிந்த சேலை மாதிரி கறுத்துக் கிடந்த கீழ்த்திசை வானம் மெல்ல மெல்லச் சலவையாகிக் கொண்டிருந்தது. சரிந்துகொட்டிய கார்மேகக் குவியல்கள் போல் பனித்திரையால் மூடிக் கிடந்த குன்றுத் தொடர்களையே வெறித்துப் பார்த்தபடி நடந்து கொண்டிருந்தான் முத்தையன். இத்தனை காலையில் தங்களை மேய்ச்சலுக்கு ஓட்டிக் கொண்டு போகிறானே என்ற உற்சாகத்தில் ஆடுகளும் அவனுடன் சேர்ந்து வேக நடை போட்டன. தெற்கிலிருந்து வடக்கு நோக்கி வெகு வேகமாக ஓடி வந்த ஒரு ரயில் வண்டி பூமியை அதிரடித்துக் கொண்டு அவனைக் கடந்தது. அவ்வண்டி சென்றபோது ஏற்பட்ட அதிர்ச்சியாலும் இரைச்சலாலும் பயந்து மிரண்ட ஆடுகள் அங்குமிங்குமாகக் கலைந்து ஓடின. அவற்றைச் சமாதானப்படுத்தி ஒன்றுசேர்த்துப் பாதைக்குக் கொண்டு வருவதற்குள் அவனுக்குப் போதும் போதுமென்றாகி விட்டது.

வைகறையின் குளிர் காற்று சில்லென்று வீச ஆரம்பித்தது. கீழ்வான விளிம்பில் செவ்வொளி இழைந்தது. முத்தையன் ஆடுகளை ஓட்டிக் கொண்டு, செங்கழுநீர்ப் பூக்கள் சில்லென்று பூத்துக் கிடந்த திருமணி ஏரிக் கரையின் மேல் ஏறி நின்றான். அவனுடைய பார்வை அந்த ஏரிக்கு மேலண்டைப் பக்கமிருந்த வயல் வெளியை நோக்கிப் பாய்ந்தது. அங்கே சில நிலங்கள் அறுவடையாகிப் பொட்டலாகக் காட்சி யளித்தன. ஒரு சில வயல்களில்மட்டும் பயிர் பச்சைப் பசேலென வளர்ந்து மரகதப் பாயாய் விரிந்திருப்பது தெரிந்தது. அப்படி விளைச்சலாகி யிருக்கும் பயிர்களில் ஒரு பகுதி முத்தையனின் பொறுப்பில் இருப்பதுதான். அவ்வாறாயின் அந்த நிலம் அவனுக்குச் சொந்தமானதா? இல்லை. அந்த உரிமையாளர் செங்கல்பட்டில் இருக்கிறார். அவர் பெயர் சோமலிங்கம். அவருக்கு இந்த வட்டாரத்தில் முப்பது காணி நன்செயும், ஏழு காணி புன்செயும் இருக்கின்றன. அவற்றில் அவர் நேரிடையாக விவசாயம் செய்வதில்லை.

# நேர்த்தியான துணிகளுக்கு நேர்த்தியான TRAYONS நூல்களே சிறந்தவை



"டிரெயான்ஸ்" ரேயான் நூல்களில் நெய்த ஆடைகள் எல்லோராலும் புகழப்படுகிறது.

இந்தியாவில் முதல் முதலாக சிறந்த ரசாயன முறையில் தயாரிக்கப்பட்ட உன்னத நூல் "டிரெயான்ஸ்" ரேயான் நூல்கள். விலை மலிவு-நீண்ட கால உழைப்பு - பகட்டான உடைகளுக்கு ஏற்றது.

"டிரெயான்ஸ்" ரேயான் நூல்கள் 100, 120, 150, 300 டினேயர்களில் தயாரிக்கப்படுகின்றன.

RT

ஸ்டாக்கிஸ்டுகள் :

## ரேயான் டிரேடர்ஸ் பிரைவேட் லிமிடெட்

61, செம்புதாஸ் தெரு, சென்னை-1 தந்தி : "CELYARN"

போன் : 21641

கிளைகள் :

போன் : 253, தந்தி: "CELYARN" 68/416, மெயின் ரோடு, செவ்வாப்பேட்டை, சேலம்.

போன் : 2598, தந்தி: "CELYARN" 114/A, தெற்குமாசி வீதி, மதுரை.

போன் : 3441, தந்தி : "RAYONS" யுனைடெட் இந்தியா பில்டிங், அவனாசி ரோடு, கோவை.

RT-30-SA

திட்டத்தினால் நமக்கு என்ன பலன்

# நாட்டு மக்களுக்கெல்லாம் கல்வி



6 முதல் 11 வயது வரையில் உள்ள
சுமார் 5 கோடி குழந்தைகளுக்கு இலவச ஆரம்பக்
கல்வி. தொழில் நுட்பக் கல்விக்கும், உயர் கல்விக்கும்
அதிகமான வாய்ப்புகள். ஆசிரியர்களை பயிற்சிவிக்க
வசதிகள் விஸ்தரிப்பு. உபகாரச் சம்பளங்கள் அதிகரிப்பு.
இதுபோன்ற சிறந்த கல்வி வசதிகள்
உங்கள் குழந்தைகளுக்குக் கிடைக்கும்.

திட்டம் நிறைவேற உதவுங்கள்

**மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டம்** | **நாட்டினருக்கெல்லாம் நல் வாழ்வு**

அவருக்குச் செங்கல்பட்டில் வேறு தொழில்கள் இருந்தன. எனவே, தம் நிலங்களைக் குடி வாரத்துக்கு விட்டு விட்டிருந்தார். திருமணி கிராமத்திலும், ஞானபுரம் கிராமத்திலும் இருந்த குடியானவர்களில் ஆறு பேர் அவற்றைக் குத்தகைக்கு எடுத்துப் பயிர் செய்து வந்தனர். அவர்களில் முத்தையனும் ஒருவன். அவன் ஐந்து காணி நன்செயும் இரண்டு காணி புன்செயும் வாரத்துக்கு எடுத்து ஒழுங்காகவும் நேர்மையாகவும் விவசாயம் செய்து ஏதோ ஒரு திருப்தியான வாழ்க்கையைத் தள்ளிக் கொண்டு வருகிறான். இது இன்று நேற்று ஏற்பட்ட தொடர்பல்ல: இரண்டு தலைமுறைகளாகத் தொடர்ந்து வருவது.

ஒரு நீண்ட பெருமூச்சு விட்ட முத்தையன், குன்றுத் தொடரை ஒட்டினாற் போலிருந்த வேடி வெலிங்டன் லெப்பர் செட்டில்மெண்ட் ஆஸ்பத்திரியின் வேலியோரக் கொடிப்பாதையில் இறங்கி நடக்கலானான்.

புலர்ந்து வரும் பொழுதில் பச்சைப் பசுமையைக் கண்ட ஆடுகள் தம் ஆவலை அடக்க மாட்டாமல் அங்குமிங்குமாகப் பாய்ந்தன. அவற்றை மேய்ச்சலுக்கு விடாமல் ஓட்டிச் செல்வது சிரமம் என்று உணர்ந்த அவன், பெரிய ஆட்டைக் கட்டிப் பிடித்துத் தோளில் தூக்கிப் போட்டுக் கொண்டு மேலே நடக்க ஆரம்பித்தான். ஐம்பது வயதைக் கடந்து விட்டிருந்த அவனுக்கு அந்தக் கொழுத்துப் பருத்த ஆட்டைத் தூக்கிக் கொண்டு நடப்பது ஒரு பெரிய பாரமாகவே தோன்றவில்லை. இது என்ன புதிய அனுபவமா? சின்னஞ் சிறு குட்டியிலிருந்து அவன் தோளில் கிடந்தே வளர்ந்த ஆடாயிற்றே அது? இரண்டு மாதக் குட்டியாய் இருந்தபோதே தாயை விட்டுப் பிரிய நேர்ந்த அதை அவன் எத்தனை கண்ணும் கருத்துமாகப் பாசப் பரிவோடு வளர்த்தான்! ஒருசமயம் அது குட்டிப் பருவத்திலிருந்த போது அதோ தெரியும் குன்றின் ஒரு பெரிய பாறை மேலிருந்து கீழே விழுந்து முன்னங்கால் ஒன்றை ஒடித்துக் கொண்டு விட்டது. அப்படி ஒடிந்து போன கால் சொஸ்தமாகும் வரை அதைத் தூக்கி வைத்திருந்தே மேய்ச்சல் காட்டிப் போஷித்ததை அத்தனை சீக்கிரம் மறந்து விட முடியுமா? இந்த ஆட்டின் தாய் ஆடு கூட அவனால் வளர்க்கப்பட்டுப் பெரிதாகிப் போனதுதான். ஆனால், அதை அவன் பணம் போட்டு வாங்கவில்லை

நிலங்களை வாரத்துக்கு எடுப்பது போல், குட்டிப் பருவத்திலிருக்கும் ஓர் ஆட்டை ஓட்டிக் கொண்டு வளர்த்துப் பெரிதாக்கி அது குட்டி போட்டதும் அந்தக் குட்டிகளில் ஒன்றை வார ஈடாக எடுத்துக் கொண்டு, தாய் ஆட்டையும் மீதக் குட்டியையும் சேர்த்துச் சொந்தக்காரரிடம் ஒப்படைத்து விடுவது வழக்கம். ஸ்ரீமான் சோமலிங்கம் இம்மாதிரி ஆடுகளை வாரத்துக்கு விட்டுப் பெருக்கிப் பிறகு அவற்றைக் கசாப்புக்காரரிடம் விற்றுப் பணமாக்கிக் கொள்வதை ஓர் உப தொழிலாக நடத்தி வந்தார். அவரது வீட்டுப் பெண்களோ நல்ல ஜாதிக் கோழிகளை வாரத்துக்கு விட்டுச் 'சிறுவாணம்' சேர்த்தனர். முதலில் ஒரு சொற்பத் தொகையை முதலீடாகச் செய்து விட்டால் போதும்: பிறகு அது வட்டிக்கு மேல் வட்டியாக விரிந்து குட்டி


"உங்க தொலைபேசியில் பேசலாமா?"
"பேசித் தொலை ஐயா!"

யாகவும் குஞ்சாகவும் பல்கிப் பணமாகப் பரிணமித்து விடும்.

இத்தகைய வார முறையில் ஈடாகக் கிடைத்த ஆடுதான் இப்போது இரண்டு குட்டிகளுக்குத் தாயாகி அவன் தோளில் சவாரி செய்து கொண்டிருக்கிறது:...

முத்தையனுக்கு மூச்சுத் தட்டியது. ஆனால் அது அந்த ஆட்டைத் தூக்கி வருவதால் ஏற்பட்ட மூச்சுத் திணறல் என்று சொல்ல முடியாது. தன் எஜமானனுக்குச் சிரமம் கொடுக்கிறோமே என்ற பரிவு உணர்ச்சியாலோ அல்லது தன்னை மேய்ச்சலுக்கு விடாமல் தூக்கிச் செல்கிறானே என்ற கோபத்தாலோ அவன் தோளை விட்டுக் கீழே குதிக்க முரண்டு பண்ணியது ஆடு. முத்தையனோ அதை இறக்கி விடாமல் அதன் கழுத்தை அன்புடன் வருடிக் கொண்டே தள்ளாடித் தள்ளாடி நடந்து கொண்டிருந்தான்.

பசுமை போர்த்த மரஞ்செடி கொடிகளையும், பின்னால் வரும் தன் குட்டிகளையும் மாறி மாறிப் பார்த்துக் கத்த ஆரம்பித்தது பெரிய ஆடு. ஆனால் அந்தக் குட்டிகளோ, தாய் ஆட்டின் பரிதாபக் கத்தலைக் கொஞ்சமும் சட்டை செய்யாமல் முத்தையனையும் பின் தொடராமல் பாதையை விட்டு அப்படியும் இப்படியுமாக ஓடி மேய்ச்சலிடத் தொடங்கின. ஏதோ யோசனையில் நடந்து கொண்டிருந்த முத்தையன் சட்டென்று நின்று திரும்பிப் பார்த்தான் பின்னால் தங்கிவிட்ட குட்டிகள் சாவதானமாக மேய்ந்து கொண்டிருந்தன. அவன் தன் தோள் மேல் இருந்த ஆட்டைக் கீழே இறக்கி விட்டான். உடனே அது மகிழ்ச்சியுடன் துள்ளிக் குதித்து ஒரு பசும்புதரை நோக்கிப் பாய்ந்தது.

மெல்லச் சிரித்துக் கொண்ட முத்தையன், அந்த ஆடுகள் ஓடியாடி மேயும் அழகிய காட்சியைத் தன்னை மறந்து நின்று பார்த்துக் கொண்டிருந்தான். அவசர ஆவலோடு

மேயும் அவற்றை விரட்டிப் பிடித்து இழுத்துக் கொண்டு போக அவன் மனம் இடம் தரவில்லை. ''மேயட்டும், மேயட்டும்! இன்றைக்கு மட்டும்தானே மேயப் போறதுகள்!'' என்று தனக்குள் முனகிக் கொண்டான். உடனே அவன் முகத்தில் அரும்பியிருந்த புன்னகை மறைந்தது. வேதனையுடன் பெருமூச்சு விட்டவாறு கிழக்கு வானத்தைத் திரும்பிப் பார்த்தான். தொலை தூரத்திலிருந்த இரண்டு குன்றுகளின் கணவாயிலிருந்து காலை இளஞ் சூரியனின் செங்கதிர்கள் விசிறி வட்டமாக மேலெழும்பிப் பரவிக் கொண்டிருந்தன. ''அடடே! நேரம் ஓடிக்கிட்டே இருக்கே!'' என்றவாறு பரபரப்புடன் விரைந்து போய், புதரில் தழைகளை விட்டுக் கொண்டிருந்த இரண்டு ஆட்டுக் குட்டிகளையும் பலவந்தமாகப் பிடித்துத் தூக்கித் தன்னிரு தோள்களிலும் போட்டுக் கொண்டு வேகமாக நடக்கலானான். இன்னொரு பக்கம் மேய்ந்து கொண்டிருந்த பெரிய ஆட்டை அவன் விரட்டவும் இல்லை; தன்னுடன் வரும்படி கூப்பிடவும் இல்லை. ஆனால், அந்த ஆடோ, தன் குட்டிகளைத் தூக்கிச் செல்வதைப் பார்த்ததும், மேய்வதை விட்டுவிட்டுக் கத்திக் கொண்டே அவன் பின்னால் ஓடியது. இப்போது அதன் கண்களில் ஆட்டுக்குட்டிகளைத் தவிர வேறெந்தப் பச்சைக் கொடிகளோ செடிகளோ தட்டுப்படவே இல்லை!

''அப்படி வா, வழிக்கு!'' என்று முணுமுணுத்தவாறு மேலே நடந்தான் முத்தையன். தாய் ஆட்டைத் தூக்கிக் கொண்டு நடந்தபோது குட்டிகள் அவனைப் பின் தொடராததையும், பிறகு குட்டிகளைத் தூக்கிக் கொண்டதும் அந்தத் தாய் ஆடு அலறிக் கொண்டு பின்னால் ஓடி வருவதையும் எண்ணிப் பார்த்து நகைத்துக் கொண்ட அவனுக்கு ஒரு பழைய சம்பவம் நினைவில் வந்து உதைத்தது.

அபரஞ்சி அப்போது ஒன்றரை வயதுக் குழந்தையாக இருந்தாள். முத்தையனுக்கும் அவன் மனைவி பொன்னம்மாளுக்கும் ஏதோ நகை வாங்கின விஷயத்தில் சச்சரவு ஏற்பட்டு அவளை நன்றாக அடித்துப் புடைத்துவிட்டான். பொன்னம்மாள் தன் குழந்தையைத் தூக்கிக் கொண்டு தாய் வீட்டுக்குப் போய் விட்டாள். ஒருவாரம் கழித்துக் கோபம் தணிந்த முத்தையன் மனைவியை அழைத்து வரச் சென்றான். ஆனால் அவளோ அவனுடன் வரப் பிடிவாதமாக மறுத்து விட்டாள். எப்படியெப்படியோ சமாதானப் படுத்தியும் அவள் வீம்பை மாற்ற முடியவில்லை. கடைசியில் முத்தையனுக்கு ஒரு யுக்தி தோன்றியது. தூளியில் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டு விட்டான் அவன். பொன்னம்மா பதறிப் போனாள். தன் அப்பன் ஆத்தாளிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் கணவன் பின்னால் ஓடி வந்து விட்டாள்!....

இந்தச் சம்பவத்தை எண்ணிப் பார்த்த முத்தையனின் நெஞ்சிலிருந்து வேதனை செறிந்த பெருமூச்சொன்று பிறந்தது. 'ம்.... பெத்த மனம் பித்து; பிள்ளை மனம் கல்லுன்னு சொல்லுவாங்களே. அது சரிதான். இல்லேன்னு அந்தப் பொண்ணு அப்படிப் பிடிவாதமா போகுமா? அவரு அங்கே தனியாகக் கிடந்து கஷ்டப் படுவாராம்; அதனாலே இன்னைக்கே அவனோட புறப்பட்டுப் போகணுமாம்! நேத்து வந்தவன் பேரிலே அத்தனை கரிசனம்!' என்று வெறுப்புடன் முணுமுணுத்துக் கொண்டான்.

சட்டென்று ஏதோ நினைத்துக் கொண்டவனாய் நடையைத் தளர்த்தி நின்றான். 'ஆமாம். கண்ணுமணியான ஒரு மாசத்துக்குள்ளாறவே அப்பனையும் ஆத்தாளையும் மறந்துவிட்டுப் புருஷன் பின்னாலே ஓடிப் போகத் துடிக்கிற அந்தப் பொண்ணுக்காக, இந்த என் அருமை ஆடுகளை யெல்லாம் எதுக்காக இழக்கணும்? பேசாமல் வீட்டுக்குத் திரும்பி ஓட்டிக்கிட்டுப் போயிடலாமா....?''

முருகையன் ஒரு வறண்ட சிரிப்புச் சிரித்தான். 'சே! பெத்த மகளின் மனம் கோணாமல் அவளைச் சந்தோசமா புருஷன் வீட்டுக்கு அனுப்பி வைக்க வேண்டியது என் கடமையல்லவா?' — தயங்கி நின்றவன் விருட்டென்று மேலே நடக்கலானான். அவனைப் பின் தொடர்ந்து ஓடியது பெரிய ஆடு.

இந்த ஆடுகளை அவன் எங்கே ஓட்டிக் கொண்டு போகிறான்? அப்படி ஓட்டிச் செல்வதிலே அவனுக்கு ஏன் இத்தனை ஆயாசமும் தயக்கமும் மனக்லேசமும் ஏற்பட்டிருக்கின்றன?

இரண்டு மாதங்களுக்கு முன்பு அபரஞ்சியின் கல்யாணம் நிச்சயமாகியது. ஆனால் முத்தையனின் கையில் அப்போது பணமில்லை. அறுவடையாக ஒரு மாதம் இருந்தது. மிராசுதார் சோமலிங்கத்திடம் போய், வாரசடாக நெல் அளக்கும் போது தன் பங்குப் பகுதியை

யும் சேர்த்து அளந்து விடுவதாகச் சொல்லி இருநூறு ரூபாய் கடனாகக் கேட்டான். அவன் கேட்ட தொகையில் பாதியைக் கொடுத்து அனுப்பினர் சோமலிங்கம். அவருக்கு எத்தனையோ பிக்கல், பிடுங்கல்கள்!

பற்றாக்குறைப் பணத்துக்கு என்ன செய்வது என்று குழம்பித் தவித்தான் முத்தையன். தன் சக வாரதாரர்களிடம் ஐந்தும் பத்துமாகக் கடன் வாங்கிச் சேர்த்துப் பார்த்தும் அது ஐம்பது ரூபாய்க்கு மேல் தேறவில்லை. அவன் படும் அல்லாடலைக் கண்ட பொன்னம்மா ஓர் அருமையான யோசனை சொன்னாள். வார ஈடாகக் கிடைத்த தங்கள் ஆட்டை விற்று விடலாமே என்னும் யோசனைதான் அது. மகளின் கல்யாணம் நல்லபடியாக முடிய வேண்டும் என்ற கவலை அவனுக்கு. ஆனால், முத்தையன் அந்த யோசனையை ஏற்க மறுத்து விட்டான். "அபரஞ்சியைப் போல இந்த ஆட்டையும் ஒரு பிள்ளை மாதிரி பாவிக்க வளர்த்துட்டேன். இதை வித்துப் போடும் சங்கதியை என் காதிலேயே போடாதே!" என்று கண்டிப்பாகச் சொல்லி விட்டான்.




"நம்ம பொண்ணையும் ஒருத்தனிடம் விக்கத்தானே போறோம்?" என்று எதிர்க் கேள்வி தொடுத்தாள் பொன்னம்மா.

"அது சரிதான். ஆனா, அவளை ஒருத்தனிடம் வாழறதுக்காக விக்கிறோம்; இந்த ஆட்டை வித்தா அது வாழப் போகாது; சாகத்தான் போகும்!" என்று சீறினான் முத்தையன்.

இதனால் கணவன் மனைவியிடையே பூசலும் புகைச்சலும் கிளம்பின. முத்தையன் அதையெல்லாம் சட்டை செய்யவில்லை. கல்யாணமான பின் மருவுன்னை வரும் போது மாப்பிள்ளைக்குச் செய்ய வேண்டியதைச் செய்து தருவதாகச் சம்பந்தி வீட்டாரிடம் வாக்களித்து, தன் கையிலிருந்த சொற்ப பணத்தைக் கொண்டு சிக்கனமாகக் காரியத்தை நடத்தி முடித்தான். அப்போது நிறைசினையாய் இருந்த இந்த ஆடு, அபரஞ்சியின் கல்யாண தினத்தன்று இரண்டு குட்டிகளுக்குத் தாயாகியது!

முத்தையன் தன் குத்தகை நிலங்களில் சற்று முன்பின்னாக நடவு போட்டிருந்ததால் அந்தப் போகத்தில் மூன்று காணியில் மட்டுமே அறுவடை செய்ய முடிந்தது. மீதமுள்ள இரண்டு காணி அறுவடையை ஒரு மாதத்துக்குத் தள்ளிப்போட வேண்டியதாயிற்று. முதல் அறுவடையில் கண்டு முதலான நெல்லைக் கடனுக்கும் வார சட்டுக்குமாக அளந்து விட்டு, மிச்சம் மீதியானதில் ஐந்து, பத்துக் கடன்களைக் கொடுத்து அடைத்து விட்டு வெறுங்கையோடு திரும்பினான்.

இந்தச் சமயம் பார்த்துத்தான் மாப்பிள்ளையும் பெண்ணும் மருவுன்னை வந்து சேர்ந்தனர். முத்தையன் பாடு திண்டாட்டமாகியது. சம்பந்தி வீட்டாருக்கு வாக்களித்தபடி மாப்பிள்ளைக்குச் செய்ய வேண்டியதைச் செய்து, வண்டிச் சத்தத்துக்கும் பணம் கொடுத்து அனுப்பியாக வேண்டுமே!..... கேட்காத இடமெல்லாம் கடன் கேட்டுப் பார்த்தும் காலணாக் காசு பெயரவில்லை. வரும்போதே காலில் தீயைக் கட்டிக் கொண்டு வந்தவன் போல் 'போக வேண்டும், போக வேண்டும்' என்று துடிக்கிறான் மாப்பிள்ளை. பெண்ணும் அவனுடன் சேர்ந்து பதைக்கிறாள். அடுத்த இரண்டு காணி விளைச்சல் அறுவடையாக இன்னும் ஒரு வாரமே இருக்கிறது. ஆனால், அதுவரை பொறுக்க அவர்களால் முடியவில்லை. தாயார்க்காரியும் அவர்களுடன் சேர்ந்து தாளம் போடுகிறாள்.

பாவம், முத்தையன் என்ன செய்வான்? அவனுக்குள்ள ஒரே வழி, இந்த ஆடுகளை விற்பதைத் தவிர வேறில்லை. அந்த முடிவுக்குத்தான் அவன் வலுக்கட்டாயமாக வர வேண்டியவனானான். அம்முடிவை நிச்சயித்துக் கொண்ட போது அவன் அடைந்த வேதனை இருக்கிறதே, அதைச் சொல்லி முடியாது. 'ஐயோ, கடவுளே! ஒரு கண்ணுக்கு வெண்ணெயும் இன்னொரு கண்ணுக்குச் சுண்ணாம்பும் தடவிக்கும்படியான நிலையிலே என்னைத் திண்டாட வைச்சுட்டியே!' என்று அவனது நெஞ்சின் ஓலம் இன்னமும் ஓயவில்லை.

நேற்று மாலை செங்கல்பட்டுக்குப் போய் ஒரு கசாப்புக் கடை சாயபுவைப் பார்த்து, மூன்று ஆடுகளையும் சேர்த்து ஐம்பது ரூபாய்க்கு விலை பேசி முடித்து, மறுநாள் காலை ஓட்டிக்கொண்டு வருவதாகச் சொல்லி விட்டுத் திரும்பினான் முத்தையன் என்பதை

விட, 'திரும்பி வந்து விழுந்தான்' என்று தான் சொல்ல வேண்டும். அப்போதிருந்து அவன் யாரிடமும் பேசவில்லை; எதுவும் சாப்பிடவில்லை; இரவெல்லாம் ஒரு பொட்டுத் தூக்கமும் தூங்கவில்லை. அதே நிலையில்தான், இதோ ஆடுகளை ஓட்டிக்கொண்டு நடக்கிறான்!

''மேம்ம்....மே!''

திடுக்கிட்டவன் போல் நின்றான் முத்தையன். செங்கல்பட்டின் பிரதான சாலையோன்றில் ஏறி நிற்பதை இப்போதுதான் அவனும் உணர முடிந்தது. அந்தச் சாலையில் செல்லும் வாகனங்களைக் கண்டு மிரண்ட ஆடு கத்திக் கொண்டே அவனருகில் ஓடி வந்தது.

சாலையோரமாயிருந்த ஓர் ஆலமரத்தடியில் போய் ஆடுகளை மடக்கி நிறுத்திக்கொண்டு நிமிர்ந்து பார்த்தான். அந்தக் கசாப்புக் கடை அதோ, எதிர் வரிசையில் இருப்பது தெரிகிறது. அதற்கப்பால் ஏழெட்டு வீடுகள் தள்ளி மிராசுதார் சோமலிங்கத்தின் பங்களா இருந்தது. தலையைத் தாங்கிப் பிடித்த வண்ணம் மரத்தடியில் உட்கார்ந்திருந்த முத்தையன் அந்தக் கசாப்புக் கடையையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான்.

பசியால் வாடிச் சோர்ந்திருந்த குட்டிகள், தம் தாடையின் கீழே தொங்கும் அலுாகளாள் தங்கள் குலுங்கி ஆட, தாயின் மடியை ஆவேசமாக முட்டி மோதிப் பால் குடிக்க ஆரம்பித்தன. பெரிய ஆடு கட்டாந் தரையை மோந்து பார்த்து விட்டு முத்தையனின் முகத்தைப் பரிதாபமாக ஏறிட்டு நோக்கியது. அவன் எழுந்து போய் ஆலமரத்தின் இலைக் கொத்துக்கள் இரண்டை ஒடித்துக் கொண்டு வந்து அதன் முகத்துக்கெதிரே நீட்டினான். தனக்கு அது வேண்டாமென்பது போல் கழுத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டது ஆடு. அவன் தன்னை என்ன செய்ய இங்கே அழைத்து வந்திருக்கிறான் என்பதை அது புரிந்துகொண்டு விட்டதோ என்னவோ!

மெல்லச் சிரித்தான் முத்தையன், ''என்னம்மா, கறுப்பி! என் மேலே கோபமா?'' என்று கொஞ்சலாகக் கேட்டுக்கொண்டே ஆட்டின் முகத்தை இரு கைகளாலும் தழுவித் தனக்கு நேரே வைத்துக் கொண்டு அதன் கண்களை உற்று நோக்கினான்.

ஐயோ, அந்த நீள்வட்ட வடிவமான மரவரிணக் கண்களில்தான் என்ன சோகம்! எவ்வளவு கவலை! சிங்கத்தின் கண்களில் கம்பீரத்தையும், புலியின் கண்களில் குரூரத்தையும், மானின் கண்களில் மருட்சியையும், நாயின் கண்களில் குறுகுறுப்பையும், காக்கையின் கண்களில் வஞ்சகத்தையும், புறாவின் கண்களில் அறியாமையையும் பொருத்தி வைத்த இறைவன், சாதுப் பிராணியினமான ஆட்டின் கண்களில் மட்டும் ஓர் ஆழ்ந்த நிரந்தர சோகத்தையல்லவா அப்பி வைத்திருக்கிறான்! இதயமுள்ள ஒவ்வொருவரும் இந்த ஏலாத் தன்மை வாய்ந்த பிராணியின் மீது இரக்கம் காட்ட வேண்டும் என்பதைச் சொல்லாமல் சொல்லி அறிவுறுத்தத்தான் இத்தகைய ஆழ்ந்த அவலத்தை அதன் கண்களில் நிறைத்து வைத்திருக்கிறானோ?

சட்டென்று ஒரு சிலிர்ப்புச் சிலிர்த்துக் கொண்டு நிமிர்ந்த முத்தையன், ''முடியாது! முடியவே முடியாது!'' என்று உள்ளடங்கிய

ஆவேசச் செருமலுடன் முணுமுணுத்துக் கொண்டே விரைந்து போய் இரண்டு ஆட்டுக் குட்டிகளையும் தூக்கித் தோள் மீது போட்டுக் கொண்டு, அந்தக் கசாப்புக் கடையைத் திரும்பிப் பார்க்காமலே, மிராசுதார் சோமலிங்கத்தின் வீட்டை நோக்கி நடந்தான்.

**"யா**ரு, முத்தையனா?" என்று கேட்டவாறு வெளியே வந்தார் சோமலிங்கம்.

"கும்பிடுறேனுங்க!" என்று வணங்கிய முத்தையன் கையைக் கட்டிக் கூனிக் குறுகிக் கொண்டு வாசற்படியோரமாக நின்றான்.

"திருமணி அறுவடை எப்போடா?" என்று விசாரித்தார் சோமலிங்கம்.

"அடுத்த வாரம் பண்ணிடலாம்னு இருக்கிறேனுங்க!" என்று தலைகுனிந்தபடி சொன்னான் முத்தையன்.

சற்று மௌனத்துக்குப் பின், "ஆமா! இன்னிக்கு என்ன விசேஷம்?" என்று புன்னகையுடன் வினவினார் மிராசுதார்.

"ஒண்ணுமில்லிங்க! சும்மா, ஐயாவைப் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்!..."

"வேலையில்லாமல் சும்மா வருகிற பேர்வழி இல்லையே நீ! விஷயத்தைச் சொல்லுடா?"

"வந்து....இன்னிக்கு என்னோட மகளைப் பயணம் பண்ணிப் புருசனோட அனுப்பி வைக்கணுமுங்க. கையிலே செல்லாக்காக இல்லிங்க. ஐயா பெரிய மனசு பண்ணி இல்லேன்னும ஐம்பது ரூபா கொடுத்து உதவி பண்ணணுமுங்க. திருமணி அறுப்பிலே இந்தப் பணத்துக்கு என்பங்கு நெல்லை அளந்துடறேனுங்க."

"இவ்வளவுதானே? கொடுத்தாப்போச்சு!" என்று சாதாரணமாகச் சொன்ன சோமலிங்கம் தம் கணக்குப் பிள்ளையைக் கூப்பிட்டு, முத்தையனுக்கு ஐம்பது ரூபாய் கொடுத்தனுப்பும்படி உத்தரவிட்டு விட்டு, அன்றைய தினப் பத்திரிகையைப் படிப்பதில் முனைந்தார்.

பணத்தைப் பெற்றுக் கொண்ட முத்தையன், தன் பின்னால் வந்து நின்றிருந்த ஆடுகளை ஓட்டிக் கொண்டு மிராசுதார் வீட்டின் புறக்கடையை நோக்கி நடந்தான்.

இதைக் கண்டு வியப்புற்று சோமலிங்கம், "என்னடா, முத்தையா! அந்த ஆடுகளையெல்லாம் எங்கே ஓட்டிக்கிட்டுப் போறே?" என்று கேட்டார்.

தயங்கி நின்ற முத்தையன் தலை நிமிராமலே "இதுகளை இங்கேயே விட்டுட்டுப் போகலாம்னு கொண்டு வந்திருக்கிறேனுங்க!" என்றான் தணிந்த குரலில்.

மிராசுதாருக்கு ஒன்றும் புரியவில்லை. "உன்னோட ஆடுகள் தானே?" என்று வினவினார்.

"ஆமாங்க. ஐயாகிட்டேயிருந்து வாரமா கிடைச்சதுங்க."

"பின்னே எதுக்கு இங்கே ஓட்டிக்கிட்டு வந்திருக்கிறே?"

"என்கிட்டே இதுகள் இருக்க வேண்டாம் என்று நினைச்சு ஓட்டியாந்துட்டேனுங்க! ஐயா வீட்டுலே விட்டுட்டா இன்னும் கொஞ்ச நாட்களுக்கு இதுகள் உசிரா யிருந்துட்டுப் போகும்!" என்றான் முத்தையன்.

"அப்போ, இந்த ஆடுகளுக்கும் சேர்த்துப் பணம் கேட்கறயா?"

"இல்லிங்க, எசமான்! சொந்தப் புள்ளையை வித்துப் போட்டுப் பணமாக்க எந்தத் தகப்பனும் துணிய மாட்டானுங்க!" என்று தொண்டை கம்மக் கூறிக்கொண்டே, புறக்கடைப் பக்கம் போய் அங்கிருந்த மற்ற ஆடுகளுடன் தன் ஆடுகளையும் விட்டு விட்டு விர்ரென்று வெளியே நடந்தான் முத்தையன்.

அவனுடைய பேச்சையும் செயலையும் புரிந்து கொள்ள முடியாமல் பிரமித்து நின்றார் சோமலிங்கம்.

சாலையில் இறங்கி வேகமாக நடந்து கொண்டிருந்தவன் பின்னாலிருந்து "மேம்ம்....மே" என்ற குரல் எழுவதைக் கேட்டுச் சட்டென்று திரும்பினான். அந்தப் பெரிய ஆடும் அதன் குட்டிகளும் அவனை நோக்கி அலங்க மலங்க ஓடி வந்து கொண்டிருந்தன!

தயங்கி நின்ற முத்தையன் மெல்லச் சிரித்தவாறு, "என்னம்மா, கறுப்பி! எதுக்கு என் பின்னாலே ஓடி வாரே? இனிமே நீயும் உன் பிள்ளைகளும் இந்த மிராச வீட்டிலேதான் இருக்கணும். அப்படி இருந்தாத்தான் இன்னும் கொஞ்ச நாளுக்காச்சும் நீங்க மூணு பேரும் உசிரோடிருப்பீங்க. ஏன்னு, மிராசுதார் என்னைப் போலப் பஞ்சப் பரதேசியில்லே!" என்று கொஞ்சலாகக் கூறிக் கொண்டே ஆட்டின் கழுத்தை அணைத்து அதன் நெற்றியில் முத்தமிட்டான். பிறகு அவற்றைப் பலவந்தமாக ஓட்டிக்கொண்டு போய்ச் சோமலிங்கத்தின் பங்களா காம்பவுண்டுக்குள் விட்டுக் கதவை இழுத்துச் சாத்தி விட்டுத் திரும்பிப் பார்க்காமல் நடக்கலானான். அவனது பஞ்சடைந்த கண்களிலிருந்து இரு சொட்டுக் கண்ணீர் கசிந்து கன்னக் குழியில் இறங்கியது.

அதே சமயம், எதிரே, மூட்டை முடிச்சுகளோடு ஊருக்குப் பயணமாகித் தன் கணவனுடன் வந்து கொண்டிருந்தாள் அபரஞ்சி! பிறந்த வீட்டை விட்டுப் புகுந்த வீட்டுக்குப் போவதில்தான் அவளுக்கு எத்தனை மகிழ்ச்சி!

ஒரு மாதம் ஓடி மறைந்தது.

தன் மகள் அபரஞ்சியைப் போய்ப் பார்த்து விட்டு வருவதற்காக, பட்சண பலகாரங்களுடன் ஊருக்குப் புறப்படத் தயாரானாள் பொன்னம்மா.

வாசலில் முத்தையன், பச்சைப் பசேலென்ற கொடுக்காப்புளித் தழைகளை ஒரு பெரிய சுமையாகக் கட்டுவதில் முனைந்திருந்தான். அவன் பக்கத்தில் இலுப்பைப் பூக்களும் தேங்காய்களுமாகச் சேர்த்து முடிந்த மூட்டையொன்று இருந்தது.

"உனக்குத்தான் உடம்பு சரியில்லேன்னு சொல்லிப்பிட்டே! அப்போ, நானாச்சும் போயிட்டு வரட்டுமா?" என்றவாறு மூட்டை முடிச்சுகளுடன் வெளியே வந்த பொன்னம்மா கண்ணைக் கசக்கிக் கொண்டே ஊருக்குக் கிளம்பிச் சென்றாள்.

அவள் போவதைச் சற்று நேரம் அமைதியாகப் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த முத்தையன், நீண்டதொரு பெருமூச்சு விட்டவனாய் எழுந்து, பச்சைத் தழைச் சுமையைத் தூக்கித் தலை மேல் வைத்துக் கொண்டு, இலுப்பைப் பூ மூட்டையைக் கட்கத்தில் இடுக்கியவாறு, மிராசுதார் சோமலிங்கத்தின் வீட்டை நோக்கி நடக்கலானான்!

---

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

# மிகச்சிறந்தது!




வீட்டிற்கும்
—ஹோட்டலுக்கும்

## ப்ரூக் பாண்ட்

## ஸ்பெஷல் ஹோட்டல் ப்ளெண்ட்

டஸ்ட் தேயிலையே

- ★ எப்பொழுதுமே உங்களுக்கென்று புதியதாக தோட்டத்திலிருந்து வருகிறது.
- ★ மிகத் திறமையுடன் கலவை செய்திருப்பதால் இனிமை மிக்க நறுமணம் கொடுக்கிறது.
- ★ லட்சக் கணக்கான மக்கள் அருந்தி ஆனந்தம் அடைவது.

மூன்று அளவுகளில் கிடைக்கிறது
500 கிராம், 100 கிராம்,
50 கிராம்

JWT 88 387

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon